# பித்ரு
# யக்ஞம்

Compiled by:

**V.SRINIVASAN**

Trustee - Secratary

Hindu Dharma Paripalana Trust

**HINDU DHARMA PARIPALANA TRUST**

**(Regd.)**

No.9, I MAIN ROAD, BESANT NAGAR,

CHENNAI - 600 090. PHONE: 24915544.

முதற் பதிப்பு : பிப்ரவரி 2003



விலை : ரூ. 50.00



மேலட்டை : பத்மவாசன்

தயாரிப்பு : மதி நிலையம், 4 (39), தணிகாசலம் சாலை,
பிருந்தாவன் அபார்ட்மென்ட்ஸ், தி.நகர்,
சென்னை-17. ✆: 24311838

அச்சாக்கம் : மணி ஆப்செட், சென்னை-600005.

# முன்னுரை

இது ஒரு விளக்க நூல் அல்ல; சம்பிரதாயமான முறையில் விளக்கங்களைத் தரும் வழிகாட்டியும் அல்ல! பின் என்னதான் இது?

நம்மைப் பற்றி நமக்குத் தெரிய வேண்டிய நூல். நம்முடைய நல்வாழ்விற்காக, நமது குடும்பத்தின் நன்மைக்காக, பித்ருக்களை வழிபடும் முறையைச் சொல்லித் தரும் நூல். மனித வாழ்க்கை முடிந்த பின், தந்தையை பித்ருவாக உயர்த்தி அனுப்பி வைக்கும் வரை செய்யப்பட வேண்டிய சம்ஸ்காரங்கள் இதில் விளக்கிச் சொல்லப்பட்டிருக்கின்றன. அவற்றின் பின்னணியாக உள்ள தத்துவங்கள் விளக்கப்பட்டிருக்கின்றன.

அவற்றைச் செய்ய வேண்டிய முறைப்படி செய்தால், செய்யும் கர்த்தாவிற்கும், அவரது குடும்பத்துக்கும் பல நன்மைகள் கிடைக்கும். முறைப்படி செய்யாவிட்டாலோ, செய்யத் தவறினாலோ பாவங்கள் சம்பவித்து கேடுகள் நேரும். ஆகவே இவற்றை விளக்கமாகத் தெரிந்து கொள்ள வேண்டியது நம் ஒவ்வொருவருக்கும் மிக அவசியமானது.

தகனம் முடிந்த பிறகு, பத்தாவது நாள் விரிவாக சம்ஸ்காரங்களைத் தொடங்கும் வரையில், வேறு காரியங்களில் ஈடுபட கர்த்தாவுக்கு அனுமதி இல்லை. வேறு புத்தகங்களிலும் மனம் ஈடுபடாது. அந்த சமயத்தில், நிறைய நேரமும் அவகாசமும் இருக்கும் போது, பொறுமையுடன் நிதானமாகப் படிக்க வேண்டிய புத்தகம் இது.

உயிர் பிரியும் தருணம் முதல், பன்னிரண்டு நாட்கள் வரையில் செய்ய வேண்டிய கர்மாக்களின் நெறியையும் பதின்மூன்றாவது நாள் சுபகாரியங்களுடன் நிறைவு செய்ய வேண்டிய நியதியையும் இது விளக்குகிறது. இது தவிர அனுபந்தத்தில் விவரமாகவும் விளக்கமாகவும் இதன் தொடர்பான பல விஷயங்களும் அளிக்கப் படுகின்றன. கயா சிரார்த்தம் செய்வதன் தத்துவமும் அளிக்கப்பட்டுள்ளது.

இந்த விஷயங்கள் அனைத்தும் இது பற்றி வெளியான பல்வேறு நூல்களிலிருந்தும் தொகுக்கப் பட்டவை. இவை எல்லாமே சாஸ்திர அடிப்படையில் அமைந்த கோட்பாடுகள். தனிப்பட்ட முறையில் எந்த நூலாசிரியரும் அளித்தது அல்ல.

ஆகையால் இந்த முயற்சி இவற்றைத் தொகுத்து அளிக்கவும், பின்பற்ற வேண்டிய முறைகளை விளக்கி வழிகாட்டவும் அமைந்த ஒன்றாகும். இந்த நன்முயற்சியில் எங்களுக்குத் துணை புரிந்து பல்வேறு விளக்கங்களையும் தொகுத்து வடிவமைத்துத் தந்த எழுத்தாளர் எஸ்.லட்சுமி சுப்பிரமணியத்துக்கு எமது நன்றி.

இந்த நூலைத் தொகுப்பதில் தஞ்சை வெண்ணாற்றங்கரை, ரிடையர்டு தாசில்தார், கோம்பூர் கே.ஆர்.கிருஷ்ணசுவாமி அவர்கள் சேகரித்து வைத்திருந்த பல குறிப்புகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. அவருக்கு எங்கள் நன்றி.

இந்த நூல் உருவாக்கும் பணியில் இந்து தர்மப்படி சம்ஸ்காரங்களைச் செய்வதன் முக்கியத்துவம் பற்றி எடுத்துரைத்து வழிகாட்டியவர், முன்னாள் சம்ஸ்கிருதக் கல்லூரி முதல்வர், டாக்டர் கே.வி.சேஷாத்ரிநாதன் அவர்கள். அவருக்கு எங்கள் நன்றி.

இந்த இறுதிக் கிரியை சடங்குகள் முறைப்படி செய்யப்படுவது எப்படி குடும்பத்தாருக்கும் சமூகத்துக்கும் பல நன்மைகளை அளிக்கும் என்பது பற்றி எடுத்துக் கூறிச் சத்யநாராயண தீர்த்தம் அமைப்பைக் கால்கோள் விழா நடத்தித் தொடங்க ஆசியளித்த மகான் ஸ்ரீரங்கம் ஸ்ரீமத் ஆண்டவன் ஸ்ரீரங்க ராமானுஜ மஹாதேசிகன் சுவாமிகள் பாதசரணங்களுக்கு எங்களது வணக்கங்களைச் சமர்ப்பிக்கிறோம்.

பித்ருக்களுக்குரிய காரியங்களை முறைப்படி எல்லோரும் செய்து எல்லாவிதமான நன்மைகளையும் அடைய வேண்டும் என்ற பிரார்த்தனையுடன் இந்த நூலைச் சமர்ப்பிக்கிறோம்.

**வி.ஸ்ரீநிவாசன்**

அறங்காவலர் - செயலர்
இந்து தர்ம பரிபாலன டிரஸ்ட்
பெஸன்ட் நகர், சென்னை-90.

# பொருளடக்கம்

# 1. அபரக்கிரியைகள் - ஒரு விளக்கம்

ஒரு மனிதன் கர்ப்பத்தில் உதயமாவதிலிருந்து, உயிர் நீங்கிய பின் வேதமந்திரம் கூறி அக்னியுடன் சேர்ப்பது வரையில் பல்வேறு ஸம்ஸ்காரங்களை ஏற்க வேண்டி உள்ளது.

'பஸ்மாந்தம் சரீரம்' - இவ்வுடலின் ஸம்ஸ்காரம் சாம்பலாவது வரையிலும் என்று வேதம் கூறுகிறது.

'நிஷேகாதி ஸ்மசானோந்தோ மந்த்ரை ரஸ்யோதிதோ விதி' - கர்ப்பாதானம் முதல் அந்த்யேஷ்டிவரை சம்ஸ்கார கர்மம் விதிக்கப்பட்டுள்ளது என்று மனுஸ்மிருதியிலும் சொல்லப்பட்டுள்ளது.

முடிவில் உயிருக்குத் துணையாகச் செல்வது நல்ல காரியங்களைச் செய்வதன் பலனே என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. மேலும் அப்படிப் பிரிந்து செல்லும் உயிரை முறைப்படி மந்திரங்களைக் கூறி, உரிய சம்ஸ்காரங்களைச் செய்து அனுப்பி வைப்பதே, நல்ல முறையில் கடைத்தேறத் துணை புரியும் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

மனிதனுக்கு இறுதிச் சடங்குகள் ஒரு முக்கிய சம்ஸ்காரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இதனால் மரித்த ஜீவன் மறுபடியும் நல்ல கதியை அடைவதோடு, மறு பிறவி ஏற்பட்டாலும் நல்ல பிறவியை அடையும் என்று கூறப்பட்டிருக்கிறது. ஆகையால் மகன் தனது பெற்றோர் களுக்கு உரிய முறையில் இவற்றைச் சிரத்தையுடன் செய்ய வேண்டியது அவசியம்.

ஒருவர் உயிர் உடலிலிருந்து பிரியும் தருணத்தில் தொடங்கும் இந்தக் காரியங்களும், மந்திரங்களைச் சொல்ல வேண்டிய முறையும், செய்யப்பட வேண்டிய கர்மாக்களும், முறைப்படி அளிக்கப்பட வேண்டிய தானங்களும், தொடர்ந்து சுபஸ்வீகாரம் (13ம் நாள்) வரை கடைப்பிடிக்கப்பட வேண்டிய விதிகளும், உபயோகத்துக்குத் தேவையான திரவியங்களும், இந்த நூலில் குறிப்பிடப் பட்டுள்ளன.

இப்புத்தகத்தில் ஒருவர் மரண காலத்திலும், மரணம் அடைந்த பின் பதின்மூன்றாவது நாள் வரை செய்ய வேண்டிய கிரியைகள் முறைப்படி விளக்கப்பட்டிருக் கின்றன. மரண காலத்தில் பிராயச்சித்தம், கர்ணமந்திர ஜபம் மரணத்துக்குப் பின் பித்ரு மேதஸம்ஸ்காரம், ஸஞ்சயனம் உதகதானம், தசாஹவிதி, ஏகோதிஷ்டம், ஸ்மிண்டீகரணம், சுபஸ்வீகாரம் முதலிய முறைகள் மந்திரங்களுடனும் பிரயோ கங்களுடனும் பெரியோர்களால் நமக்கு அளிக்கப்பட்டிருக் கின்றன. அவற்றைச் சுருக்கமாக எடுத்துச் சொல்லி, முறைப் படி காரியங்களைச் செய்ய உதவுவதே இந்த நூலின் நோக்கம்.

''மறைந்த நமது முன்னோர்களான பித்ருக்களைப் பூஜிப்பதால், அவர்கள் மன நிறைவையும் திருப்தியையும் அடைகிறார்கள். அவ்விதம் அவர்கள் திருப்தி அடைவதால் ஏற்படும் நற்பலன்களைப் பித்ருதேவதைகள் நமக்கு அளிக்கின்றன. அந்த நற்பலன்கள் நமக்கு நோய் வரும்போது தக்க மருந்தாகவும், பற்றாக்குறை ஏற்படும்போது கவசமாக வும், துன்பம் ஏற்படும்போது துணையாகவும், எந்தெந்த சந்தர்ப்பங்களில் எவ்விதம் நமக்குத் தேவைப்படுகிறதோ அவ்விதமாகவும், தக்க தருணத்தில் நம்மை வந்தடைந்து நற்பலன்களை அளிக்கின்றன.''

என்று காஞ்சி மஹாஸ்வாமிகள் கூறி இருக்கிறார்.

குடும்பத்துக்கும் நமக்கும் என்றென்றும் கவசமாக இருந்து துணை புரியக்கூடிய இந்தக் கர்மாக்களை முறைப்படி தெரிந்துகொண்டு, புரிந்துகொண்டு செய்வதே முறை. அதற்கு இந்த நூல் ஒரு வழிகாட்டியாக அமைகிறது.

முறைப்படி ஒவ்வொரு நிலையிலும் செய்ய வேண்டியவற்றை இப்போது விளக்குவோம்.

●

# உயிர் பிரியும்போது செய்யப்பட வேண்டியவை

ஒருவர் இறந்தவுடன் அவருடைய தலையைத் தெற்குப் பக்கமாக வைத்து, கால் கட்டை விரல் இரண்டையும், கை கட்டை விரல் இரண்டையும் ஒரு சிறு துணித் துண்டைக் கிழித்து அவை உள்ளபடியே கட்டிவிட வேண்டும்.

இறந்தவருக்கு உடம்பு அதிகமாக இருக்கும்போதே வீட்டிலிருந்து நித்ய கிரியைகளைச் செய்ய ஒரு பித்தளைச் சொம்பு, இரண்டு பித்தளைக் குடங்கள், அரை லிட்டர் அரிசி, கொஞ்சம் கோலமாவு ஆகியவற்றை எடுத்துத் தனியாக வைக்கவும்.

தலைப்பக்கம் உயிர் பிரிந்தவுடன் விளக்கு ஏற்றி வடக்கு நோக்கி வைக்க வேண்டும்.

கிரியை செய்வதற்கு வாத்தியாருக்கு ஏற்பாடு செய்து அவர் எந்த மணிவாக்கில் வரவேண்டும் என்பதைத் தெரிவிக்கவும்.

இந்த சமயம் ஏற்பாடுகளைச் செய்வதற்கு, தனிப்பட்ட சங்கங்கள் உள்ளன. பிராமணர் சங்கமும் ஏற்பாடு செய்கிறது. அவர்களுக்கு விஷயம் தெரிவிக்கும்போது இறந்தவர் ஆணா, பெண்ணா? (பெண்ணானால் சுமங்கலியா?) என்ற விபரம் தெரிவித்தால், அதற்குத் தக்கபடி சாமான்களை எடுத்து வருவார்கள்.

இறந்தது பற்றிய சான்றிதழ், என்ன காரணத்தால் இறந்தார் என்பது உட்பட, ஒரு டாக்டரிடம் வாங்கப்பட வேண்டும். இதற்கு பிரதிகளையும் எடுத்து வைக்க வேண்டும். தகனம் செய்ய ஏற்பாடு செய்யச் சொல்லும்போது இந்தச் சான்றிதழை (ஒரிஜினல்) கொடுக்க வேண்டும். பின்னால் பல்வேறு ஏற்பாடுகள் செய்ய இந்தச் சான்றிதழ் தேவைப்படும். ஆகையால் ஒரிஜினலைக் கொடுப்பதற்கு முன் பிரதிகள் எடுத்து வைத்துக் கொள்ள வேண்டியது மிக அவசியம்.

(மரணத் தறுவாயில் பிராணன் போகும்போது சொல்ல வேண்டிய மந்திரங்கள் - செய்ய வேண்டியவை கர்ண மந்திர ஜபம்)

## கர்ணமந்த்ர ஜபம்

சுக்லாம்பரதரம் + ஓம் பூ: மமோபாத்த + ர்த்தம் மோக்ஷ ஸித்த்யர்த்தம் ப்ராணாதீனாம் ஸ்வஸ்மாத் ஸ்வஸ்மாத் ஸ்த்தானாத் ஸுகோத்க்ரமண - ஸித்த்யர்த்தம் தக்ஷிணே கர்ணே புண்யமந்த்ரஜபம் கரிஷ்யே||

புத்திரன் தந்தையின் (தாயின்) தலையை வலது முழங்காலில் வைத்துக்கொண்டு வலது காதில் 'ஆயுஷ: ப்ராணம் ஸந்தனு' என்ற அனுவாகத்தையும் அஷ்டாக்ஷரம் பஞ்சாக்ஷரம் முதலிய மந்திரங்களையும் ஜபித்து நாமகீர்த்தனம் முதலியவற்றையும் செய்ய வேண்டும். பிராணன் போன பின் பூமியில் தர்ப்பைகளைப் பரப்பி அதன் மேல் தலையைத் தெற்குப்புறமாக வைத்துப் படுக்க வைக்க வேண்டும்.

**மந்த்ரம்** ||ஆயுஷ ப்ராணம் ஸந்தனு, ப்ராணாதபானம் ஸந்தனு, அபானாத்வ்யானம் ஸந்தனு, வ்யானாச்சக்ஷு: ஸந்தனு, சக்ஷுஷ: சரோத்ரம் ஸந்தனு, சரோத்ரான் மனஸ்ஸந்தனு, மனஸோ வாசம் ஸந்தனு, வாச ஆத்மானம் ஸந்தனு, ஆத்மன: ப்ருதிவீம் ஸந்தனு, ப்ருதிவ்யா

அந்த்ரிக்ஷம் சந்தனு, அந்தரிக்ஷாத் திவம் ஸந்தனு, திவஸ்ஸுவஸ்ஸந்தனு|| இதுவரை உபவீதியாகவே செய்யவேண்டும். மரணம் வரை நாமகீர்த்தனம் செய்யவேண்டும்.

மரணத்திற்குப் பின் இறந்தவருடைய புத்திரனும் ஞாதிகளும் உத்தரீயத்துடன் பூணூலை இடமாகப் போட்டுக்கொண்டும், ஸ்திரீகள் தலைவிரித்துக் கொண்டும் தெற்கு நோக்கி நமஸ்காரம் செய்யவேண்டும்.

பகவத் கிருபையால் ஒருவருக்கு ஆத்மஞானம் சித்தித்து பூர்ண பிரக்ஞையும் கடைசிவரை இருந்தால் அவருடைய அந்திய கால ஸ்மரணை எப்படியமையும் என்பதை பகவத்கீதை (8-9-13) பின்வருமாறு வர்ணிக்கிறது:

''பிரயாணகாலத்தில் எல்லாம் அறிந்தவனும், எல்லார்க்கும் முந்தியவனும், எல்லாவற்றையும் ஆள்பவனும் அணு விற்கும் சிறியவனும், எல்லார்க்கும் வினைப்பயனை அளிப்பவனும், சிந்தித்தற்கரிய உருவுடையவனும், சூரியனைப் போல் ஸ்வயம் பிரகாசனும், அவித்தையாகிற இருளுக்கப்பாற்பட்டவனுமாகியவனை பக்தியுடன் கூடியவனாய் எவன் அசையாத மனத்தாலும் யோகத்தின் வலிமையாலும் புருவமத்தியில் பிராணனைச் செவ்வையாக நிலை நிறுத்தித் தியானிக்கின்றானோ, அவன் பிரகாசம் பொருந்திய அப்பரமபுருஷனை அடைகிறான்...

''எல்லா இந்திரிய வாயில்களையும் அடைத்து, மனத்தையும் இருதயத்தில் நிலை நிறுத்தித் தனது பிராணனைத் தலையின் உச்சியில் வைத்து யோகதாரணையில் நிலைபெற்றவனாய் 'ஓம்' எனும் பிரம்மவாசகமாகிய ஓரெழுத்தை உச்சரித்துக் கொண்டு என்னை முறைப்படி சிந்தித்தவனாய் உடலைவிட்டு எவன் செல்லுகின்றானோ அவன் உத்தம கதியை அடைகிறான்.''

## கர்த்தாவின் கிரமம்

*(1) தன் வயிற்றில் பிறந்த புத்திரன் (2) புத்திரனுடைய புத்திரன் (3) புத்திரனுடைய புத்திரனுடைய புத்திரன் (4) தான் தத்தெடுத்துக் கொண்ட புத்திரன் (5) அவனுடைய புத்திரன் (6) பிறனுக்கு தத்து கொடுத்த புத்திரன் (7) தன் சொத்துக்குரிய பெண் வயிற்றுப் பேரன் (8) பொதுவாகப் பெண் வயிற்றுப் பேரன் (9) பாகம் பிரியாத ஸபத்னீபுத்திரன் (10) பதி (11) பாகம்பிரிந்த ஸபத்னீ புத்ரன் (12) புத்திரி (13) தம்பி (14) சகோதர புத்திரர்கள் உள்ளவர்களில் பெரியவன் (15) மாற்றாந்தாய் வயிற்று சகோதரன் (16) அவன் புத்திரன் (17) தந்தை (18) தமையன் (19) தாய் (20) நாட்டுப் பெண் (21) பிள்ளையின் பெண் (22) பெண்ணின் புத்திரி (23) பிள்ளை வயிற்றுப் பேரனுடைய பத்தினி (24) அவன் புத்ரி (25) தத்துப் புத்திரர்களின் பத்னிகள் (26) சகோதரி (27) சகோதரி புத்திரன் (28) ஸபிண்டன் (29) ஸமானோதகன் (30) மாத்ருஸபிண்டன் (31) மாத்ருஸமானோதகன் (32) சிஷ்யன் (33) மாப்பிள்ளை (34) சிநேகிதன்.*

*ஸ்திரீ விஷயத்தில் வேறுபாடு: (13) பர்த்தாவின் தம்பி (14) பர்த்தாவின் சகோதரர்களின் புத்திரர்களுள் மூத்தவன் (15) பர்த்தாவின் மாற்றாந்தாய் வயிற்றுச் சகோதரன் (16) அவன் புத்திரன் (17) பர்த்தாவின் தந்தை (18) பர்த்தாவின் தமயன் (19) பர்த்தாவின் தாய்... (27) பர்த்தாவின் சகோதரி மகன். இறந்தவளின் சகோதரி மகன், இறந்தவளின் சகோதரனுடைய மகன்.*

## உபநயனமாகாதவனுடைய கர்த்ருத்வம்

புத்திரன் தௌஹித்ரன் முதலியவர்கள் இரண்டு வயது பூர்த்தியாகும் வரை பிதா, மாதாமஹன் முதலியவர்களுக்கு தஹனக்கிரியை முதலிய அனைத்தையும் பக்கத்திலிருக்கும் வேறொரு கர்த்தாவிடம் தர்ப்பையைக் கொடுத்து செய்விக்க

வேண்டும். மூன்றாவது வயது முதல் ஏழு வயது வரை அக்னிப்ரதானம் மட்டும் அவர்களால் செய்வித்து மற்றவை அனைத்தும் பிறரால் செய்ய வேண்டும்.

பத்தினியும் பர்த்தாவிற்கு அக்னிப்ரதானம் மட்டும் மந்திரத்துடன் தான் செய்து மற்றவை அனைத்தும் பிறரால் செய்விக்க வேண்டும்.

பிறவியில் மூத்தவனே அக்னிப்ரதான மந்திரம் சொல்லிக் கொள்ளி வைக்க வேண்டும். அவன் இல்லாவிட்டால் இருப்பவர்களுள் மூத்தவன் அனைத்தும் செய்ய வேண்டும்.

## தன் ஸூத்திரமறிந்த புரோஹிதர் கிடைக்காதவிடத்தில் விதி

தனது சாகையின் ஸூத்திரந்தெரிந்த புரோகிதர் கிடைக்காவிட்டால் வேறு சாகையின் ஸூத்திரத்தால் ப்ரேதாக்னி ஸந்த்தானம் முதலியவற்றைச் செய்ய வேண்டும். மத்தியில் தன் ஸூத்திரக்காரர் கிடைத்தாலும் எந்த ஸூத்திரத்தால் ஆரம்பிக்கப்பட்டதோ அதே ஸூத்திரத்தால் ஏகோத்திஷ்டம் முடிய பூர்வக்கிரியைகளைச் செய்ய வேண்டும். மாதாமஹர் முதலியோரின் தகனம் முதலியவற்றை மாதாமஹாதிகளின் ஸூத்திரத்தாலேயே செய்ய வேண்டும்.

இறக்கும் தறுவாயில் கோ, பூமி, திலம், ஹிரண்யம், தீபம், தீர்த்தபாத்திரம் ஆகியவைகளைத் தானம் செய்வது விசேஷம். ராமநாம, சிவநாம, நாராயணா என்பது போன்ற பகவத் நாமாக்களைச் சொல்ல வேண்டும்.

மரண தினத்தன்று செய்யும் தான பலன் 1,000 கிரகணங்கள், 10,000 வியதீபாதங்கள், லட்சம் அமாவாசை, கோடித்துவாதசி இவைகளுக்கு அதிகமானது என்று கூறப்பட்டிருக்கிறது.

நம் ஸநாதன தர்மத்தின்படி இறப்பது என்பது ஓர் ஊரை விட்டு இன்னொரு ஊருக்குப் போவதைப் போல என்றும், அதனால் இறப்பதற்கு முன்பே தானங்கள் செய்வது விசேஷம் என்றும் கூறப்பட்டுள்ளது. உயிர் பிரியும்போது உடல் பூமியில் இருப்பதுதான் விசேஷம்.

உக்ராந்தி கோதானம் - பிராணன் வெளியே செல்லும் சமயம் தெரிந்தாலும் தெரியாவிட்டாலும் இந்த கோதானத்தைச் செய்ய வேண்டியது விசேஷம். இந்தச் சரீரத்தை விட்டுக் கஷ்டப்படாமல் போவதற்கு இந்த உக்ராந்தி கோதானம் செய்ய வேண்டும்.

## பிராயச்சித்தம்

1. செவ்வாய், வியாழன், வெள்ளி, இவ்வாரங்களில் இறந்தால் அந்தந்த க்ரஹத்திற்குப் ப்ரீதியானதை தானம் செய்ய வேண்டும்.

2. கர்மம் செய்ய அதிகாரம் வேண்டி க்ருச்ச்ர தானம் செய்ய வேண்டும்.

3. இறந்து 25 நாழிகைக்குள் தகனம் செய்ய வேண்டும். காலம் அதிக்கிரமித்தால் க்ருச்ச்ரதானம் செய்து, பஞ்சகவ்யத்தால் புரோக்ஷித்துப் பாவன மந்திரங்களால் அபிமந்திரித்துப் பிறகு சுத்த ஜலத்தால் ஸ்நானம் செய்து வைக்க வேண்டும்.

4. தக்ஷிணாயனம், கிருஷ்ணபக்ஷம், ராத்திரி, உச்சிஷ்டம் முதலிய தோஷங்களுக்கு க்ருச்ச்ரதானம் செய்ய வேண்டும்.

## ஸம்ஸ்காரம்

1. உபநயனமாகாதவன் வேத மந்திரங்களை உச்சரிக்காமல் தாய் தந்தை கிருத்தியத்தைச் செய்யலாம். சௌளமாகாதவனுக்கு க்ருத்தியத்திற்கு வபனம் கூடாது.

2. பர்த்தாவுக்குப் பத்னி கிருத்யம் செய்யும் விஷயத்தில் அவள் பிரசவித்து விட்டாலோ பஹிஷ்ட்டையாகி விட்டாலோ பிரேதத்தை மந்திரமில்லாமல் தகனம் செய்து தீட்டுப் போனபின் ப்ராஜாபத்ய க்ருச்சரம் செய்து மந்த்ரபூர்வமாக தகனம் முதலியவற்றைச் செய்ய வேண்டும்.

*(ப்ராஜாபத்யக்ருச்ரம் = 10,000 காயத்ரீஜபம் = 200 பிராணாயாமம்.)*

*கர்ணமந்திரம் - ப்ராண - அபான - வியான - உதான - ஸமான - என்ற ஐந்தும், தோல், கண், காது, மூக்கு போன்ற ஞான இந்திரியங்களும், வாய், கை, கால், குதம், குஹம் ஆகிய கர்மேந்திரியங்களும், மனஸ், சித்தம், புத்தி, அகங்காரம் ஆகியவையுமான பத்தொன்பது ஆஷ்ம சரீரமாகச் சொல்லப்படுகிறது. அவை ஒன்றுக்குள் ஒன்றாக ஐக்கியமடைந்து பூதபஞ்சரத்தை (பூமி, ஜலம், அக்னி, காற்று, ஆகாசம்) பிறகு பூமி அந்தரிக்ஷம், த்யுலோகம் அடைந்து, கடைசியாக சூஷ்ம சரீரத்தை இந்த மந்திரம் ஸ்வர்கம் வரை அழைத்துச் செல்லுகிறது.*

*பர்யுஷித பிராயச்சித்தம் - இந்தச் சரீரத்தை உயர்ந்த அக்னியிடம் உயர்ந்த உறவிஸாகச் சேர்க்கிறோம். அதில் பகலில் இறந்து முன் இரவில் தகனம் செய்தாலும்,இரவில் இறந்து பகலில் தகனம் செய்தாலும், அது யாத யாமம் (பழசாக) ஆகி விடுகிறது. அதற்குள்ள பிராயச்சித்தத்தால் புதிதாக ஆகிறது. சூரியோதயத்துக்கு மேல் பிராணவியோகம் ஏற்பட்டு, கர்ணமந்திரம், ஸங்கல்பம் செய்து 25 நாழிகைக்குள் தகனம் செய்யாவிட்டால் பழசாக ஆகிவிடுகிறது.*

*அடுத்ததாகத் தகனம் பற்றிப் பார்ப்போம்...*

●

# 2. தகனம்

பிரேத காரியங்களைக் கர்த்தா செய்ய வேண்டிய முறையும் மந்திரங்களும்.

## ப்ரேதாக்னி ஸந்த்தானம்

*எல்லா பிரேத காரியங்களிலும் கர்த்தா ஈரவஸ்திரத்துடன் இருக்க வேண்டும். ஔபாஸனாக்னி விச்சின்னமாயிருந்தால் மூன்று க்ருச்ச்ரங்களைச் செய்து ப்ரேதாக்னி ஸந்தானத்தைத் தொடங்க வேண்டும்.* 1 ||

*அனுஜ்ஞா || அசேஷே + ஸ்வீக்ருத்ய | ப்ராசீனாவீதி, - கோத்ரஸ்ய - சர்மண: ப்ரேதஸ்ய மம பிது: ப்ரதமே அஹனி பைத்ருமேதிக - ஸம்ஸ்காரார்த்தம் ப்ரேதாக்னி ஸந்தானம் கர்த்தும் யோக்யதாஸித்தி - மனுக்ருஹாண கோத்ராயா: - நாம்ன்யா: ப்ரேதாயா: மம மாது: என்றவாறு ஸ்திரீ விஷயத்தில் மாற்றிக்கொள்ள வேண்டும்.* 2 ||

*(மரணமடைந்தவரின் மனைவி வியாதியாலோ வேறு காரணத்தாலோ அருகில் இல்லாவிட்டால் மனைவிக்குப் பிரதிநிதியாக தர்ப்பையில் முடிந்து பிரேதத்தின் சமீபத்தில் வைத்துவிட்டு ப்ரேதாக்னி ஸந்த்தானம் செய்யவும்.)*

*ஆசம்ய | ப்ராணானாயம்ய | பவித்ரம் த்ருத்வா ஸங்கல்ப: | உபவீதி |* இரண்டு தர்ப்பையின் மேலமர்ந்து கைகளிலும் இரண்டு இரண்டு தர்ப்பைகளை இடுக்கிக் கொண்டு ஸ்ரீகோவிந்த + புண்யதிதௌ ப்ராசீனாவீதீ - | கோத்ரஸ்ய -

சர்மண: ப்ரேதஸ்ய மம பிது: ப்ரதமே அஹனி பைத்ரு மேதிக - ஸம்ஸ்காரார்த்தம் ப்ரேதாக்னி ஸந்த்தானம் கரிஷ்யே । ப்ரே தாக்னி ஸந்த்தானகாலே திதி-வார நக்ஷத்ர-லக்ன-யோக-கரணாதிபிர் - யோ தோஷ: ஸமஜனி தத்தோஷ பரிஹாரார்த்தம் யத்கிஞ்சித்ப்ரஜாபத்ய - க்ருச்ச்ர-ப்ரத்யாம் னாய - ஹிரண்யதானம் கரிஷ்யே । உபவீதி । அப் உபஸ்ப்ருச்ய । ப்ராசீனாவீதீ॥ ஹிரண்யகர்ப்ப-ப்ரயச்ச மே। - கோத்ரஸய - சர்மண । ப்ரேதஸ்ய மம பிது । ப்ரதமே அஹனி பைத்ரு மேதிக-ஸம்ஸ்காரார்த்தம் ப்ரேதாக்னி ஸந்த்தான காலே திதி+ஸம்ப்ரததே ॥ கையை மறித்துப் பித்ருதீர்த்தத்தால் அர்ப்பணம், அப்படியே எல்லா இடத்திலும். 4 ॥

பிறகு உல்லேகனம், தெற்கில் ஆரம்பித்து வடக்கு நோக்கி மூன்று கோடுகளும், மேற்கில் ஆரம்பித்துக் கிழக்கு நோக்கி மூன்று கோடுகளும் ஒரு ஸமித்தினால் வரைந்துவிட்டு ஸமித்தை தென் மேற்கு மூலையில் எறிந்துவிட வேண்டும், ஜலத்தைத் தொட்டு அந்த ரேகைகளில் தெளித்து மீதி ஜலத்தையும் கவிழ்த்துக் கையால் தெளித்து மீதியைத் தனியாக ஓரிடத்தில் வைக்கவும். மௌனமாக அக்னியைப் பிரதிஷ்டை செய்யவும். தெளித்து மிஞ்சிய ஜலத்தை அக்னிக்கு வடக்கிலோ (கிழக்கிலோ) கொட்டி அங்கே ஒரு பாத்திரத்தில் வேறு ஜலத்தை வைக்கவும், சிராய்களால் அக்னியை மூட்டவும். 5 ॥

இதில் பரிஸ்தரணம் பாத்ரஸம்ஸ்காரம் முதலியவை இல்லை.

தெற்கே மத்தியில் ஆரம்பித்து மௌனமாக அப்பிரக்ஷிண மாகப் பரிஷேசனம் செய்க.

ஸம்ஸ்காரமில்லாமல் நெய்யைப் பன்னிரண்டு தடவை சிறிது சிறிதாக எடுத்து தர்வியில் சேர்த்துக்கொண்டு மௌனமாக ஹோமம், 'ப்ரஜாபதய இதம் ந மம' என்று.

பிறகு அதே மாதிரி ஸமஸ்காரம் செய்யாத நெய்யைப் பன்னிரண்டு தடவை எடுத்துச் சேர்த்து 'அயாச்சாக்னே +

பேஷஜம் ஸ்வாஹா' என்ற மந்திரத்தால் ஹோமம், 'அக்னே அயஸ இதம் ந மம' மறுபடி அதே மாதிரி பன்னிரண்டு தடவை எடுத்துச் சேர்த்து 'அனாஜ்ஞாதம் ஸ்ரீ யதாததம் ஸ்வாஹா' - 'அக்னய இதம் ந மம' மறுபடி அதே மாதிரி பன்னிரண்டு தடவை எடுத்துச் சேர்த்து 'புருஷ ஸம்மிதோ + ஸ்வாஹா' 'அக்னய இதம் ந மம' மீண்டும் அதே மாதிரி பன்னிரண்டு தடவை எடுத்துச் சேர்த்து 'யத்பாகத்ரா + யஜாதி ஸ்வாஹா । அக்னய இதம் । உபவீதீ 'பூர்ப்புவஸ்ஸுவ: ஸ்வாஹா । ப்ரஜாபதய இதம்।' ப்ராசினாவீதீ॥ தெற்கு மத்தியில் ஆரம்பித்து அப்பிரதக்ஷிணமாக மௌனமாகப் பரிஷேசனம்.

மறுபடி பரிஷேசனம் செய்து ஹோம தேவதையை தியானித்து அரிசியால் ஔபாஸன ஆஹுதி இரண்டையும் செய்யவும். முன் போல் மீண்டும் பரிஷேசனம்.

இது ஸூத்திரப்படி ப்ரயோகம். அல்லது ஸம்பிரதாயப் படி ஆசாரத்தையொட்டி பரிஸ்தரணம் முதலிய எல்லாக் கருமங்களும் சிராத்தகர்மத்தில் போல் அவரவர் கிருஹ்ய ஸூத்ரத்தில் சொல்லியுள்ளபடி செய்ய வேண்டும். 6 ॥

## பித்ருமேத - ஸம்ஸ்கார: ॥

**அனுஜ்ஞா** ॥ அசேஷே + ஸ்வீக்ருத்ய ॥ ப்ராசீநாவீதீ। - கோத்ரம் - சர்மாணம் ப்ரேதம் மம பிதரம் (- கோத்ராம் நாம்னீம் ப்ரேதாம் மம மாதரம்) ஔபாஸனாக்னினா பைத்ருமேதிக - விதினா ஸம்ஸ்கர்த்தும் யோக்யதா - ஸித்திமனு க்ருஹாண ॥ 1 ॥

**ஸங்கல்ப:** உபவீதீ । ஓம்பூ: + பூர்ப்புவஸ்ஸுவரோம் । ஸ்ரீ கோவிந்த + புண்யதிதௌ (ப்ராசீனாவீதீ।) - கோத்ரம் - சர்மாணம் மம பிதரம் (- கோத்ராம் - நாம்னீம் மம மாதரம்) ஔபாஸனாக்னினா பைத்ருமேதிக - விதினா ஸம்ஸ்கரிஷ்யாமி। 2 ॥

அத்யபூர்வோக்த + பைத்ருமேதிக விதினா ஸம்ஸ்கார கரணகாலே திதிவார + ஹிரண்யம் ஸம்ப்ரததே॥ 3 ॥

என்று ஸங்கல்பித்து திதிவார நக்ஷத்திரதோஷங்களுக்குப் பரிகாரமாகப் பிராம்மணர்களுக்கு ஹிரண்ய தானம்.

ஔபாஸன அக்னிக்கு மேற்கில் தெற்கு நுனியாக தர்ப்பைகளைப் பரப்பி அவற்றின் மேல் மரணமடைந்தவர் உடலைத் தெற்கில் தலையிருக்கும்படி படுக்க வைக்க வேண்டும்.

ஸர்வஸ்ய ப்ரதிசீச்வரீ பூமிஸ்த்வோபஸ்த்த ஆதித। ஸ்யோனா தஸ்மை ஸுஷதா பவ யச்சாஸ்மை சர்ம ஸப்ரதா:॥ ஸம்ஸ்காரம் செய்யும் கர்த்தா இந்த மந்திரத்தைச் சொல்ல வேண்டும். மரணமடைந்தவர் உடலைப் படுக்க வைத்தல் பிறர் செய்ய வேண்டியது. 4 ॥

பிறகு சௌகரியமான ஏதாவது ஒரு இடத்தில் வாயிலில் கிழக்கு நோக்கி மூன்று கோடுகளும் வடக்கு நோக்கி மூன்று கோடுகளும் வரைந்து அக்னியைப் பிரதிஷ்டை செய்து அக்னிக்குக் கிழக்கில் ஒரு கிண்ணத்தில் ஜலம் வைத்துவிட்டு, தெற்குப் புறம் மத்தியிலிருந்து தொடங்கி மௌனமாகவும் அப்பிரதக்ஷிணமாகவும் பரிஷேசனம் செய்து, தர்ப்பையால் பிரேதத்தைத் தொட்டுக் கொண்டு ஸம்ஸ்காரம் செய்யாத நெய்யால் கரண்டியாலோ இலையாலோ ஹோமம் செய்ய வேண்டும்.

ஸ்நாநம் செய்து கர்மாவைத் தொடங்க வேண்டும்.

---

பித்ருமேதம் என்ற சொல்லால் அசுவமேதம் முதலியதுபோல் இதுவும் ஒரு யாகமாகக் கருதப்படுகிறது என்று கருத்து. மரணமடைந்தவரின் தேகமே மணிஸ்ஸாகிறது. பிரம்மமேதம், ஏகர்ச்சவிதி - ஸம்ஸ்காரம், கர்ப்பிணீ ஸம்ஸ்காரம் முதலியவற்றை அனுபந்தம் 1, 2, 3ல் பார்க்கவும்.

புரேயுவாம்ஸம் ப்ரவதோ மஹீரனு புஹுப்ப்ய:
பந்த்தா - மநுபஸ்பசானம் । வைவஸ்வதம் ஸங்கமனம்
ஜன்னாம் யமம் ராஜானம் ஹவிஷா துவஸ்யத ஸ்வாஹா॥
யமாயேதம் ॥ 5 ॥

உபவீதீ ॥ ஸம்ப்பாவித + ஸ்வாஹா । பரஜாபதய இதம் ॥ 6 ॥

ப்ராசீனா வீதீ ॥ தெற்குப்புறம் மத்தியிலிருந்து தொடங்கி அப்ரதக்ஷிணமாக மௌனமாய்ப் பரிஷேசனம் செய்க. 7 ॥

பிரேதத்தை குளிப்பாட்டி பு ட்ரம் அணிவித்து உலக வழக்கப்படி அலங்கரித்து வெள்ளை நூலால் கைக்கட்டை விரல்களையும் கால் கட்டை விரல்களையும் இறுக முடிந்து வழலைக்கோரை மாலையை தலையில் அணிவித்து அத்திக்கட்டையாலான பாடைமேல் பிரேதத்தைத் தெற்குப் பக்கம் தலை தூக்கியிருக்கும்படி வைத்துப் புது வஸ்திரத்தால் காலிலிருந்து ஆரம்பித்து மூடவேண்டும்.
இதம் த்வா வஸ்த்ரம் ப்ரத்மம் ந்வாகன் (என்ற மந்திரத்தைச் சொல்லி

கர்த்தா பிரேதத்தின் சரீரத்தில் முன் அணிந்திருந்த வஸ்திரத்தை எடுத்துவிட வேண்டும்) அபைத தூஹ யதிஹா பிப: புரா । இஷ்டாபூர்த்த மனுஸம்பச்ய தக்ஷிணாம் யதா தே தத்தம் பஹுதா விப்ந்துஷு ॥

(அந்தப் பழைய வஸ்திரத்தை கர்த்தா பிரியப்பட்டால் ஜீர்ணமாய் போகும்வரை வைத்திருக்கலாம்.)

---

அஸ்தமன காலமானால் கர்த்தாவும் பிறரும் ஸந்தியா வந்தனம் செய்து கர்மத்தைத் தொடங்க வேண்டும். கருமம் தொடங்கிய பின் தகனமத்தியில் அஸ்தமன காலம் வந்தால் தகனத்திற்குப் பின் ஸ்நானம் செய்து ஸந்தியா வந்தனம் செய்யவேண்டும்.

அப உபஸ்ப்ருச்ய । 'சரு' செய்வதற்கு அரிசியை ஒரு பாத்திரத்தில் போட்டு ஒரு தடவை களைந்து சருஸ்தாலியில் அதை இட்டு ஔபாஸனாக்னியில் மந்திரமில்லாமல் அந்தப் பச்சை அரிசியை வேகவைத்து ஆசாரப்படி தெற்குப் புறம் இறக்கி வைக்க வேண்டும். (ஸூத்ரப்படி கிழக்கிலோ வடக்கிலோ வைக்க வேண்டும்.)

(தீவட்டியுடன் பிரேதத்திற்கு முன் செல்லவேண்டும் என்பதற்கு சாஸ்திர நியாயம் காணப்படாவிடினும் வழக்கமிருப்பதால் செய்ய வேண்டும். சிலர் அது பேய் பிசாசுகளை ஓட்டுவதற்காக என்று எண்ணுகிறார்கள். உலக வழக்கத்தில் பேரன்மார்களிருந்தால் நெய் தீபம் பிடித்துக் கொண்டு பின் செல்ல வேண்டுமென்கிறார்கள்.)

ஸம்பாரக்ரம: கர்த்தா சேகரித்துக் கொள்ள வேண்டிய பொருள்கள்: - எள், அரிசி, சரு, பலாசக் கொத்துகள், சில்லரைப் பணம், நெய், பாத்திரங்கள், தர்ப்பை, கல், மணல், புல், சிராய், மண்வெட்டி, கத்தி இவைகளை முன்பு தயாரித்து விட்டுக் கர்த்தா மிச்சமில்லாமல் அக்னியைச் சட்டியில் எடுத்துக்கொண்டு புறப்பட வேண்டும். அக்னிக்குப் பின் ஞாதிகள் பிரேதத்தை எடுத்துச் செல்ல வேண்டும். பிரேதத்திற்குப் பின், ஸம்பாரம் கொண்டு செல்பவர் பிரேதத்தைச் சுமப்பவர்கள் நீங்கலாக மற்ற ஞாதிகள் மூத்தவர்கள் கிரமத்தில் தொடர வேண்டும். மீதியுள்ளவர்கள் அதற்குப் பின் நியமமின்றிச் செல்லலாம் என்பது கிரமம். 11 ॥

இப்பொழுது ஞாதிகள் பூணூலை மாலையாகப் போட்டுக்கொண்டு பிரேதத்தைப் பாடையுடன் எடுத்துக் கொள்ள வேண்டும். பிரேதத்தை அவர்கள் எடுக்கும்போது கர்த்தா சொல்ல வேண்டிய மந்திரம்:

இமௌ யுநஜ்மி தே வஹ்னீ அஸுநீதாய வோடவே ।
யாப்ப்யாம் யமஸ்ய ஸாதனம் ஸுக்ருதாஞ்சாபி கச்சதாத் ॥

பிறகு கர்த்தா வாஹகர்களால் எடுத்துச் செல்லப்படும் பிரேதத்தைப் பார்த்து இந்த மந்திரத்தை ஜபிக்க வேண்டும்

பூஷோத்வேதச்ச்யாவயது ப்ரவித்வானநஷ் பசுர்-ப்பு

வநஸ்ய கோபா: । ஸத்வைதேப்ப்ய: பரிததாத் பித்ருப்ப்

யோ Sக்னிர் - தேவேப்ப்யஸ்ஸுவிதத்ரேப்ப்ய: । பிறகு

கர்த்தா மீதியில்லாமல் அக்னியை எடுத்துக்கொண்டு முதலில் செல்ல வேண்டும். ॥ 12 ॥

பிரேதம் வெளியிற் கொண்டு போகப்பட்டபின் மரணமடைந்தவரின் மனைவி முதலிய ஸ்திரீகள் சிறியவர்களை முன்னிட்டுக் கொண்டு விரித்த தலையுடன் புழுதியைத் தலையிலோ தோள்களிலோ பூசிக்கொள்ள வேண்டும்.

பிறகு வீட்டிலிருந்து மயானம் வரை உள்ள வழியில் கால் பாகம் சென்றதும் அக்னியைக் கீழே வைத்து அக்னிக்கு வடக்கில் தெற்கு நுனியாக தர்ப்பையைப் பரப்பி அவற்றில் 'ஸர்வஸ்ய ப்ரதிசீலர்' என்ற மந்திரத்தால் பிரேதத்தைத் தெற்குபுறம் தலையிருக்கும்படி வைத்து சருஸ்தாலி வைப்பதற்கும் சருவைப் போடுவதற்கும் மண் வெட்டியால் மண் கட்டிகளை எடுத்து, அவற்றில் சில கட்டிகளை சருவைப் போடுவதற்காக ஒதுக்கி வைத்துவிட்டு மற்ற கட்டிகளை பிரேதத்திற்கு வலது பக்கம் வைத்து அவற்றின் மேல் சருஸ்தாலியை ஸ்தாபிக்க வேண்டும். பிறகு (ஸ்திரீகளும்) ஞாதிகளும் கர்த்தாவுடன் உத்தரீயத்தை வேறிடத்தில் வைத்துவிட்டு ஒரே வஸ்திரத்துடன் கேசத்தை இரண்டாகப் பிரித்து வலது பாகத்தை முடிந்து விட்டு இடது பாகத்தை விரித்து விட்டு வலது கைகளால் வலது துடைகளைத் தட்டிக் கொண்டு சருவுடன் பிரேதத்தை இடுப்பு வஸ்திரத்தின் நுனியை இடது கையால் பிடித்து

விசிறிக் கொண்டு வயதில் சிறியவர்களை முன்னிட்டுக் கொண்டு மூன்று தடவை அப்பிரதக்ஷிணமாகச் சுற்ற வேண்டும். அதற்கு மந்த்ரம் - அப் ந: சோசுச - தக மக்னே சுசுத்த்யா ரயிம் । அப் ந: சோசுசதகம் । இப்படி ஒரு தடவை மந்திரத்தைச் சொல்லிப் பிறகு

இடது பாகம் கேசத்தை முடிந்து வலது பாகத்தை விரித்து விட்டு இடது கைகளால் இடது துடைகளைத் தட்டிக் கொண்டு இடுப்பு வஸ்திரத்தின் நுனியை வீசாமல் மூன்று தடவை பிரதக்ஷிணமாகச் சுற்ற வேண்டும். அதற்கும் முன்போல் அதே மந்த்ரம். இங்கு கனிஷ்டன் முதலாக என்ற நியமம் இல்லை. ॥ 3 ॥

பிறகு கர்த்தா பிரேதத்தின் தலைப்பக்கத்தில் தெற்கு முகமாக உட்கார்ந்து தெற்கு நுனியாக தர்ப்பையைப் பரப்பி அந்த தர்ப்பையின் மேல் முன்பு வெட்டி எடுத்த சருஸ்தாலி வைக்க உபயோகித்தது போக மீதி தனியாக வைத்த மண் கட்டிகளை தென்புறம் வைத்து அவற்றின் மேல் மௌனமாக எள்ளும் ஜலமும் முழங்காலை இடதுபுறம் மண்டியிட்டுக் கொண்டு விடவேண்டும்.

சருவின் மூன்றிலொரு பாகமெடுத்து அதை மூன்றாகப் பிரித்து மூன்று மண் கட்டிகள் மேலும் 'பதிவாஸிப்ப்யோ பூதேப்ப்ய: ஏதம் பலிம் ததாமி' (வழியில் வசிக்கும் பூதங்களுக்கு இந்த பலியைத் தருகிறேன்) என்று ஒரு தடவை சொல்லி தெற்குப் புறம் போடவும். அதன் மேல் மௌனமாக எள்ளும் ஜலமும் விட்டு மூன்று மண் கட்டிகளையும் கலந்து விடவும். ॥ 4 ॥

பிறகு வாஹகர்கள் பிரேதத்தைத் தூக்கும்போது கர்த்தா பிரேதத்தை நோக்கி இந்த மந்திரத்தைச் சொல்ல வேண்டும்.

பூஷேமா ஆசா அனுவேத ஸர்வாஸ்ஸோ
அஸ்மான் அப்யதமேந நேஷத் ஸ்வஸ்திதா அக்ருணி:
ஸர்வவீரோ Sப்ரயுச்சன் புர ஏது ப்ரவித்வான்||

இரண்டாவது கால் வழி சென்றபின் அக்னியைக் கீழே வைத்து அக்னிக்கு வடக்கில் தெற்கு நுனியாக தர்ப்பைகளைப் பரப்பி அவற்றிற்கு மேல் 'ஸர்வஸ்ய ப்ரதிசீவரீ' என்ற மந்திரத்தால் பிரேதத்தைத் தெற்குப் பக்கம் தலையிருக்கும்படி வைத்து தெற்கிலிருந்து மண் கட்டிகளை எடுத்து அவற்றில் சருவை வைத்து ஒற்றை வஸ்த்திரத்துடன் வலது துடைகளைத் தட்டிக் கொண்டு வஸ்திர நுனியால் விசிறிக் கொண்டு (ஸ்திரீகளும்) புருஷர்களும் சிறியவர்களை முன்னிட்டுக் கொண்டு கர்த்தாவுடன் 'அபந: சோசுசத்' என்ற மந்திரம் சொல்லி மூன்று தடவை அப்பிரதக்ஷிணமாகச் சுற்ற வேண்டும். பிறகு இடது பக்கம் முடிந்து, வலது பக்கம் கேசத்தை விரித்து இடது துடைகளைத் தட்டிக் கொண்டு வஸ்திர நுனியை வீசாமல் 'அப ந: சோசுசத்' என்னும் மந்திரத்துடன் மூன்று தடவை பிரதக்ஷிணமாகச் சுற்ற வேண்டும்.

பிறகு கர்த்தா முன்போல் மண் கட்டிகளின் மேல் மௌனமாக எள்ளும் ஜலமும் விட்டு சருவின் பாதி பாகத்தை எடுத்து அதை மூன்றாகப் பிரித்து மண் சட்டிகளின் மேல் 'பதிவாஸிப்ப்யோ பூதேப்ப்ய: ஏதம் பலிம் ததாமி' என்று ஒரு தடவை சொல்லி பூதபலியைப் போடவேண்டும். அதன்மேல் எள்ளும் ஜலமும் விட்டுக் கலந்துவிட வேண்டும். 15 ||

பிறகு வாஹகர்கள் பிரேதத்தைத் தூக்கும்போது பிரேதத்தைப் பார்த்து இந்த மந்திரத்தைச் சொல்ல வேண்டும்.

ஆயுர் விச்வாயு: பரிபாஸதி த்வா பூஷா த்வா பாது ப்ரபதே புரஸ்தாத் । யத்ராஸதே ஸுக்ருதோ யத்ர தே யயுஸ்தத்ர த்வா தேவஸ்ஸவிதா ததாது ॥

மூன்றாவது கால்வழி சென்றதும் அக்னியைக் கீழே வைத்து அக்னிக்கு வடக்கில் தெற்கு நுனியாக தர்ப்பைகளைப் பரப்பி அவற்றின் மேல் 'ஸர்வஸ்ய ப்ரதிசீவரீ' என்ற மந்திரத்துடன் பிரேதத்தைத் தெற்கில் தலையிருக்கும்படி வைத்துத் தெற்குப் புறத்திலிருந்து மண் கட்டிகளை எடுத்து அதில் சருவை வைக்கவேண்டும்.

ஒரே வஸ்திரத்துடன் வலதுபுறம் கேசத்தை முடிந்து இடது புறம் விரித்து வலது துடைகளைத் தட்டிக்கொண்டு வஸ்திர நுனியால் விசிறிக் கொண்டு (ஸ்திரீகளும்) புருஷர்களும் சிறியவர்களை முன்னிட்டு கர்த்தாவுடன் 'அபந: சோசுசத்' எனும் மந்திரத்தைச் சொல்லி மூன்று தடவை அப்பிரதக்ஷிணமாகச் சுற்ற வேண்டும். பிறகு இடது புறம் கேசத்தை முடிந்து வலது பக்கம் விரித்து இடது துடைகளைத் தட்டிக் கொண்டு வஸ்திர நுனியால் வீசாமல் 'அபந, சோசுசத்' எனும் மந்திரத்தைச் சொல்லி மூன்று தரம் பிரதக்ஷிணமாகச் சுற்ற வேண்டும். பிறகு கர்த்தா முன் போல் மண் கட்டிகளின் மேல் மௌனமாக எள்ளும் ஜலமும் விட்டு சரு முழுவதையும் எடுத்து அதை மூன்று பாகமாக்கி மண் கட்டிகளின் மேல் 'பதி வாஸிப்ப்யோ பூதேப்ப்ய: ஏதம் பலிம் ததாமி' என்று ஒரு தடவை சொல்லி பூதபலி வைத்து அதன் மேல் எள்ளும் ஜலமும் விட்டுக் கலந்து விடவும். 16 ॥

பிறகு கர்த்தா சருச்சட்டியை உடைத்துவிட வேண்டும் - உடைசல் ஓடுகளில் தண்ணீர் தேங்காதபடி சுக்கலாக உடைக்க வேண்டும். பிறகு ஜலத்தைத் தொடவேண்டும்.

அதன் பின் வாஹகர்கள் மந்திரமேதுமில்லாமல் பிரேதத்தைத் தூக்கிக் கொள்ள வேண்டும். முன்பு மூன்று இடங்களில் தூக்கும்போது மந்திரம் இருந்ததெனினும் இப்போது நாலாவது தடவை மௌனமாகவே பிரேதம் எடுக்கப்படுகிறது என்று வியாக்கியானம். சிலர் முன்பு அவர்கள் பேசிக்கொண்டு போனாலும் இனி மௌனமாகப் போக வேண்டும் என்று கூறுகிறார்கள். அந்த பக்ஷத்தில் வாஹகர்கள் தூக்கும்போது பிரேதத்தை நோக்கி 'ஆயுர் விச்வாயு: + ததாது' என்ற மந்திரத்தை ஜபிக்க வேண்டும்.

பிறகு வாஹகர்கள் நாலாவது கால்வழி கடந்து தகனம் செய்யும் இடத்திற்கு வந்ததும் மேற்குப் பக்கத்தில் பிரேதத்தை தெற்குப் புறம் தலையிருக்கும்படி வைக்க வேண்டும். கர்த்தா தகன தேசத்திற்கு முன்பு அக்னியை வைக்க வேண்டும். வாஹகர்களும் கர்த்தாவும் வடக்கு நோக்கிச் சில அடிகள் சென்று திரும்ப வேண்டும். 17 ||

பிறகு கர்த்தா மயானத்தில் சிதை அடுக்கத் தகுதியானதும் போதுமானதுமான இடத்தைப் பச்சைப் பலாசக் கொத்துகளாலோ வன்னிக் கொத்துகளாலோ பெருக்கிப் பரிசுத்தம் செய்ய வேண்டும். அதற்கு மந்திரம்: 'அபேதவீதவிச ஸர்ப்பதாதோ யேஸ்த்ரஸ்த்த புராணா யேச நூதனா: அதாதிதம் யமோ வஸானம் ப்ருதிவ்யா அக்ரந்நிமம் பிதரோ லோகமஸ்மை' என்பது.

பெருக்கிய கொத்துகளைத் தெற்கே எறிந்துவிட்டு ஜலத்தைத் தொடவும்.

நடுவில் சில்லரை நாணயம் வைத்துச் சில்லரை வைத்த இடத்தில் தெற்கு நுனியாக தர்ப்பைகளைப் பரப்பி அந்த தர்ப்பைகளின் மேல் தெற்கு நுனியாக யாகத்திற்குத் தகுதியான கட்டைகளால் சிதையை அடுக்கிச் சிதைக்குக் கிழக்கில் பரிசுத்தம் செய்யப்பட்ட பாகத்தில் ஏதோ ஒரு

இடத்தில் வலதுபுறமிருந்து கிழக்கு நோக்கி மூன்று கோடுகளும், வடக்கு நோக்கி மூன்று கோடுகளும் வரைந்து அக்னியை ஸ்தாபித்துக் கிழக்கில் ஜலம் வைத்து அக்னியை எரியவிட்டு கிழக்கு நுனியான தர்ப்பைகளால் அக்னியையும் சிதையையும் முன்னாலிருந்து தெற்குக் கோடிவரை அப்ரதக்ஷிணமாக பரிஸ்தரணம் செய்யவும். வடக்கில் தர்ப்பை நெய்க்கிண்ணம் ஆகியவற்றைத் தனித்தனியாக வைக்கவும். 18 ||

பாடைக்குக் கட்டிய கயிறுகளை அறுத்துக் கீழே போட்டு அவற்றின் மேல் பிரேதத்தை மல்லாந்து தெற்குப்புறம் தலை இருக்கும்படி படுக்க வைத்துப் பாடையை நாசம் செய்துவிட வேண்டும்.

இரண்டு தர்ப்பையால் செய்த பவித்திரத்தால் வடக்கு நுனியாகக் கிழக்கு நோக்கி, மூன்று தடவை ப்ரோக்ஷணீ தீர்த்தத்தைச் சுத்தி செய்து பாத்திரங்களை நிமிர்த்தி வைக்கவும். || 19 ||

பிரேதத்தின் கைக் கட்டை விரல்களையும் கால் கட்டை விரல்களையும் சேர்த்துக் கட்டியிருந்ததை அவிழ்த்து சவத்தையும் பாத்திரங்களையும் அடுக்கிய சிதையையும் எல்லாவற்றையும் வரிசையாக ஜலத்தால் மூன்று தடவை புரோக்ஷித்து ஆஜ்யஸம்ஸ்காரம் ஆகியவற்றை க்ருஹ்ய ஸூத்ர முறைப்படி செய்துகொண்டு தெற்குப் பக்கம் மத்தியில் தொடங்கி அப்பிரதக்ஷிணமாக அக்னியை மட்டும் பரிஷேசனம் செய்து இரு கைகளையும் 'ஸுவர்ணம்' என்ற மந்திரத்தால் அலம்பிக்கொள்ளவும்.

ஸுவர்ணம் ஹஸ்தாதாததானா ம்ருதஸ்ய ச்ரியை ப்ரஹ்மணே தேஜஸே பலாய । அத்ரைவ த்வமிஹ வயம் ஸுசேவா விச்வா ஸ்ப்ருதோ அபிமாதீர் ஜயேம ||

(மந்த்ர ஜபம் ஒரே தடவை)

பிறகு வாஹகர்கள் பிரேதத்தைத் தெற்குப்புறம் தலையிருக்கும்படி கயிறுகளுடன் சிதைமேல் வைக்க வேண்டும். பிறகு பிரேதத்தின் ஏழு பிராணஸ்தானங்களில் வாய், வலது கண், இடது கண், வலது காது, இடது காது, வலது மூக்கு, இடது மூக்கு ஆகியவற்றில்

ஏழு நாணயங்களை வரிசையாக வைக்க வேண்டும்.

அதில்லாவிட்டால் நெய்த் துளிகளைச் சொட்ட விடவும். பிறகு நியமம் ஏதுமின்றி ஞாதிகளும் கர்த்தாவும் பூணுலை இடமாகப் போட்டுக் கொண்டு 'எள்ளும் அரிசியும் பிரேதத்தின் வாயில் பிதிருதீர்த்தம் விடும் ரீதியில் கையை வைத்துக் கொண்டு போட வேண்டும். 20 ||

பிறகு கர்த்தா அக்னியை மீதி விடாமல் எடுத்துக் கொண்டு சிதையின் கிழக்குப் புறத்தில் மேற்கு நோக்கி நின்று கொண்டு பிரேதத்தின் மார்பில் பின் வரும் மந்திரங்களைச் சொல்லி அக்னியை இடவேண்டும்.

''மைந-மக்னே விதஹோ, மாSபிசோசோ மாSஸ்ய த்வசம் சிக்ஷிபோ மா சரீரம்। யதா ச்ருதம் கரவோ ஜாதவேதோ Sதேமேனம் ப்ரஹிணுதாத் பித்ருப்ப்ய:। ச்ருதம்யதா கரஸி ஜாதவேதோ Sதேமேனம் பரிதத்தாத் பித்ருப்பய:। யதா கச்சாத்யஸுநீதிமேதா மதா தேவானாம் வசனீர்ப்பவாதி'' || 21 ||

பிறகு சிதையின் வடக்குப்புறம் தெற்கு நோக்கி நின்று கொண்டு உபஸ்தான மந்திரத்தைச் சொல்ல வேண்டும்.

ஸூர்யம் தே சக்ஷுர் கச்சது வாதமாத்மா த்யாஞ்ச கச்ச ப்ருதிவீச தர்மணா । அபோவா கச்ச யதி தத்ர-தே ஹித மோஷதீஷு ப்ரதிஷ்ட்டா சரீரை: ॥ 22 ॥

பிறகு சிதையின் மேற்கில் கிழக்கு நோக்கி நின்று கொண்டு ஸ்ருவத்தால் பின்வரும் ஒன்பது ஆஹுதிகளைச் செய்யவேண்டும்.

ய ஏதஸ்ய பதோ கோப்தாரஸ்தேப்ப்ய: ஸ்வாஹா । கோப்த்ருப்ப்யோ அக்னிப்ப்ய இதம் ॥ ய ஏதஸ்ய பதோ ரக்ஷிதாரஸ்தேப்ப்ய: ஸ்வாஹா । ரக்ஷித்ருப்ப்யோ S க்னிப்ப்ய இதம் ॥ ய ஏதஸ்ய பதோ பிரக்ஷிதாரஸ் தேப்ப்ய: ஸ்வாஹா ॥ அபிரக்ஷித்ருப்ப்யோ Sக்னிப்ப்ய இதம்॥

ஆக்க்யாத்ரே ஸ்வாஹா। ஆக்க்யாத்ரே Sக்னய இதம்॥ அபாக்க்யாத்ரே ஸ்வாஹா। அபாக்க்யாத்ரே Sக்னய இதம்॥ அபிலாலபதே ஸ்வாஹா। அபிலால பதே Sக்னய இதம்॥

அபலாலபதே ஸ்வாஹா। அபலாலபதே அக்னய இதம்॥ அக்னயே கர்மக்ருதே ஸ்வாஹா॥ கர்மக்ருதே அக்னய இதம்॥ யமத்ர நாதீமஸ்தஸ்மை ஸ்வாஹா அநதீயமானாய அக்னய இதம்॥

உபவீதீ । ஸம்ப்பாவித - ஸமஸ்த - தோஷ - ப்ராயச் சித்தார்த்தம் ஓம் பூர்ப்புவஸ்ஸுவ: ஸ்வாஹா । ப்ரஜா பதய இதம் ॥

ப்ராசீனாவீதீ । ஸ்ருவமக்னௌ ப்ரஹரேத் ॥

(ஸ்ருவத்தையும் அக்னியில் போட்டு விடவும்). அக்னியை அப்பிரதக்ஷிணமாகப் பரிஷேசனம் செய்யவும். ॥ 23 ॥

பிறகு எரிமூட்டின இடத்திற்கு மேற்கில் நாவையடக்கி மௌனமாகக் கிழக்கு நோக்கி உட்கார்ந்து எரியும் பிரேதத்தை நோக்கி 'ப்ரகேதுனா' என்று தொடங்கும் ஒன்பது மந்திரங்களையும் ஜபிக்க வேண்டும். ஒவ்வொரு ருக்கின் பாதி முடிந்ததும் ஓங்காரத்தை மூன்று மாத்திரை நீட்டி உச்சரித்து ஒரே சுருதியில் துதிக்க வேண்டும் (உதாத்தம் ஸ்வரிதம் முதலிய ஸ்வரம் கிடையாது.)

ப்ரகேதுனா ப்ருஹதா பாத்யக்னிராவிர் - விச்வானி வ்ருஷபோ ரோரவீதி। திவச்சிதந்தா துபமா முதா நடபாமுபஸ்த்தே மஹிஷோ ஸ்வர்த்தோ (3.) மிதந்த ஏகம பர ஊத ஏகம் த்ருதீயேந ஜ்யோதிஷா ஸம்-விசஸ்வ ॥

ஸம்வேசநஸ்தனுவை சாருரேதி ப்ரியோ தேவானாம் பரமே ஸதஸ்த்தோ (3)ம் நாகே ஸுபர்ணமுபயத் பதந்தம் ஹ்ருதா வேநந்தோ அப்ப்யசக்ஷத த்வா ॥

ஹிரண்பக்ஷம் வருணஸ்ய தூதம் யமஸ்ய யோநௌ சகுனம் புரண்யோ (3) மதித்ரவ ஸாரமேயௌ ச்வா நௌ சதுரக்ஷௌ சபலௌ ஸாதுனா பதா ॥

அதா பித்ரூன் ஸுவிதத்ராம் அபீஹி யமேன யே ஸ்தமாதம் மதந்தோ (3)ம் யௌ தே ச்வாநௌ யமரக்ஷி தாரௌ சதுரக்ஷௌ பதிரக்ஷீ ந்ருசக்ஷஸா ॥

தாப்ப்யாம் ராஜன் பரிதேஹ்யேநம் ஸ்வஸ்தி சாஸ்மா அநமீவஞ்ச தேஹோ (3) முருணஸா வஸூ த்ருபாவுலும்பலெள யமஸ்ய தூதெள சரதோ வசாம் அனு ||

தாவஸ்மப்ப்யம் த்ருசயே ஸூர்யாய புனர்-தத்தா வஸூமத்யேஹ பத்ரோ (3)ம் ஸோம ஏகேப்ப்ய: பவதே க்ருதமேக உபாஸதே || யேப்ப்யோ மது ப்ரதாவதி தாம்ச்சிதேவாபி கச்சதோ (3)ம் யே யுத்த்யந்தே ப்ரத நேஷூ சூராஸோ யே தனுத்யஜ: ||

யே வா ஸஹஸ்ரதக்ஷிணாஸ் தாம்ச்சிதேவாபி கச்சந்தோ (3)ம் தபஸாயே அனாத்ருஷ்யாஸ் தபஸா யே ஸூவர்க்கதா: ||

தபோ யே சக்ரிரே மஹத்தாம்ச்சிதேவாபி கச்ச தோம் || 24 ||

பிறகு எரி மூட்டின இடத்திற்கு மேற்கில் வடக்கு நோக்கி மூன்று வாய்க்கால்கள் மாதிரி - கிழக்கு நடுமேற்கு வரிசையாக - வெட்டி அவற்றில் கற்களையும் மணலையும் போட்டு மூன்று அல்லது ஐந்து - இரட்டைப் படையில்லாமல் குடம் தண்ணீரைக் கொட்டி அவற்றில் வயதில் சிறியவர் ஆரம்பித்து வரிசையாக ஞாதிகள் முழுகுவதாக பாவித்துப் புரோக்ஷணம் செய்துகொள்ள வேண்டும்.

அச்மன்வதீ ரேவதீஸ்ஸ ரபத்த்வ - முத்திஷ்ட்டத ப்ரதரதா ஸகாய:| அத்ராஜஹாம்யே அஸந்ந சேவா: சிவான் வய-மபிவாஜானுத்தரேம||

வாய்க்கால்களுக்கு மேற்கில் இரண்டு பலாசக்கிளைகளையோ வன்னிக்கிளைகளையோ - முதலில் வடக்கிலும் பிறகு தெற்கிலுமாக அவற்றின் உச்சியில் தர்ப்பையாலான தோரணத்தைக் கட்டி அவற்றின் மத்தியில் வயதில் சிறியவரை முன்னிட்டு ஞாதிகள் மந்திரத்துடன் செல்ல வேண்டும்.

(மந்த்ரம்) யத்வை தேவஸ்ய ஸவிது: பவித்ரம் ஸஹஸ்ர - தாரம் விததமந்தரிக்ஷே। யேநாபுனாதிந்த்ர மனார்த்த மார்த்யை தேனாஹம் மாம்ஸர்வதனும் புனாமி॥

பிறகு கர்த்தா அந்தக் கிளைகளை எடுத்து ஒடித்து தெற்குத் திக்கில் துண்டு துண்டாக எறிந்துவிட வேண்டும்.

யா ராஷ்ட்ராத் பன்னாதபயந்தி சாகா அபிம்ருதா ந்ருபதி - மிச்சமானா:। தாதுஸ்தாஸ் ஸர்வா: பவனேன பூதா: ப்ரஜயாசஸ்மான் ரயயா வர்ச்சஸா ஸம்ஸ்ருஜாத ।

பிறகு ஞாதிகளும் கர்த்தாவும் உபவீதமாகப் பூணூலை தரித்து ஜலத்தைத் தொட்டு விட்டு ஆதித்யனை ஸ்தோத்ரம் செய்யவேண்டும்.

(மந்த்ரம்) உத்வயம் தமஸஸ் பரி பச்யந்தோ ஜ்யோ திருத்தரம்। தேவம் தேவத்ரா ஸூர்யமகன்ம ஜ்யோ திருத்தமம் ॥ 26 ।

பிறகு எல்லோரும் பூணூலை இடமாகப் போட்டுக் கொண்டு சிறியவர்களை முன்னிட்டுக் கொண்டு சவம் எரியுமிடத்தைப் பாராமலேயே ஸ்நானத்திற்காக நீர் நிலைக்குச் சென்று அதில் இறங்கித் தலைமுழுகி ஸ்நானம் செய்ய வேண்டும்.

(மந்த்ரம்) தாதா புனாது ஸவிதா புனாது। அக்னேஸ் தேஜஸா ஸூர்யஸ்ய வர்ச்சஸா॥

பிறகு வயதானவர்கள் துக்கத்திற்கான அடையாளங்களைக் கைக்கொள்வார்கள்.

கர்த்தா பூணூலை இடமாகப் போட்டுக்கொண்டு விரிதலையுடன் தெற்கு நோக்கி நமஸ்காரம் செய்ய வேண்டும். 27 |

அத ப் ஹ்மதண்ட|| அசேஷே + ஸ்வீக்ருத்ய ப்ரா சீனாவீதீ|| - கோத்ரஸ்ய - சர்மண: ப்ரேதஸ்ய மம பிது: மரணகாலே தஹனகாலே ச திதிவார - நக்ஷத்ர - யோக கரணை: யோ தோஷ: + த்வாரா அக்ஷய்ய புண்ய லோகாவாபத்யர்த்தம் மயா அமுகாக்னினா க்ருதம் பைத்ருமேதிகம் கர்ம யதா சாஸ்த்ரம் பூயாதிதி பவந்தோ ஽னுக்ருஹ்ணந்து||

இவ்வாறு ஸங்கல்பயம் செய்து பிரார்த்தித்து சக்திக்கு இயைந்தவாறு நிறைவான தக்ஷிணை அளித்து கர்த்தா ஸ்நானம் செய்யவேண்டும்.

எல்லோருமே வீடு சென்றதும் வாயிற்படியில் நெய் அருந்துதல், அக்னியைத் தொடுதல், வேப்பிலை சாப்பிடுதல் கல்லின்மேல் நிற்றல் முதலிய வழக்கம் எதெது உண்டு என்று ஸ்திரீகள் கூறும் ஸம்பிரதாயப்படி அததைச் செய்ய வேண்டும்.

நக்ன ப்ரச்சாதனச்ராத்தம் || கர்த்தா க்ஷவரத்திற்குப் பின் ஸ்நானம் செய்து ஈரவஸ்திரத்துடன் பவித்ரமணிந்து ஓம் பூ: + ஸ்ரீகோவிந்த + புண்யதிதௌ ப்ராசீனா வீதீ - கோத்ரஸ்ய - சர்மண: ப்ரேதஸ்ய மம பிது: ப்ரதமே஽ஹனி நக்னத்வ நில்ருத்த்யர்த்தம் நக்னப்ரச்சா தன ச்ராத்தம் ஆமரூபேண கரிஷ்யே என்று ஸங்கல்பம்.

அஸ்மின் நக்னப்ரச்சாதனச்ராத்தே - கோத்ரஸ்ய- இதமாஸனம் | ஸகலாராதனை: ஸ்வர்ச்சிதம் || ஹிரண்ய கர்ப்ப + ப்ரயச்ச மே | 'நக்னப்ரச்சாதன வஸ்த்ரம் லஜ்ஜா - து:க்கவிமோசனம் | ப்ரேத த்ருப்திகரம் நித்யம் மன: சாந்திம்

ப்ரயச்ச மே ।। - கோத்ரஸ்ய + ப்ரதமேச ஹனி நக்னத்வ நிவ்ருத்த்யர்த்தம் இதமாமம் தசதின பர்யாப்தம் உதகும்ப ஸஹிதம் ஸவஸ்த்ரம் ஸஹிரண்யம் ஸதீபம் ஸக்ருதம் தில - மாஷ-முத்க - லவண - வ்யஞ்ஜன - ஸஹிதம் ஸதக்ஷிணாகம் துப்ப்யமஹம் ஸம்யரததே ।।

இவ்வாறு கொடுத்துப் பவித்ரத்தைக் கழற்றிப் போட்டு விட்டு ஸ்நானம் செய்து விட்டு ஞாதிகள் தொடர தீபத்துடன் வீட்டிற்குள் செல்ல வேண்டும்.

தகனம் முடிந்த பிறகு வபனம் செய்து கொள்ள வேண்டும்.

## வபனம் (க்ஷௌரம்)

1. தஹனம் செய்தவன் அதற்கு அங்கமான வபனம் செய்து கொள்ளவேண்டும். தஹனாங்க வபனம் பிள்ளைகள் எல்லோரும் செய்துகொள்ள வேண்டும். இரவில் செய்துகொள்ள வேண்டி இருந்தால் ஜ்யேஷ்டன் மட்டும் அப்பொழுது செய்துகொண்டு மற்றவர்கள் மறுநாள் செய்துகொள்வது என்பது சில பெரியோர்களின்-அபிப்ராயம். 3 நாள் தீட்டுக்காரர்களான ஸமானோதகர்களுக்கு வபனம் கிடையாது.

2. தன் தகப்பனார் உயிரோடு இருப்பவர்களுக்கு வேறு யார் இறந்தாலும் வபனம் இல்லை.

3. 10 நாள் தீட்டுக்காரர் 10ஆவது நாளிலும், பங்காளியல்லாத 3 நாள் தீட்டுக்காரர் 3ஆவது நாளிலும் வபனம் செய்துகொள்ள வேண்டும். ஆனால் இது எவர் விஷயத்தில் என்பது கீழே விவரிக்கப்படுகிறது:

a) பத்துநாள் பங்காளிகள் விஷயத்தில், இறந்தவர் தன்னைவிட வயதில் பெரியவரானால் வபனம் உண்டு.

மாமா, மாமி, அத்தை, சித்தி இவர்கள் விஷயத்திலும் இறந்தவர்கள் தன்னைவிட வயதில் மூத்தவரானால் வபனம் உண்டு.

b) தாயின் தந்தை, தாயின் தாய், பெரியம்மா, ஸீமந்த புத்ரியான ஸஹோதரி ஆகியவர் விஷயத்திலும் வபனம் உண்டு. ஸ்வீகாரம் போனவர்க்கு தன்னைப்பெற்ற தாய், தந்தை விஷயத்தில் வபனம் உண்டு.

4. ஒருவர் கீழ்க்கண்டவர்களுக்கு க்ருத்யம் செய்தால் இறந்த அந்த நபர் இவருக்கு வயதில் சிறியவரானாலும் இவருக்கு வபனமுண்டு: தகப்பன் வழி சிற்றப்பா, மாமா, மாமி, மாமனார், மாமியார், அத்தை, சித்தி, மாற்றாந்தாய், தகப்பன்வழி சித்தி, மதனி ஆகியோர்.

(மேற்படி நபர்கள் விவாஹம் ஆகாத பெண்கள் உபநயனம் ஆகாத ஆண்களாக இறந்தால் கிருத்யம் செய்தாலும் வபனமில்லை. தஹானாங்க வபனமும் இல்லை.)

5. மூன்றுநாள் பங்காளிகள் விஷயத்தில் வபனம் இல்லை. கிருத்யம் செய்தால் இறந்தவர் வயதில் மூத்தவர்களாக இருந்தால் வபனம் உண்டு.

6. தீட்டைக் காலம் கடந்து கேட்டால் வபனம் இல்லை என ப்ராசீனாசார ஸங்க்ரஹம் கூறுகிறது.

7. தீக்ஷையில் வபனம் இல்லை; ஆனால் தாய் தந்தை இறந்தால் தீக்ஷையிலும் வபனம் உண்டு. (குறிப்பு: தீக்ஷை என்பது கர்ப்பதீக்ஷை, விவாஹ தீக்ஷை, உபநயன தீக்ஷை, மாத்ரு பித்ரு தீக்ஷை எனப் பல வகைப்படும்.)

கர்ப்ப தீக்ஷை: பத்னியின் முதல் கர்ப்பத்தின்போது 4-ஆவது மாதம் முதல்; இரண்டாவது கர்ப்பத்துக்கு 5ஆம் மாதம் முதல், மற்ற கர்ப்பத்துக்கு 7ஆவது மாதம் முதல் புருஷன் க்ஷௌரம் செய்து கொள்வதில்லை.

விவாஹ, உபநயன தீக்ஷை: இவை நடந்தபின் முறையே 1 வருஷம் (அ) 6 மாதம்.

மாத்ரு, பித்ரு தீக்ஷை: மாதா, பிதாக்களின் மரணத்திற்குப் பின் 1 வருஷம். இந்த தீக்ஷையின் நடுவே பத்னி ப்ரஸவித்தால் வபனம் உண்டு.

8. a) வெள்ளிக்கிழமையில் வபனம் செய்துகொள்ளக் கூடாது. அதற்கு முதல் (அ) மறுநாள் செய்து கொள்ளலாம். ஆனால் தாய் தகப்பனார் விஷயத்தில் வெள்ளிக் கிழமையானாலும் வபனம் உண்டு.

b) வெள்ளிக்கிழமையில் இறப்பு காரணமான வபனம் செய்து கொள்ளக்கூடாது. அதற்கு முதல் நாளே செய்துகொள்ள வேண்டும். வெள்ளிக்கிழமையன்றே க்ஷவரம் பண்ணிக்கொள்ள வேண்டிய தீட்டு தெரிய வந்தால் மறுநாள் நிஷேதமில்லாத நாளாக இருந்தால் (ஏகாதசி, அமாவாஸ்யை போன்ற வ்ரத தினங்களாக இல்லாமலிருந்தால்) மறுநாள் செய்துகொள்ள வேண்டும். க்ஷௌர நிஷேதமான நாட்களாக இருந்தால் க்ஷௌரம் கிடையாது.

9. a) அனேக தீட்டுக்கள் சேர்ந்தாலும் வபனம் ஒன்றே.

b) வபனம் செய்துகொள்ள வேண்டிய தீட்டை வபனம் செய்துகொள்ள வேண்டிய தினத்தில், சாப்பிட்ட பிறகு கேள்விப்பட்டால் வபனம் பண்ணிக்கொள்கிற வழக்கம் இல்லை.

10. ஸபிண்டீகரணத்துக்குப் பிறகு தீக்ஷை அவச்யமில்லை; அநுஷ்டித்தால் நல்லது; இல்லாவிட்டாலும் தோஷமில்லை.

11. a) மாமனார், மாமியார் இறந்தால் ஒருநாள் தீட்டுக்காத்த பிறகு மாப்பிள்ளைக்கு வபனம் கிடையாது.

b) ஸந்ததியும் இல்லாமல், மனைவியும் இறந்த பிறகு மாமனார் மாமியார் இறந்தால் ஒரு நாள் தான் தீட்டு. அப்படி ஒரு நாள் தீட்டு காத்த பிறகு மாப்பிள்ளைக்கு வபனம் கிடையாது.

*12. இறந்தவர் தனக்கு வயதில் மூத்தவரா இல்லையா என்ற ஸந்தேஹம் ஏற்பட்டால் வபனம் செய்துகொள்வது நல்லது.*

## கர்த்தாவின் க்ரமம்

*இறந்த நபருக்குக் கர்மா செய்கின்ற அதிகாரம் அதன் வரிசையில் தரப்படுகிறது. மேலே சொன்னவர் இல்லையென்றால் அதன் கீழே தரப்பட்டவர்களைக் கொண்டு நடத்த வேண்டியது.*

*1. தன் வயிற்றில் பிறந்த பிள்ளை (ஔரஸன்); (பிள்ளைகள் பலர் இருந்தால் மூத்தவன்)*

*இறந்தவருக்கு ஒன்றுக்கு மேற்பட்ட மனைவியர் இருந்து எல்லோருக்கும் பிள்ளைகள் இருந்தால் வயதில் பெரியவனே மூத்தவன்.*

*ஒருவர் தனக்குப் பிள்ளையில்லை என்று ஸ்வீகாரம் செய்து கொண்ட பின் தனக்கே பிள்ளை பிறந்தால், தனக்குப் பிறந்த பிள்ளையே கர்மாதிகாரி.*

*2. ஸபத்நீ புத்ரன் (சக்களத்தியின் பிள்ளை)*

*3. புத்ரிகா புத்ரன் (பெண் ஸந்ததி மட்டுமே உள்ள ஒருவன், பெண்ணை விவாஹம் செய்து கொடுக்கும்பொழுது இவளுக்குப் பிறக்கும் பிள்ளையையே என் புத்ரனாக பாவிப்பேன்'' என்று ஸங்கல்பம் செய்து பிறக்கும் பெண் வயிற்றுப் பேரன்).*

*4. ஸ்வீகாரபுத்ரன் 5. பௌத்ரன் 6. ப்ரபௌத்ரன் (பேரனின் பிள்ளை)*

*7. ஸொத்தை அடைந்த பெண் வயிற்றுப் பேரன் (தனஹாரி தௌஹித்ரன்)*

8. தௌஹித்ரன். இவர்கள் ஸ்த்ரி புருஷர் இருவருக்கும் கர்த்தா.

9. பத்னி (பலரானால் மூத்தவள்) - பர்த்தாவுக்குக் கர்த்தா.

10. பர்த்தா (புருஷன்) - பத்னிக்குக் கர்த்தா.

11. பெண் (ஸ்த்ரீ புருஷாள் இருவருக்கும்)

12. ஸஹோதரன்

13. ஸஹோதரன் பிள்ளை.

14. பின்னோதர ப்ராதா. 15. பின்னோதர ப்ராதாவின் பிள்ளை 16. பர்த்தாவின் ப்ராதா 17. பர்த்தாவின் ப்ராதாவின் பிள்ளை 18. பிதா 19. மாதா 20. நாட்டுப்பெண் 21. பௌத்ரி 22. தௌஹித்ரி 23. பௌத்ரனின் பத்னி 24. பகினி (ஸஹோதரி) 25. மருமான் 26. ஸபிண்டன் 27. ஸமானோதகன் 28. மாத்ரு ஸபிண்டன் 29. மாத்ரு ஸமானோதகன் 30. ஸகோதரன் 31. சிஷ்யன் 32. ரித்விக் 33. ப்ருத்யன் 34. குரு 35. ஆசார்யன் 36. ஸஹாத்யாயி (உடன் பயின்றவன்) 37. மாப்பிள்ளை 38. நண்பன்.

குறிப்பு: ஆசார்யனுக்கு கர்மா விஷயத்தில் கர்த்ருக்ரமத்தில் சிஷ்யன் தௌஹித்ரனுக்கு அடுத்ததாகக் கருதப்படுகிறான். அநேகம் சிஷ்யர்கள் இருந்தால் தனத்தை அடைந்த சிஷ்யன் ஆசார்யனுக்குக் கர்மா செய்யலாம். இதை ஆபஸ்தம்ப ஸூத்ரம் யாக்ஞவல்கிய ஸ்ம்ருதி முதலியவற்றை மேற்கோள்களாகக் காட்டி வைதிக ஸார்வபௌமர் பித்ருமேத ஸார ப்ரச்னத்தில் விரிவாக விளக்கியுள்ளார்.

சில பொது விஷயங்கள்

1. ஆசௌச காலத்திலும் கிரஹண தர்ப்பணம் உண்டு.

2. ஆசௌச காலத்தில் அமாவாஸ்யை மாஸப்பிறப்பு தர்ப்பணங்கள், சிரார்த்தம் முதலியவை செய்யக்கூடாது.

3. ஆசௌச காலத்தில் ஆராதனம், கோவிலுக்குப் போவது கூடாது.

4. ஆசௌச காலத்தில் ஸந்த்யாவந்தனம் உண்டு; ஆனால் மந்த்ரமில்லாமல் ப்ராணாயாமம் பண்ணி, மற்றவற்றை மனதில் மந்த்ரங்களை உச்சரித்துச் செய்ய வேண்டும். ருஷி, சந்தஸ் முதலியவை கிடையாது.

5. பர்த்தாவுக்கு உண்டான தீட்டுக்கள் எல்லாம் பத்னிக்கும் உண்டு.

6. பத்னிக்கு மட்டும் சில தீட்டுக்கள் உண்டு; இவை பர்த்தாவுக்கு இல்லை.

7. தீட்டுள்ளவன் இல்லாதவனைத் தொட்டால் குறைந்த பட்சம் ஸ்நானம் செய்ய வேண்டும்.

8. ப்ரஹ்மசாரி, தீட்டுள்ளவனின் அன்னத்தைச் சாப்பிட்டால் பத்து நாட்கள் அசுத்தி உண்டு.

9. ரஜஸ்வலைகளுக்கு மூன்று நாள் தீட்டு; பன்னிரண்டு நாட்களுக்கு முன் ரஜோதர்சனம் நேர்ந்தால் சௌசமாத்ரம். அதன் மேல் 17 நாள் வரை ஸ்நானத்தால் சுத்தி. பதினெட்டு நாட்ளுக்கு மேல் ஆனால் 3 நாள்.

10. ராத்ரியில் ஜனன, மரண ரஜோதர்சனங்கள் இரவு ஒன்றரை மணிக்கு முன் ஆனால் முதல் நாள் கணக்கு. பிறகு ஆனால் மறுதினமாகக் கொள்க. (சூரிய அஸ்தமனத்துக்குப் பிறகு ஏழரை மணி காலம் வரை முதல் நாள் என்றும் பிறகானால் மறுநாள் என்றும் கணக்கிட வேண்டும். சூரிய அஸ்தமனகாலம் அவ்வப்பொழுது வேறுபடும்; அதனால் கணக்கு சிறிது வேறுபடும்.)

இதையே சற்று வேறு விதமாகவும் குறிப்பிடலாம். அதாவது, உதயத்திற்கு பதினொண்ணே கால் நாழிகைக்கு முன் ஏற்பட்டால் முதல் நாள் முதல் கணக்கு; பிறகானால்

மறுநாள் முதல் கணக்கு. அதாவது சூரியோதயத்திற்கு நான்கரை மணி அவகாசத்துக்கு முன்பானால் முதல் நாள் என்றும் அதற்குப் பிறகானால் மறுநாள் கணக்கு என்றும் கொள்ளவும். (சூரிய உதயம் அவ்வப்பொழுது வேறுபடும். அதைக் கவனிக்கவும்.)

11. பிறந்த குழந்தை 10 நாளைக்குள் மரித்தால் கனனம் (புதைப்பது) ஸம்ஸ்காரம். 10 நாள் முதல் 2 வயது வரை கனனம் (புதைத்தல்) அதற்கு மேல் தஹனம்.

12. பிறப்புத் தீட்டை 10 நாள் கழித்துக் கேட்டால் தீட்டு கிடையாது.

13. ஒரு நாள் தீட்டை ஒரு நாள் கடந்தபின் எப்பொழுது கேட்டாலும் ஸ்நானம் மட்டில்

14. இரவில் தர்ப்பணம் செய்யக்கூடாது.

15. பக்ஷிணி என்பது இரு பகலும் ஒரு இரவும் கூடிய காலம் (அ) இரு இரவும் ஒரு பகலும் கூடிய காலம். அதாவது 90 நாழிகை அல்லது 36 மணி காலம் (ஒன்றரை நாள்).

16. வேண்டுமென்றே செய்துகொண்ட தற்கொலையானால் அமந்த்ரகமாக தஹனம். தஹனம் வரைதான் தீட்டு. ஒரு வருஷம் கழித்து ப்ராயச்சித்தம் செய்து கர்மாவை அநுஷ்டிக்க வேண்டும். அப்பொழுதுதான் ஜ்ஞாதிகளுக்கு 3-நாள் தீட்டு, தன்னையறியாமல் நேர்ந்த துர்மரணத்தில் அப்பொழுதே ப்ராயச்சித்தம் செய்து கர்மாவும், தீட்டும் அநுஷ்டிக்க வேண்டும்.

17. ஸந்யாசி சவத்திற்கு தோஷமில்லை.

18. ஸந்யாசி மரணத்தில் தீட்டில்லை.

19. மாதா பிதாக்களுக்குத் தவிர மற்றவர்களுக்கு வெள்ளிக்கிழமைகளில் ஸஞ்சயனம் செய்யக்கூடாது. ஆனால் மாதப் பிறப்பு அமாவாஸ்யை குறுக்கிட்டால் செய்யலாம்.

20. கர்மா மத்தியில் வஸ்த்ரம், பிண்டம், பாத்ரம், செம்பு, பாஷாணம் (கல்) காணாமல் போனால் புதியதாக ஸ்தாபித்து கடந்த பிண்டோதகங்களை மறுபடி செய்ய வேண்டியது.

21. மாதா பிதாக்கள் விஷயத்தில் 12 முதல் 17 நாள் வரை ஸபிண்டீகரணம் செய்ய நாள் பார்க்க வேண்டியதில்லை.

22. பன்னிரண்டு வயது முடியாத ப்ரஹ்மசாரிக்கு ஸபிண்டீகரணம் செய்வதில்லை; நாராயணபலி உண்டு. (உபநயனமாகாதவன் 12 வயதுக்கு மேல் இறந்தால் மந்த்ரமில்லாமல் ஸபிண்டீகரணம் முதலியவை செய்ய வேண்டும்.)

23. மாஸத்திற்கு ஒருமுறை செய்யும் ஸோதகும்பம் நின்று போனால் அதற்கு வேறுகாலமில்லை. விட்டது விட்டதுதான்.

24. ஊனமாஸிகங்கள் அந்த அந்தக் காலத்தில் செய்ய முடியாமல் நின்று போனால் மீண்டும் செய்ய முடியாது. 27 - ஆவது நாள் ஊனத்தை 27 முதல் 30 நாளுக்குள்ளும் 45 ஆவது நாள் ஊனத்தை 40க்கு மேல் 41, 43, 45 முதலிய ஒரு நாளிலும், ஆறாம் மாத ஊனத்தை 170 நாள்களுக்கு மேல் 180 நாள்களுக்குள்ளும், ஆப்தீக ஊனத்தை 340க்கு மேல் 355 நாள்களுக்குள்ளும் செய்ய வேண்டியது.

த்ரைபக்ஷிகம் என்பது 45ஆவது நாள் ஊனம். ஏகாதசி, வ்ரததினங்கள், வெள்ளிக்கிழமையில் செய்யக்கூடாது. மற்ற ஊனங்களையும் வெள்ளிக்கிழமை நந்தை (பிரதமை) ஷஷ்டி, ஏகாதசி, சதுர்த்தசி, ஸிநீவாலீ (சதுர்தசியோடு கூடிய அமாவாஸ்யை), கிருத்திகை, ஆயில்யம், பூரம், கேட்டை, மூலம், பூராடம், பூரட்டாதியிலும், ஏகாதசி முதலிய விரத தினங்களிலும் செய்யக்கூடாது. த்விபுஷ்கரம், த்ரிபுஷ்கரம் கூடாது.

த்விதியை, ஸப்தமி, த்வாதசி ஆகிய திதிகள், ஞாயிறு, செவ்வாய், சனி ஆகிய வாரங்கள், கிருத்திகா, புனர்வசு

உத்தரம், விசாகம், உத்தராடம், பூரட்டாதி ஆகிய நக்ஷத்ரங்கள் இவற்றில் இரண்டு சேர்ந்தால் த்விபுஷ்கரம்; மூன்று சேர்ந்தால் த்ரிபுஷ்கரம்.

தோஷமற்ற காலம் கிடைக்காவிட்டால் விதிக்கப்பட்ட காலத்தின் கடைசி தினத்தில் செய்ய வேண்டியது. ஊனமாஸிகங்களை மாஸிகத்திற்கு முன் அல்லது பின்னாகச் செய்யலாம்.

25. ஒரு மாதத்தில் இரண்டு திதிகள் வந்தால் பின் திதியில் சிராத்தம். பின் திதியில் ஸங்கிரமண தோஷம் வருமாயின் முன் திதியிலேயே சிராத்தம் பண்ண வேண்டும். இரண்டு திதியிலும் தோஷமிருந்தால் இரண்டாவது திதியில் செய்ய வேண்டும்.

26. ஒருவரது சிராத்தத்தில் அவரது ஜ்ஞாதிகள் நிமிந்த்ரணம் இருக்கக் கூடாது. அதே கோத்ரத்தைச் சேர்ந்தவர்களும் கூடாது.

27. பிதா, புத்ரன், ஒரே வயிற்றில் பிறந்த ப்ராதாக்கள் ஒரே நாளில் நிமிந்த்ரணம் இருக்கக் கூடாது. பத்னி பஹிஷ்டையானால் பர்த்தா நிமிந்த்ரணம் இருக்கக்கூடாது.

28. ஹோமத்துடன் செய்யும் சிராத்தங்களுக்கு தர்ப்பணம் உண்டு. (தகப்பனார் ஜீவித்திருக்கும் ஒருவன் செய்யும் சிராத்தத்தில் தர்ப்பணம் இல்லை.) இந்த தர்ப்பணம் ஒரு வர்கத்துக்கு மட்டில், மாதா பிதா சிராத்தங்களில் தர்ப்பணத்தை மறுநாள் செய்ய வேண்டும். இது பரேஹனி தர்ப்பணம் எனப்படும். (இப்பொழுது அன்றே செய்வது வழக்கத்தில் உள்ளது) மாதா பிதாக்களுக்கு அன்றே செய்வது சரி இல்லை. அது பரேஹனி தர்ப்பணமாகாது. அங்கதர்பணம் தான். மாதா பிதாக்கள் தவிர பிதாமஹன் முதலியவர்களுக்கு ச்ராத்த தினத்தன்றே தர்ப்பணத்தைச் செய்ய வேண்டும்.

29. அமாவாஸ்யையும் மாஸப்பிறப்பும் ஒன்று சேர்ந்தால் மாஸப்பிறப்புத் தர்ப்பணம் செய்ய வேண்டியது. அமாவாஸ்யை தர்ப்பணம் கிடையாது.

30. அமாவாஸ்யை, ப்ரத்யாப்திகம் ஒன்று சேர்ந்தால் ப்ரத்யாப்திகத்துக்குப் பிறகு அமாவாஸ்யை தர்ப்பணம். மாதப்பிறப்பு, ப்ரத்யாப்திகம் ஒன்று சேர்ந்தால் ஸங்க்ரமண தர்ப்பணத்தை முதலில் செய்துவிட்டு பிறகு ப்ரத்யாப்திக ச்ராத்தத்தைப் பண்ண வேண்டும்.

31. பிதாவின் ஸபிண்டீகரணத்திற்குப் பின் அமாவாஸ்யை முதலான தர்ப்பணங்கள் செய்ய வேண்டியது.

32. கிரஹண தர்ப்பணம் மிக விசேஷமானது. இதை விடக்கூடாது. சூரிய கிரஹணத்தில் முன் பாதியிலும் (பிடித்த உடனேயும்) சந்திர கிரஹணத்தில் பின் பாதியிலும் (விட ஆரம்பித்த பிறகும்) தர்ப்பணம் செய்ய வேண்டும்.

33. கன்யகையின் ஜனன மரணத்தில் மூன்று தலைமுறை வரை ஆசௌசம். புருஷப்ரஜை விஷயத்தில் ஏழு தலைமுறை. சிசு மரணத்தில் புதைத்தது முதல் தீட்டு கணக்கிட வேண்டும்.

34. ஒருநாள் என்பது 60 நாழிகை (பகல் 30, இரவு 30). பகல், இரவு காலங்களின் அளவுகள் கோடை, குளிர் காலங்களைப் பொறுத்தது. 30 நாழிகைக்கு அதிகமாகவோ (அ) குறைவாகவோ இருக்கும்.

35. சூரிய உதயத்தில் வாரம் (கிழமை) பிறக்கிறது.

36. ஒரு நாழிகை என்பது 24 நிமிஷம். ஒரு மணி என்பது இரண்டரை நாழிகை. ஒரு முகூர்த்தம் என்பது மூணே முக்கால் நாழிகை (அதாவது ஒன்றரை மணி காலம்). ஒரு ஜாமம் என்பது 3 மணி காலம் அதாவது ஏழரை நாழிகை. (சில நூல்களில் சில இடங்களில் முகூர்த்தம் என்பது 2 நாழிகை என்றும் உள்ளது.)

37. தீட்டு உள்ளவர் மற்றவர்களை ஸேவிப்பது கூடாது. தீட்டு உள்ளவர்களையும் மற்றவர் ஸேவிப்பது கூடாது.

38. தீட்டுக்காரர் வீட்டில் சாப்பிட்டாலும், வசித்தாலும் 10 நாட்களுக்கு தீட்டு உண்டு.

39. சிராத்த தினத்தில் துக்கம் கேட்கக்கூடாது.

40. தீட்டுத் தர்ப்பணத்தை வீட்டில் செய்யக்கூடாது. ஜலக்கரையில் செய்ய வேண்டும்.

41. ப்ரஹ்மசாரிகள் க்ருத்யம் செய்தால் மட்டும் உதகதானம், இல்லாவிடில் இல்லை.

42. பங்காளிகள் விஷயத்தில் தலைமுறைக் கணக்கு:

தான் (1), தன் பிதா (2), தன் பிதாமஹன் (3), தன் ப்ரபிதாமஹன் (4), ப்ரபிதாமஹனின் பிதா (5), ப்ரபிதாமஹனின் பிதா மகன் (6), ப்ரபிதாமஹனின் ப்ரபிதாமஹன் (7) ஆக ஏழு தலைமுறை. தன் வம்ச வழியில் மேற்குறிப்பிட்ட இந்த ஏழாவது நபர் கூடஸ்தர் (அ) மூலபுருஷர் எனப்படுவர். கூடஸ்தரின் ஆண் ஸந்ததிகள், அவர்களுக்கு பிறந்த ஆண் ஸந்ததிகள், தன்வரை உள்ள ஏழு தலைமுறை ஆண்களும் (அவர் மனைவியரும்) பத்து நாள் பங்காளிகள் (ஸாபிண்ட்யர்), (தன் மகனுக்கு மேற்படி மூலபுருஷன் விட்டு, மேற்குறிப்பிட்ட நபர் (2) ஐ கூடஸ்தராக கொள்ள வேண்டும்) பத்து நாள் பங்காளிகளில் பரஸ்பரம் பத்து நாள் தீட்டுண்டு. தனக்குக் கீழ் ஸந்ததி (ஏழு தலைமுறை வரை) ஸமானோதர் எனப்படுவர். இவர்கள் மூன்று நாள் தீட்டுக்காரர்கள். இதே வம்ச பரம்பரையில் உள்ள மற்றவர்கள் கோத்ர தாயாதர்கள் என்பதால் தீட்டுக்காப்பவர் அல்லர். (பெண்களுக்குத் தகப்பனார். அவர் தந்தை, தகப்பனின் பாட்டன் ஆகியவர் ஸபிண்டர்கள் எனப்படுவர்)

ஒவ்வொரு நபரும் தன் வம்ச வழியில் மேல் கீழ் தலைமுறையில் உள்ள (அ) இருந்த நபர்களை (அவர் மனைவி, ஆண் ஸந்ததி உட்பட) அறிவது அவசியம். அப்பொழுதுதான் பங்காளிகளால் ஏற்படும் தீட்டை நிர்ணயிக்க முடியும். தலைமுறை கூடஸ்தனிலிருந்து எண்ணப்பட வேண்டும்.

43. ப்ரஹ்மசாரி தன் தாய் தகப்பன் தவிர மற்றவர் சவங்களைச் சுமக்கக்கூடாது.

44. அதிக்ராந்த ஆசௌத்தில் வாஸோதகம் இல்லை.

45. ஜனன, மரணத் தீட்டிலும் ஏகாதசி, த்வாதசி விரதங்களை விடக்கூடாது.

46. கர்த்தா, ஸபிண்டீகரணத்துக்கு முன் சுபகார்யம் செய்யக்கூடாது.

47. தீட்டினால் நின்றுபோன மாஸிகத்தை தீட்டுப் போகும் தினத்தில் நடத்த வேண்டும்.

48. ஸ்த்ரீகள் செய்யும் சிராத்தங்கள் எதற்கும் - ஹோமம் கிடையாது என்பர் சிலர். மாமனார், மாமியார், பர்த்தா, தாய், தகப்பன் இவர்களுடைய சிராத்தத்தை ஸ்த்ரீகள் செய்யும்படி நேர்ந்தால் அந்த ச்ராத்தங்கள் த்ரிபுருஷோத்தேச்யகமாக, பார்வணமாக செய்ய வேண்டும் என்று மட்டும் ஸ்ம்ருதிகளில் கூறப்பட்டுள்ளது. ஹோமத்தைப் பற்றி கூறவில்லை. இதை நோக்கின் ஹோமம் வேண்டாம் என்று தோன்றுகிறது. ஆனால் சிஷ்டாசாரத்தில் பல பெரியோர்கள் மேற்படியோர் ச்ராத்தத்தில் ஹோமம் செய்தே வருகின்றனர். (இவை பஹிஷ்டையினால் நின்று போனால் ஐந்தாவது தினம் செய்ய வேண்டும்.)

49. சிராத்தம் தீட்டினால் நின்றுபோனால் தீட்டுப்போகும் தினத்தில் செய்ய வேண்டும். வேறு காரணத்தினால் (அ)

மறதியினால் விட்டுப்போனால் க்ருஷ்ணபக்ஷ ஏகாதசியிலாவது அமாவாஸ்யையிலாவது செய்ய வேண்டும்.

50. மஹாளய தர்ப்பணத்தை மஹாளய பக்ஷத்தில் பஞ்சமி முதல் அடுத்த பஞ்சமிக்குள் தகப்பனார் இறந்த திதியிலோ, வ்யதீபாதத்திலோ, கஜச்சாயையிலோ மஹாபரணியிலோ, மத்யாஷ்டமியிலோ, த்வாதசியிலோ செய்யவும். வேறு தினங்களானால் வெள்ளிக்கிழமை கூடாது. தன்னுடைய, தன் பத்நீயுடைய, ஜ்யேஷ்ட புத்ரனுடைய ஜந்ம நக்ஷத்ரங்களிலும் செய்யக்கூடாது. முடியாவிடில், கன்யா (புரட்டாசி) மாதத்திற்குள் செய்யவேண்டும். முடியாவிட்டால் துலா (ஐப்பசி) மாத முடிவுக்குள் செய்ய வேண்டும்.

ஸன்யாசிகளின் மஹாளயத்தை த்வாதசியிலேயே பண்ண வேண்டும்.

ஆயுதம் முதலியவற்றால் அடிபட்டு இறந்தவர், துர்மரணம் அடைந்தவர், இவர்களுக்கு மட்டும் சதுர்தசியில் பண்ண வேண்டும். சதுர்தசியில் மற்றவர்களுக்குப் பண்ணக்கூடாது.

தாயார், தகப்பனார் சிராத்தம் வரும் மாதத்தில் சிராத்தத்திற்கு முன் மஹாளய தர்ப்பணம் செய்யக்கூடாது. பிறகுதான் செய்ய வேண்டும்.

சிதையில் மூட்டி எரியும் தீயில் உடலானது எரிந்து, வெந்து சாம்பலாகும்போது தலையானது வேகும் வரையில், அந்த ஜீவனுக்குத்தன் உடல் மீது உள்ள ஆசை மறையாது. எரிகின்ற தீயில் சிரசு முதல் பாதம் வரை தேகம் முழுவதும் வெந்து சாம்பலான பிறகு ஒருவனுக்குப் பிண்டத்தால் ஆன சரீரம் உண்டாகும்.

பிறகு இறந்தவனின் புத்திரன் செய்ய வேண்டிய கர்மாக்கள்

முதல் நாளன்று போடும் பிண்டத்தால் சிரசும்
இரண்டாவது நாளன்று போடும் பிண்டத்தால் கழுத்தும் தோளும்
மூன்றாவது நாளன்று போடும் பிண்டத்தால் மார்பும்
நான்காவது நாளன்று போடும் பிண்டத்தால் வயிறும்
ஐந்தாவது நாளன்று போடும் பிண்டத்தால் உந்தியும்
ஆறாவது நாளன்று போடும் பிண்டத்தால் பிருஷ்டமும்
ஏழாவது நாளன்று போடும் பிண்டத்தால் குய்யமும்
எட்டாவது நாளன்று போடும் பிண்டத்தால் தொடைகளும்
ஒன்பதாவது நாளன்று போடும் பிண்டத்தால் கால்களும்
பத்தாவது நாளன்று போடும் பிண்டத்தால் சரீரம் முழுவதும் பூரணமாக உண்டாகும்.

பதினொன்று, பன்னிரண்டு, நாட்களில் பிராமண முகமாக கொடுக்கப்பட்டவைகள் உண்டு.

பதின்மூன்றாம் நாள் விடைபெற்றுச் செல்லுகிறான்.

இந்தக் கருமங்களைச் செய்யும்போது செய்யும் இடத்தை கோமயத்தால் மெழுக வேண்டும்.

பிதுரர்களுக்குரிய கர்மங்களைச் செய்யும்போது மட்டும் எள்ளையும் தர்ப்பைப் புற்களைப் பயன்படுத்தவேண்டும்.

2-ம் நாள் முதல் 9-ம் நாள் வரை நித்யவிதி செய்வதற்குக் கீழ்க்கண்ட பாத்திரங்களைத் தயார் செய்து கொள்ள வேண்டும்.

1. ஒரு ஸ்டவ், கெரசின்

2. ஒரு வெண்கலப்பானை (முக்கால்படி பிடிக்கும்படி) 10-ம் நாள் தேவை.

3. கால் படி பிடிக்கும் ஒரு வெண்கலப் பானை நித்ய விதிக்குத் தேவை.

4. கரண்டி - இரண்டு.

5. தயிர், பால் வைக்க பாத்திரம்

6. இரண்டு தாம்பாளம்

7. ஐந்து பித்தளைக் கிண்ணங்கள்.

**பத்து நாட்களுக்குத் தேவைப்படும் சாமான்கள்:**

எள்ளு -

தயிர், பால் -

தேன் -

நெய் -

பச்சரிசி -

இளநீர் -

தென்னம்பாளை -

நித்ய வீதி அறை, சவுண்டீகரணம் அறை, சுபசீகார அறை ஆகியவை சுத்தமாக இருக்க வேண்டும்.

முதல் நாள் தொடங்கி, தொடர்ந்து செய்ய வேண்டியவற்றை இப்போது பார்ப்போம்.

●

# 3. கர்த்தாவின் கடமைகள்

கர்த்தாவின் நியமம் - சம்ஸ்காரம் நடக்கும் நாட்களில் ஒரு வேளை சாப்பாடு, பூமியில் படுத்து உறங்குவது பிரம்மச்சரியம் அனுஷ்டிப்பது, கண்ட இடங்களில் சாப்பிடாமல் இருப்பது ஆகிய நியமங்களைக் கடைப் பிடிப்பது அவசியம். கர்த்தா வியாதியினால் முறைப்படி ஸ்நானம் செய்ய முடியாவிடில் கௌந ஸ்நானங்கள் விதிக்கப்பட்டிருக்கிறது. கங்கா தீர்த்தத்தை புரோக்ஷித்து ப்ராசனம் செய்வது சிறந்தது.

மரண தினம் சரியாகத் தெரியாவிடில் - மாதம் தெரியாவிடில் ஆஷாடம் அல்லது மாத மாதம்: திதி தெரியாவிடில் அமாவாஸை அல்லது கிருஷ்ண பக்ஷம் ஏகாதசி: மரண செய்தி என்று தெரியப்படுகிறதோ அன்றைய திதியையே திதியாக வைத்துக் கொள்ளலாம் என்று சொல்லப்படுகிறது.

துக்கம் விசாரிப்பது - முதல் நாளும் பத்தாம் நாளும் எந்தக் கிழமையாக இருந்தாலும் தடை இன்றி விசாரிக்கலாம். 9-ம் நாள் போய் விசாரிக்கக்கூடாது. திங்கள், சனி, புதன் ஆகிய மூன்று கிழமைகளிலும் போய் விசாரிப்பது சரி இல்லை. நிஷித்த தினங்களில் விசாரித்தல், துக்கம் விசாரிப்பது அதிகமாகும். மேலே சொன்ன நிஷித்த கிழமைகள் பத்து நாட்களுக்குப் பிறகும் பொருந்தும். இது ஆசார சித்தம்.

தீட்டு உடையவர்கள் விபூதி குழைத்து இட்டுக் கொள்ளக்கூடாது. கர்த்தா கர்மா செய்யும்போது விபூதி இட்டுக் கொள்ளக்கூடாது. கோபி சந்தனத்தின் மேல் விபூதியை எப்போதும் குழைத்து இட்டுக்கொள்ளக்கூடாது.

அநேக புத்திரர்கள் இருந்து முக்யகர்த்தாவான ஜ்யேஷ்டன் முதல் நாள் வராவிட்டால், கடைசி தகனக்ரியை செய்துவிடலாம். சஞ்சயனத்துக்கு ஜ்யேஷ்ட புத்திரன் வந்து சேர்ந்து விடுவான் என்று சம்பவித்தால், அவன் வந்த பிறகு சஞ்சயனத்தைச் செய்துவிடலாம். பத்து நாள் வரை வருவதற்கு முடியாவிட்டால் இதர புத்திரர்கள் பத்து நாட்கள் வரை செய்ய வேண்டிய அபரக்ரியைகளை அந்தந்த உரிய காலத்தில் செய்துவிடவேண்டும். பத்து நாளைக்குப் பிறகு வரும் ஜ்யேஷ்டன், சஞ்சயநத்துக்குப் பிறகு இறந்த செய்தியைக் கேள்விப்பட்டால், அன்று முதல் பத்து நாட்கள் வரைத் தீட்டுக் காத்து, 75 திலோதகம் செய்து, வ்ருஷ போத்ஸர்ஜனம், ஆத்யமாஸிகம் இரண்டும் செய்து, தீட்டுப்போன பிறகு ஆவ்ருத்த ஆத்யமாஸிகத்தைச் செய்து, நாள் பார்த்து சபண்டீகரணம் செய்யவேண்டும். சஞ்சயனத்துக்கு முன்பே இறந்த செய்தியைக் கேள்விப்பட்டால், வழக்கமான பத்து நாள் தீட்டுக் காப்பது போதும்.

ஞாதிகள்கர்மா நடக்கும் இடத்துக்கு வர முடியாமற் போனால், இருக்கும் இடத்திலேயே இறந்த ஜீவனைத் தர்ப்பையில் ஆவாகனம் செய்து 30 வாஸோதகம் 75 உதகதானம் செய்யலாம்.

முதல் நாள் வபனம் கர்த்தாவிற்குத்தான். அதுவும் கழுத்து வரையில்தான். ஞாதிகள் பிரத்யட்சமாக இருந்தால் அவர்களும் தினசரி கர்த்தாவுடன் தர்ப்பணம் செய்வதானால், சிறியவர்களாக இருந்தால் அவர்களும் வபனம்

செய்துகொண்டு செய்ய வேண்டும். பத்து நாள் தீட்டுக்காரர்களுக்கு, பத்தாவது நாள் (தகப்பனார் இல்லாதவர்களுக்கு) வபனம் விதிக்கப்பட்டிருக்கிறது. இறந்தவர் பெரியவராக இருந்தால் வபனம் விதிக்கப்பட்டிருக்கிறது. கர்த்தாக்களுக்குள் சிறியவர் முதல் பெரியவர் வரை முறைப்படி செய்ய வேண்டும்.

உதயத்திற்கு முன் மூன்று முகூர்த்தம், அதாவது பதினொண்ணேகால் நாழிகை, அதாவது இரவு ஒண்ணரை மணிக்கு முன்பு இறந்தால் முதல் நாள் கணக்கு. இரவு ஒண்ணரை மணிக்கு மேல் இறந்தால் மறுநாள் கணக்கு. சிலர் சூரிய உதயம் முதல் மறுஉதயம் வரை ஒரு நாளாகக் கணக்கிடுகிறார்கள். இறக்கும்போது உள்ள திதிதான் அவர்களுக்கு சிரார்த்த திதி.

## கோத்ரவிருத்தி சிராத்தம்

முதல் நாள் மூன்று பிராமணர்களுக்குத் தேவையான அளவு அரிசி, பயறு, வாழைக்காய் ஆகியவைகளைத் தட்சிணையாகக் கொடுக்கவும்.

| | |
|---|---|
| இரண்டாவது | நாளைக்கு நான்கு பேருக்கும் |
| மூன்றாவது | நாளைக்கு ஐந்து பேருக்கும் |
| நான்காவது | நாளைக்கு ஆறு பேருக்கும் |
| ஐந்தாவது | நாளைக்கு ஏழு பேருக்கும் |
| ஆறாவது | நாளைக்கு எட்டு பேருக்கும் |
| ஏழாவது | நாளைக்கு ஒன்பது பேருக்கும் |
| எட்டாவது | நாளைக்கு பத்து பேருக்கும் |
| ஒன்பதாவது | நாளைக்கு பதினோரு பேருக்கும் |
| பத்தாவது | நாளைக்கு பன்னிரண்டு பேருக்கும் |

தேவையான அளவு அரிசி, பயறு, வாழைக்காய் தட்சிணையுடன் அந்தந்த நாளில் கொடுக்கவும்.

## நவசிராத்தம்

ஒரு பிராமணனுக்கு அரிசி, பயறு, வாழைக்காய் ஆகியவற்றைக் கொடுக்கவும்.

ஊன்றின கல்லுக்கு மேல் ஒரு மண்குடத்தில் ஜலத்தை நிரப்பி அடியில் மிகவும் சிறிய ஓட்டையைச் செய்து அதன் வழியாக ஜலம் கொட்டும்படி, கல்லுக்கும்மேல் கயிற்றினால் உறிகட்டி அதில் வைக்கவும். மறுநாள் நித்யவிதி செய்யும் வரையில், இந்த மண்குடத்தில் ஜலம் குறையக்குறைய விட்டுக் கொண்டு இருக்க வேண்டும் என்பதுதான் வழக்கம். ஜலம் விடுபவன் சுத்தமானவனாக இருக்க வேண்டும். கல்லுக்குப் பக்கத்தில் சீவின இளநீரை, மேல் ஓட்டை எடுத்துவிட்டு வைக்கவும். ஜலத்தையும் பாலையும் உடன் வைக்கவும்.

பிறகு வாஸோதகம் செய்த வஸ்திரத்தில் இருபிண்டங்களையும் வைத்துக் கீழே விழாமல் வைத்துக் கொண்டு நீர்த்தேக்கத்தில் போடவும். (இந்த பிரேத பிண்டத்தை ஜலத்திலும், பலி (சிறிய) பிண்டத்தைக் காக்கைக்கும் போடுவது சிலர் ஆசாரத்தில் உள்ளது.) தெற்கு முகமாகப் பார்த்துக் கொண்டு ஜலத்தில் ஆகாரத்தைப் போட்டுவிட்டு, பவித்ரத்தை அவிழ்த்துப் போட்டுவிட்டு, உபவீதியாக வஸ்திரத்தை அவிழ்த்துப் போட்டுக்கொண்டு, உபவீதியாக வஸ்திரத்தைப் பிழிந்து தானும் ஸ்நானம் செய்துவிட்டு, ஆசமனம் செய்து வீட்டிற்கு வந்து, வாசலில் கால் அலம்பிவிட்டு, உலர்ந்த வேஷ்டியைக் கட்டிக் கொண்டு சௌகரியம் போல இருக்கலாம்.

முதலில் பிராயச்சித்தம் செய்யும்போது சங்கல்பம் செய்யப்பட்ட காவேரி ஸ்நான தக்ஷிணையை பத்தாம் நாள் பரிபந்தம், வேதப்படிப்பும் அனுஷ்டானமும் உள்ள பிராம்மணர்களுக்குக் கொடுத்துவிட்டு, பிறகு ஜலத்தில் பிண்டத்தைக் கொண்டு போய் போடவும்.

ஏகோத்தர விருத்தி சிரார்த்தம் என்பது முதல் நாள் மூன்று பிராமணர்களுக்கும், மறுநாளிலிருந்து தினமும் ஒவ்வொரு பிராமணனாகக் கூட்டிக்கொண்டு அதற்குத் தகுந்தாற்போல அரிசி, பயறு, வாழைக்காய், தக்ஷிணை கொடுக்க வேண்டும்.

இரண்டாவது நாளிலிருந்து தினமும் ஏகோத்தா விருத்தி சிரார்த்தம் பிரயோகப்படி, அந்தந்த தினத்தின் பெயரை மாற்றிக் கொண்டு செய்ய வேண்டும்.

தடாக / நதி தீர குண்டத்தில் தினமும் செய்ய வேண்டியது. ஒற்றைத்தர்ப்பை பவித்ரம் அணிந்து, உபவீதி பிராணாயாமம் செய்து, பிறகு திலோதகம் மட்டும் சொல்லி நான்கு தடவைகள் முன் தினம் போல விடவும்.

ஆனால் இரண்டாம் நாளிலிருந்து தர்ப்பண எண்ணிக்கை நாள்தோறும் ஒன்று அதிகமாகக் கூட்டிக் கொண்டு செல்லவும்.

*2ம் நாள் 4 தடவை*

*3ம் நாள் 5 தடவை*

*4ம் நாள் 6 தடவை*

*5ம் நாள் 7 தடவை*

*6ம் நாள் 8 தடவை*

*7ம் நாள் 9 தடவை*

*8ம் நாள் 10 தடவை*

*9ம் நாள் 11 தடவை*

*10ம் நாள் 12 தடவை*

மொத்தம் பத்து நாளைக்கு 75 தர்ப்பணங்கள்.

வாஸோதகம் மாத்திரம் தடாக குண்டத்திலும் க்ருஹத்வார குண்டத்திலும், நித்தியம் ஒவ்வொருவருக்கும் மூன்றுதான்.

அதாவது 10 நாட்களுக்கு 30 வாஸோதகம் பிழிதல். இதைப் புத்திரர்கள் சிறியவர்கள் முதலாக அனைவரும் செய்ய வேண்டும்.

முதல்நாள் காரியத்துக்கு வேண்டிய சாமான்கள். அரிசி, எள்ளு, ஹவிஸ், தர்ப்பை, இளநீர், தேன், பால், தயிர், நெய்.

திலோதகத்திற்குப் பித்தளைச் செம்பு, பஞ்ச பாத்திர உத்தரணி.

வாஸோதகத்திற்கு ஒரு மீட்டர் காடா வெள்ளைத் துணி (கரை இல்லாதது) தானங்களுக்குச் சொல்லப்பட்ட பொருட்கள், பாத்திரங்கள், தங்கத் துண்டுகள்.

பிரம்மமேதத்திற்கு 25 பேரன்களுக்குத் தீப்பந்தம் ஆஸந்தி செய்வதற்கு ஏற்பாடுகள்.



# 4. தானத்துக்குத் தேவையான பொருட்களும் விதிகளும்

**த**க்ஷிணை காலங்கள்

புண்யாஹவாசனம், ஜப தக்ஷிணை, மரணத்தருவாயில் - ப்ராயச்சித்த அனுக்ஞை ஸர்வ ப்ராயச்சித்த க்ருச்ரம் - (1க்ருச்ரம் ரூ. 12.50 முடியாவிடில் 6.25) 30 க்ருச்ரம். அல்லது 180 க்ருச்ரம் அல்லது 360 க்ருச்ரம் சக்திக்கு தகுந்தாற் போல் (காவேரி ஸ்நானம்) தசதானம் - கன்றோடு கூடிய பசுமாடு (அல்லது ப்ரதிநிதியாக தேங்காய்), பூமி (ப்ரதிநிதியாக சந்தனக்கட்டை), எள்ளு, ஸ்வர்ணம், நெய், வஸ்த்ரம், தான்யம், வெல்லம், வெள்ளி, உப்பு இவைகளை போடுவதற்கு பாத்திரங்கள்.

ஸர்வ ப்ராயச்சித்த கால திதி வார, தோஷத்திற்கு தக்ஷிணை, உத்க்ராந்தி கோதானம், (ப்ரத்யக்ஷமாக முடியாவிடில் அதற்கு மூலமான தங்கமோ அல்லது ரூபாய்களோ) கர்ண மந்த்ர ஸாத்குண்ய தக்ஷிணை, விச்சிந்ந ப்ரேதாக்னி - ஸந்தான அனுக்ஞை, பைத்ருமேதிக விதி - ப்ராஜாபத்ய க்ருச்ரம் 3. ப்ரேதாக்னி ஸந்தான கால திதி வாராதி தோஷ நிவ்ருத்தி 3 க்ருச்ரம், ஸாயம் ப்ராத: அகரண ப்ராயசித்தம் 3 க்ருச்ரம், ஔபாஸன ஸாத்குண்யம் - தக்ஷிணை.

உத்தபனாக்னி - ஸந்தான அனுக்ஞை - க்ருச்ரம். தக்ஷிணாயன மரண ப்ராயச்சித்தம் (நேர்ந்தால்) க்ருச்ரம். க்ருஷ்ணபக்ஷ மரண ப்ராயச்சித்தம் (நேர்ந்தால்) க்ருச்ரம், நிசி மரண ப்ராயச்சித்தம் (நேர்ந்தால்) க்ருச்ரம், ஊர்த்வ உச்சிஷ்டாதி ப்ராயச்சித்தம் (5x3 = 15) பர்யுஷித சவ ப்ராயச்சித்தம் - 3 க்ருச்ரம். தனிஷ்டா பஞ்சக சாந்த ப்ராயச்சித்தம் (நேர்ந்தால்) 3 க்ருச்ரம். ப்ரேதத்தின் முகத்தில் ஒரு தங்கத் துண்டு, ப்ரதான அனுக்ஞை. பைத்ருமேதிக ஸம்ஸ்கார காலேதித்யாதி தோஷம் - கர்த்தா ஒவ்வொருவருக்கும் 1 க்ருச்ரம். சிதையின் மத்தியில் கட்டைகள் அடுக்குவதற்கு முன் ஒரு தங்கத் துண்டு. ப்ரம்ம மேத ஸம்ஸ்காரம் செய்தால் 17+7 தங்கத் துண்டுகள். பிரம் தண்டம் அனுக்ஞை பிரம் தண்டம் பூரி தக்ஷிணை.

வணன அனுக்ஞை, நக்ன ச்ராத்தம தக்ஷிணை, (வஸ்த்ரம், அரிசி, உதகும்பம், வெங்கல விளக்கு, எள்ளு, உளுந்து, பயறு, உப்பு, காய்கறிகள்,)

உதகதான அனுக்ஞை, பாஷாண ஸ்தாபன க்ருச்ரம். உதகதான தித்யாதி தோஷ க்ருச்ரம். வீட்டில் கல் ஊன்றுதல் அனுக்ஞை, தித்யாதி தோஷ க்ருச்ரம். பிண்டபலி திதி வார தோஷ க்ருச்ரம்.

ஏகோத்தர விருத்தி ச்ராத்தம் - 3 ப்ராமணர்களுக்கு அரிசி, பயறு, வாழைக்காய் தக்ஷிணை.

நவச்சராத்தம் - அரிசி, பயறு, வாழைக்காய், தக்ஷிணை கொடுக்க வேண்டிய காவேரி ஸ்நானங்கள், வாத்யார் தக்ஷிணை.

(ரூபாய் அம்சம் அவரவர் சக்திக்கு குறையாமல் வாத்யாரை கலந்து தீர்மானிக்கவும்.)

*1. காலமானதும் முதல் நாள் தகனம்*

*புண்யாஹவசனம், ப்ராயச்சித்தம், தசதானம் உக்ராந்தி, கோதானம், தகனம் etc., வாத்தியார் அம்சம்.*

**சில்லரை செலவு**

*நக்ன சிராத்தம்: அரிசி அரை படி, வஸ்த்ரம் ஒரு எட்டு முழ வேட்டி, தீபம் - 1, ஹிரண்யம், உதகும்பம் - ஒரு சொம்பு.*

*பாஷாண ஸ்தாபனம்: தடாக தீரம், க்ருஹத்வாரம் க்ருச்ரம், அனுக்ஞை etc.,*

*2. சஞ்சயனம்: வாத்யார் ஸம்பாவனை*

*நித்யவிதி: வாஸோதகம், திலோதகம், தடாக தீரம், பிண்ட பலி, க்ருஹத்வாரம் 10 நாளைக்கு ஏகோத்ர வ்ருத்தி ச்ராத்தம், அரிசி கால் படி, ப.பருப்பு சிறிதளவு வாழைக்காய் 1 (10 நாளைக்கு)*

*3. தசாஸ்து (10ம் நாள்): ப்ரபூத பலி, அனுக்ஞை, க்ருச்ரம், பிரம்ம தண்டம், புண்யாஹவசனம் etc., சில்லரை செலவுகள் வாத்யார் சம்பாவனை, சரம ச்லோகம் வாத்யாருக்கு*

*4. ஏகோத்திஷ்டம் (11 நாள்): வ்ருஷப உத்ஸர்ஜனம், ருத்ரஜபம், யமாஹுதி, ஏகாதிஷ்ட ச்ராத்தம், (முதல் மாசிகம்) etc, காளை கன்றுக்குட்டி அல்லது தேங்காய் 1, துண்டு 2 (ருத்ரகலசம் + வ்ருஷபம்) புண்யாஹவாசணம் வ்ருஷப உத்ஸர்ஜ ஹோமம் ருத்ர கலசம், (ஒரு சொம்பு) ருத்ர ஜபம் (4 பேர்) etc., செலவு.*

*ஏகோதிஷ்ட ப்ராம்மணர் ஒருவருக்கு 10 x 6 வேஷ்டி 1 செட், சொம்பு 1, பஞ்ச பாத்ர உத்தரணி 1 செட், தக்ஷிணை, சமையல் கூலி, வாத்யார் சம்பாவனை.*

*5. சபீண்டீகரணம் - (12ம் நாள்) பஞ்ச தச ஏகோதிஷ்ட ஹிரண்ய சிராத்தம். அரிசி 15 x 1/4 படி (கிட்டத்தட்ட 4 படி),*

பருப்பு 15 பொட்டலம், வாழைக்காய் 15, தக்ஷிணை 15 பேருக்கு, சபிண்டீகரணத்திற்கு 4 (நான்கு) ப்ராம்மணர்கள்.

(அநுபந்தமாக இருப்பவர்களைச் சொல்லலாம்)

1. விச்வேதேவர்

2. பித்ரு / மாத்ரு ஸ்தானம்

3. மஹாவிஷ்ணு

4. ப்ரேத ஸ்தானம்

சிலர் தேசாரப்படி 2 + 1 = 3 பேர் சொல்லுங்கள்

பிரயோஜனம் (ஒருவருக்கு)

10-6 வேஷ்டி 1 செட், செம்பு 1, வெள்ளி, பஞ்சபாத்ர உத்தரணி 1 செட், தங்க பவித்ரம் 1, வெள்ளி தர்ஜனி 1, மனை 1, துண்டு 1, செருப்பு 1 செட், தக்ஷிணை.

ஸொதகும்ப பிராம்மணர் - 1 (வாத்தியார்) இதே மாதிரி பிரயோஜனம் மொத்தம் 3 செட் வாங்க வேண்டும்.

தானங்கள்: வைதரணீ கோதானம் - பசுமாடு (கன்றுடன்), வைக்கோல், புல் செலவுகள் தக்ஷிணை அல்லது ஹிரண்யம் தேங்காய் நௌகா தானம், கரும்பினால் ஓடம் செய்து தீபம் வைத்து தக்ஷிணை பாதேயம் தயிர் சாதம் (ஒரு 4 முழம் வேட்டியில் கட்டி) தக்ஷிணை

தசதானம்:

1. கோதானம் : தேங்காய்
2. பூ : சந்தனக் கட்டை
3. திலம் : எள்ளு (டபரா)
4. ஹிரண்யம் : 2 குந்துமணி (தங்கம்)
5. ஆஜ்யம் : நெய் (டபரா)

6\. வாஸ: : 18 முழ வேஷ்டி
7\. தான்யம் : நெல் (டபரா)
8\. குடம் : வெல்லம் (டபரா)
9\. ரௌப்யம் : வெள்ளி 1 கிண்டி
10\. லவணம் : உப்பு (டபரா)

பஞ்சதானம்:

1\. வஸ்த்ரம் : 18 முழம் பூ
2\. உதகும்பம் : 1 செம்பு
3\. தீபம் : 1 விளக்கு (நெய் திரி)
4\. மணி : ஒன்று
5\. புஸ்தகம் : 1 விஷ்ணு ஸஹஸ்ர நாமம்

மனஸோத்திஷ்ட (இதர) தானம் குடை, தடி, செருப்பு, மனை, போர்வை (கம்பளம்), படுக்கை (ஜமுக்காளம், தலையணை) விபூதி, பருத்தி, விசிறி, பழத்தட்டு (பித்தளை), காய்கறி (பித்தளைத் தட்டு), தயிர், பால், பானகம்.

துவாதச ச்ராவணாள் (12 பேர்)

அனுக்ஞை, க்ருச்ரம், அர்க்ய,

பண்ட ஸம்யோஜனம், பிராமண புக்த தக்ஷிணை, ஹோமதக்ஷிணை etc.

வாத்தியார் தக்ஷிணை, சோதகும்ப வாத்தியார் தக்ஷிணை.

6\. சுப ஸ்வீகாரம் (13வது நாள்)

மஞ்சள் (பொடி), குங்குமம், வெத்தலை 1 கவுளி, பாக்கு 50 கிராம், பழம் 1 டஜன், புஷ்பம் 8 முழம், உதிரி புஷ்பம் (ரூ.5), தேங்காய் 4, அரிசி 4 படி, கற்பூரம் 1 பாக்கட், ஊதுபத்தி 1 பாக்கெட், சந்தனம் கொஞ்சம், நெய் அரை கிலோ, நுனி வாழை இலை 8.

நவதான்யம்: கோதுமை, நெல், துவரை, பயிறு, கடலை, மொச்சை, எள்ளு, உளுந்து, கொள்ளு (200 கிராம்)

நவக்ரஹ வஸ்த்ரம்: சிவப்பு, வெள்ளை, ப்ரௌன் பச்சை, மஞ்சள் லைட், ப்ரௌன், கருப்பு, நீலம் பூப்போட்டது (8, செண்டிமீட்டர்)

நவக்ரஹ கலச வஸ்த்ரம் = 1 எட்டு முழம்

உதககசாந்தி வஸ்த்ரம் = 1 எட்டு முழம் 4 ப்ராம்ணாள் சில்லரைச் செலவு

(அனுக்ஞை, கணபதி பூஜை ஹோமம, தக்ஷிணை நவக்ரஹ தக்ஷிணை etc).

வாத்தியார் சம்பாவனை வாத்தியார் சம்பாவனை கர்மாவை சுபத்துடன் பூர்த்தி செய்து வைக்க.

## தான பலன்கள்

★அன்னதானம் தரித்திரமும் கடனும் நீக்கும்.

★வஸ்திர தானம் ஆயுளை விருத்தி செய்யும்.

★பூமி தானம் பிரம்ம லோகத்தையும் ஈஸ்வர தரிசனத்தையும் நல்கும்.

★தேன் தானம் புத்திர பாக்கியத்தை உண்டாக்கும்.

★கோதானம் ரிஷிக்கடன், தேவகடன் பிதுர் கடன் அகலும்.

★நெல்லிக்கனி தானம் ஞானம் உண்டாக்கும்.

★தீபதானம் கண் பார்வை தீர்க்கமாகும்.

★அரிசி தானம் பாபங்களை போக்கும்.

★நெய் தானம் நோய் தீர்க்கும்.

★பால் தானம் துக்கம் நீங்கும்.

★தயிர் தானம் இந்திரிய விருத்தி.

★தேங்காய் தானம் நினைத்த காரியம் வெற்றியாகும்.

★பழங்கள் தானம் புத்தியும், சித்தியும் கிட்டும்.

★தங்கம் தானம் குடும்ப தோஷங்கள் நீங்கும்.

★வெள்ளி தானம் மனக்கவலை நீங்கும்.

# 5. தசாஹவிதி

## (பத்தாம் நாள்)

மரணம் அடைந்தவர்கள் சரீரத்தைத் தியாகம் பண்ணி விடுகிறார்கள். ஆத்மா வெளியே வந்து விடுகிறது. அதைப்பிடித்து வைக்க வேண்டும். எப்படி? அதற்கு உபசாரம் பண்ண வேண்டும். பிராப்திநேரும் வரையில் முறையாக அதை மந்திரத்தின் மூலம் நிறுத்தி வைக்க வேண்டும். அதற்காக பத்து நாட்கள் ஆத்மாவுக்கு முதலில் உபசாரம் பண்ணுகிறோம்.

பத்தாம் நாள் வரை பிரேத சொரூபமாக இருக்கிறார். காலையிலும் மாலையிலும் இரண்டு பிண்டம் போடுவதுடன் சரி. அதனால் அவருக்கும் பசி அதிகமாக இருக்கும். அந்த அபாரப் பசியை அடக்கத்தான் பிரபூதபலி. ஜலத்தை நிறையக் கொட்டி தாகத்தை அடக்குகிறோம். இளநீர் விடுகிறோம். இது எதற்கு? எரிச்சலை அடக்குவதற்காக! தகனம் பண்ணினபோது நேர்ந்த எரிச்சலை அடக்குவதற்காக இதை விடவேண்டும்.

பத்தாவது நாள் ஞாதிகள் யாவரும் சர்வாங்க க்ஷவரம் செய்துகொண்டு, ஸ்நானம் செய்துவிட்டு, விரித்த தலையுடனும் ஒரே வஸ்திரத்துடனும், தெற்கு மூலமாகத் தீர குண்டத்தில், முப்பது வாஸோதக தானமும், 75 திலோதகதானமும் செய்ய வேண்டும். பத்து நாட்கள் கடந்து போனாலும் வபனமும் தர்ப்பணமும் செய்ய வேண்டும்.

பிறகு கர்த்தா மூன்று தடவைகள் ஸ்நானம் செய்துவிட்டு, தீர குண்டத்தில் மூன்று வாஸோதக தானமும், பன்னிரண்டு திலோதக தானமும் செய்து, கிருஹத்வார குண்டத்தில் வாஸோதகதானம், திலோதகதானம், ஏகோத்ர வருத்திச்ரசுத்தம் ஆகியவற்றைச் செய்து பிரபூத பலிதானம் செய்யவேண்டும்.

தரையில் ஆவரப்படி இரட்டைப் படை அல்லாத ரேகைகள் உள்ள கோலம் போட்டு, ஆசாரப்படி தெற்கு நுனியாக வஸ்திரத்தைப் பரப்பி அதன் மேல் தெற்கு நுனியாகத் தர்ப்பைகளைப் பரப்பவும்.

எள்ளும் ஜலமும் விட்டு மௌனமாக அன்னம் அபூபம் முதலியவற்றையும் எல்லா உணவுப் பொருட்களையும் வைத்து நடுவில் பிரபூத பலியை வைக்கவும். பிரபூத பலியின் அருகில் பிரார்த்தனை செய்துகொள்ளவும்.

சருபாத்திரத்தை அலம்பி எள்கலந்த ஜலத்தால் ஒரு தடவை மந்திரம் சொல்லி அபிரதட்சணமாகப் பரிசேஷனம் செய்து, தெற்கில் பாத்திரத்தைக் கவிழ்த்துப் புரோக்ஷித்து நிமிர்த்தி வைக்கவும். பெண்கள் விரிதலையுடன் தெற்கு நோக்கி நமஸ்காரம் செய்து பிரிவாற்றாமையின் துன்பத்தைக் காட்டுவார்கள்.

பிறகு மந்திரம் சொல்லிப் பிரார்த்தித்து, முடிவில் கண்ணை மூடிக் கொண்டு கற்களை எடுத்துக் கண்ணை விழித்து அவற்றை வஸ்திரத்தில் வைத்து மூடிக் கையை அலம்பிக்கொண்டு, உபவீதியாகப் பூணூலை மாற்றிக் கொள்ளவும். பவித்திரத்தைக் காதில் வைத்துக் கொண்டு தானியங்களையும் சகதி மண்ணையும் (ஆசாரப்படி) எடுத்துக்கொண்டு பிரார்த்தனை செய்து, பிறகு எல்லாவற்றையும் ஒரு குழியில் போட்டு மண்ணால் மூடவும்.

பவித்திரத்தைத் தரித்துக்கொண்டு தலையை முடிந்து கொண்டு பிண்டம் முதலியவற்றை எடுத்துக்கொண்டு, முந்தைய நாட்களில் பிண்டங்களைப் போட்ட தீர்த்தத் திலேயே பிண்டங்களைப் போட்டு விட்டு, அவற்றைக் கொண்டு வந்த வஸ்திரத்தையும் கிழித்துப் போட்டுவிட்டு ஸ்நானம் செய்யவும்.

## சாந்தி ஹோமம்

சாந்தி ஹோமத்திற்கு வேண்டிய திரவியங்கள், தர்ப்பை, நெய், தான்யம், விறகு, ஸமித்து, ஹோமத்திற்கு நெய்க்கிண்ணம், ஹோமக் கரண்டிகளுக்காக மாவிலிங்க இலைகள், அக்னி, ஜலம் நிறைந்த கும்பம், மாவிலை, எருதுத்தோல், கொத்துமல்லி, நொச்சிக் கொத்து, கல், நட்டு வைத்த செடிக்கிளை, நொச்சி மாலை, அவசியமான பாத்திரங்கள், நைவேத்தியம், தாம்பூலம் முதலியவை.

எது உரிய இடமோ தர்ம சாஸ்திர விதிப்படி அங்கே மும்மூன்று கோடுகளைக் கிழித்து மௌனமாக லௌகி காக்னியைப் பிரதிஷ்டை செய்க. கிழக்கில் ஜலம் வைக்கவும். அக்னியை மூட்டவும். வடக்கு நுனியாகவும் கிழக்கு நுனியாகவும் தர்ப்பைகளால் அக்னியை சுற்றிப் பரிஸ்தரணம் போடவும்.

கர்த்தா அக்னிக்கு மேற்கில் சிவப்பான எருதுத் தோலைத் தலைப்பக்கம் கிழக்காகவும், ரோம பாகம் மேலாகவும் விரித்து அதில் நொச்சி மாலை அணிந்தவர்களாக ஞாதிகளைச் சிறியவர்கள் முதலாக மந்திரம் சொல்லி உட்கார வைக்க வேண்டும்.

பிறகு கர்த்தா ஸ்திரீகளையும் ஞாதிகளையும் சிறியவர்கள் முதலாக மந்திரம் சொல்லி உட்கார வைக்க வேண்டும். நெய்யால் மந்திரங்களைச் சொல்லி ஆஹுதி செய்து

ஹோமம் செய்து முடிக்க வேண்டும். அக்னிக்கு வடக்கில் ஹோமம் ஆரம்பிக்கு முன் சிவப்பு எருது கிழக்கு முகமாக ஸ்தாபித்திருந்ததை ஸ்திரீகளும் புருஷர்களும் வரிசையைக் கருதாமல் மந்திரம் சொல்லித் தொட வேண்டும்.

அந்த எருதுக்குப் பின் ஸ்திரீகளும் புருஷர்களும் நியமம் ஏதும் இன்றிக் கிழக்கு நோக்கிச் செல்ல வேண்டும். கர்த்தா நீர் நொச்சிக் கொத்தும் அவகங்களும் எடுத்துக் கொண்டு எல்லோருக்கும் பின்னே செல்பவனாய் எருதின் பாதச்சுவடு களையும், பிறருடைய சுவடுகளையும், தன்னுடைய சுவடு களையும் தேய்த்து அழித்துக் கொண்டு போக வேண்டும்.

இறந்தவர்களுக்கும் உயிர் வாழ்பவர்களுக்கும் இடையே இது எல்லை என்று எண்ணி ஞாதிகளை ஒதுக்கிவிட்டு, அவரவர் தென்புறமாகக் கல்லை நடவேண்டும்.

பிறகு சுமங்கலிகள் அஞ்ஜலிகளின் மூலம் தீர்த்தத்தைக் கீழே விடவேண்டும். கர்த்தா மந்திரம் சொல்ல வேண்டும் அந்த ஸ்திரீகள் அந்தத் தீர்த்தத்தால் தங்கள் முகத்தை மௌனமாகத் துடைத்துக்கொள்ள வேண்டும். ஞாதிகள் இதைச் செய்ய வேண்டியதில்லை.

பிறகு எல்லோரும் த்ரிகூட பர்வதத்தில் கிடைக்கும் மையையோ, வேறுமையையோ கண்களில் இட்டுக் கொள்ள வேண்டும்.

பிறகு கர்த்தா மயானத்திலோ வேறு இடத்திலோ ஒரு செடியின் கிளையைப் பூமியில் நடவேண்டும். பிறகு எல்லோரும் நொச்சிமாலைகளை எறிந்து விடவேண்டும்.

## ஆனந்த ஹோமம்

ஹிரண்யதானம் செய்து ஏதாவது நல்ல இடத்தில் முறைப்படி மூன்று கோடுகளைக் கிழித்து மௌனமாக லௌகீகாக்னியைப் பிரதிஷ்டை செய்து, கிழக்கில் ஜலம்

வைத்துவிட்டு அக்னியை மூட்டி, கிழக்கு நுனியாகவும் வடக்கு நுனியாகவும் தர்ப்பைகளால் பரிஸ்தரணம் செய்யவும். (இங்கு பாத்ர ஸம்ஸ்காரம் இல்லை.)

மந்திரங்களால் பரிசேஷனம் செய்துவிட்டு மாவலிங்க இலைகளை ஹோமக்கரண்டியாகக் கொண்டு, அதன் அடிப்புறத்தை முன்னே வைத்து, மற்றொரு இலையின் அடிப்புறமாக ஸம்ஸ்காரம் செய்யாத நெய்யை நாலு தடவைகள் எடுத்துச் சொட்டவிட்டு ஹோமம் செய்ய வேண்டும்.

கடைசியில் இந்த அக்னியில் ஹோமக் கரண்டிகளாக உபயோகித்தவற்றை இரண்டையும் போட்டு விட வேண்டும். பிறகு மந்திரங்களால் பரிஷாசனமும் பவித்ரத்தைக் கழற்றிப் போட்டு முடிக்கவும்.

லௌகிகாக்னியில் அன்னத்தைச் சமைத்து கர்த்தாவும் ஞாதிகளும் அதை உட்கொள்ள வேண்டும். இனிபுண்யாக வசனமும் புண்யாஹ தீர்த்தத்தை உட்கொள்ளுதலும்.

பிறகு கர்த்தா ஆனந்தஹோம அக்னியை எடுத்துக் கொண்டு ஞாதிகளுடன் வீடு சென்று ஆனந்த ஹோமத்திற்குப் பிரதிநிதியாக அதை வீட்டில் ஸ்தாபிக்க வேண்டும். இரவில் பொரி அப்பம் முதலியவற்றைத் தானம் செய்யவும்.



# ௬. ஏகாதசா ஹ விதி

## (பதினோராம் நாள்)

பத்து நாட்களும் ஆத்மாவுக்கு உபசாரம் பண்ணி இருக்கிறோம். கண்ணுக்குத் தெரியாத ஆத்மாவுக்கு எப்படி உபசாரம் பண்ணுவது? இதுவும் ஒரு பாவனைதான். சாளக்கிராமத்தில் விஷ்ணுவைப் பாவனையாகத் தரிசித்துப் பூஜை செய்கிறோம். சிவலிங்கத்தில் சிவனைப் பாவனை யாகத் தரிசித்து உபச்ாரம் பண்ணுகிறோம். அனுமார் படத்தைக் கண்ணாடி போட்டு வைத்து, வாலில் பொட்டு வைக்கிறோம். கண்ணாடி மீது தானே பொட்டு வைக்கிறோம்? இது வெறும் பாவனைதானே? எண்ணத்தை வைத்து அங்கே ஆவாகனம் பண்ணுகிறோம்.

அதேபோல இங்கேயும் ஆவாகனம் பண்ணுகிறோம். பித்ருக்களை அங்கே அழைத்து ஆவாகனம் பண்ணுகிறோம். பிரேத சொரூபமாக இருந்தவரை அங்கே அவர்களுடன் சேர்க்கப் போகிறோம். அவரும் பித்ருவாகப் போகிறார். அதற்காகத்தான் இந்தப் பதினோராவது நாள் - பன்னிரண்டாவது நாள் சடங்குகள் செய்யப்படுகின்றன.

தகப்பனார் அங்கே பிரேத சொரூபமாக இருக்கிறார். பத்தாம் நாள் வரை அப்படி இருந்திருக்கிறார். காலையிலும் மாலையிலும் அவருக்குப் பசி அதிகமாக இருந்திருக்கும். அதற்காகத்தான் பிரபூத பலி போட்டு அவருடைய பசியை அடக்குகிறோம்.

உடம்பு உயிரை விட்டபின் அதைச் சுத்தம் பண்ணுவதற்கு அக்னி, ஜலம் இரண்டைத்தான் பயன்படுத்த முடியும். சரீரத்தை அக்னிக்கு ஆகுதி பண்ணுகிறோம். ஆத்மாவிற்குரிய சரீரத்தை வேறு எதன்மூலமாகவும் சுத்தி பண்ண முடியாது. அதனால் அதை அக்னியால் சுத்தப்படுத்துகிறோம். இது நெருப்பு வைப்பது அன்று.

அதன் பிறகு மிஞ்சவது எலும்பு. அதை அக்னியால் சுத்தம் பண்ண முடியாது. அதைத் தீர்த்தத்தினால் சுத்தி பண்ணு கிறோம். இது அந்த்யேஷ்டி என்ற யாகம். இதை மூத்த பிள்ளைதான் செய்ய வேண்டும். அவன்தான் இவனுக்காக ஏற்பட்ட பிரகிருதி. சந்ததியைத் தொடர உரியவன் மூத்த பிள்ளைதான். அதனால் அவனுக்கு இந்த யாகத்தைச் செய்யும் உரிமையைக் கொடுத்திருக்கிறார்கள். பித்ரு பிராப்தி பண்ணும் யோக்கியதை அவனுக்குத்தான் உரியது.

இறந்து போனவர்களை, அந்தப் பிரேத சொரூபத்தை திருப்தி பண்ண மரியாதை கொடுத்து அனுப்பி வைக்கிறோம். அதற்குப் பிரீதியாக அழுது புலம்பிக் கண்ணீர் விட்டு விடை கொடுக்கிறோம். இது கேலிக்குரியது அன்று. இறந்து போனவர்களுக்குப் பிரியமாகக் கொடுக்கும் மரியாதைதான் இது. அங்கே அவர்களுடைய சாந்நித்யம் இருக்கிறது!

பதினோராம் நாள் பிரேதத்தை நிவர்த்தி பண்ண ஆகாரம் கொடுக்கிறோம். அதற்குரிய சக்தி அங்கே இருந்து வாங்கிக் கொள்ளும் பிராமணனுக்கு இல்லை. பாவத்தைப் போக்க அவனால் முடியாது. அதனால் கொல்லையில் ஒரு குழி பண்ணி பிரேத சிராத்தம் பண்ணி வைத்து, அப்புறம் அக்னியில் போடும்போது அது ஏற்றுக் கொண்டு விடுகிறது. அப்புறம் பிராமணன் பாவனையாக ஏற்றுக் கொள்ளுகிறான்.

இது ஏகோத்ருஷ்டம். பதினோராம் நாள் நடப்பது. அடுத்தது சமண்டீகரணம். இது பன்னிரண்டாவது நாள் நடப்பது. அப்போது இதுவரை பிரேத சொரூபமாக

இருந்தவரை அவருடைய முன்னோர்களுடன் சேர்க்கிறோம். இதற்கு அவர்கள் வந்திருந்து ஏற்றுக் கொள்ள அனுமதி தர வேண்டும்? அதற்காகத்தான் இந்த முக்கியமான கர்மா செய்யப்படுகிறது. அதனால் சமண்டீகரணம் மிக முக்கியமானது. அதற்குத் தயார் செய்து கொள்வது பதினோராம் நாள் நடக்கும் ஏகோத்ருஷ்டம். இப்போது பதினோராம் நாள் நடப்பதைக் கவனிப்போம்.

பதினோராவது நாள் பகலில் வீட்டைப் பசுவின் சாணியால் மெழுகி, வஸ்திரங்களை வண்ணானைக் கொண்டு சுத்தம் செய்து, பசுவின் இரண்டாவது பாகத்தில் ஸ்நானம் செய்து, வீட்டின் சுத்திக்காகவும், ஆத்ம சுத்திக்காகவும் புண்யாகவசனம் செய்து வீட்டுப் பொருட்கள் முதலியவற்றைப் புரோக்ஷித்து விட்டு நவச்ராத்தம் செய்து வ்ருஷோத்ஸர்ஜனம் செய்ய வேண்டும்.

மாட்டுத் தொழுவத்தில் பசுக்களின் மத்தியில் பரிசுத்தமான இடத்தில் விதிப்படி கோடுகளைக் கிழித்து, மௌனமாக லௌகாக்னியைப் பிரதிஷ்டை செய்ய வேண்டும்.

கிழக்கில் ஜலம் வைத்து அக்னியைப் பிரதிஷ்டை செய்து வடக்கு நுனியாகவும் கிழக்கு நுனியாகவும் தர்ப்பைகளால் பரிஸ்தரணம் செய்ய வேண்டும். அக்னிக்கு வடக்கில் ஸம்ஸ்காரங் களைச் செய்து பிரம்மாவை ஆவாஹனம் செய்ய வேண்டும்.

அக்னிக்கு வடக்கில் தான்யம் முதலியவற்றைப் பரப்பி, ஜலகும்பத்தைப் பிரதிஷ்டை செய்து அதில் ருத்ரபிரதிமையை வைக்கவும். 'பரிணோருத்ரஸ்ய' என்ற மந்திரத்தால் ருத்ரனை ஆவாஹனம் செய்து பூஜிக்கவும்.

பின் விருஷபத்தை முறைப்படி பூஜித்து பிரார்த்தனை செய்து கொள்ள வேண்டும். வஸ்திரம், ஹிரண்யம் முதலான ஐந்து வகை தானங்களைச் செய்ய வேண்டும்.

'ருத்ராய பலிம்ததாமி' என்று பலிதானம் செய்யவும்.

## மஹைற கோத்திஷ்ட சிராத்தம்

இந்த ஏகோத்திஷ்ட சிராத்தமும் ஸபிண்டீகரண சிராத்தமும் காரிகையில் கூறிய கிரமத்தில் அனுஷ்டிப்பவர்கள் அதன்படியும் மாசிக சிராத்த கிரமத்திலும் அனுஷ்டிக்க வேண்டும்.

கர்த்தா ஸ்நானம் செய்து மாத்யாந்நிகம் செய்து மறுபடி ஸ்நானம் செய்துவிட்டு மஹைறகோத்திஷ்டம் செய்ய வேண்டும்.

ஏகோத்திஷ்டத்தில் இரண்டு அக்னிகளை ஸ்தாபிக்க வேண்டும். வடக்கில் ஹோமத்திற்காக அக்னி அதற்கு வலதுபுறம் பிண்ட பிரதானத்திற்காக மேடை; அதற்கும் வலது புறம் பிராமண ஸ்தானத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்ட அக்னியை மேற்கு நோக்கி வீற்றிருக்கும் பிதாவாக தியானிக்க வேண்டும். அந்த பிராமண ஸ்தான அக்னிக்கு மேற்கில் ஆஸனம், பாத்யம், அர்க்யம், ஆசமனம், திலோதகம் முதலியவற்றை அர்ப்பணம் செய்ய வேண்டும்.

பிராசீனா விதி முதலில் பிராமன ஸ்தான அக்னியை உல்லேகனம் முதலியவற்றைச் செய்து பிரதிஷ்டை செய்ய வேண்டும். அந்த அக்னியை மேற்கு நோக்கி இருக்கும் பிரேத ரூப பிதாவாக ஆவாகனம் செய்து ஆஸனம்.

## மந்திரம் சொல்லி சிராத்தம்

அர்க்யம். பிராமணஸ்தான அக்னியின் வடக்கில் தர்ப்பைகளைத் தெற்கு நுனியாகப் பரப்பி அப்படிப் பரப்பின பூமியில் எள்ளை இறைத்து திலோதக பாத்திரத்தை வைக்கவும் ஒரு தர்ப்பையில் செய்த பவித்திரத்தைத் தெற்கு நுனியாக அதன் மேல் வைக்கவும்.

## அர்க்யப்ரதானம்

பிராமண ஸ்தான அக்னிக்கு மேற்கில் ஒரு பாத்திரத்தில் சுத்த ஜலம் விட்டுப் பாத்திரத்தை அதன் மீது வைத்து

உத்தரணியால் அர்க்ய பாத்திரத்திலிருந்து சிறிது ஜலம் எடுத்து அளிக்க வேண்டும்.

**உபசார||**

வடக்கில் பிரதிஷ்டை செய்த சரிவிற்கு அபிகாரம். ஹோமாக்கினிக்கு வடக்கில் அர்க்கிலத்திற்கு அப்பால் அதை வைக்க வேண்டும். தர்ம சாஸ்திர விதிப்படி உல்லேகனம். மௌனமாக லௌகிகாக்னி பிரதிஷ்டாபனம். தெற்கு நுனியாகவும் மேற்கு நுனியாகவும் தர்ப்பைகளால் பரிஸ்தரணம்.

அக்னிக்கு வடக்கில் தர்ப்பைகளைப் பரப்பி, அவற்றின் மேல் தர்வீ, ஆகிய ஸ்தாலீபுரோக்ஷணி, இதர தர்வீ ஆகிய வற்றை தனித்தனியாக வைக்கவும். ப்ரோக்ஷணி ஸம்ஸ்காரம், ஆஜ்யஸம்ஸ்காரம், தர்வீஸம்ஸ்காரம் ஆகியவற்றைச் செய்து விட்டு, அப்பிரதக்ஷணமாகப் பரிசேஷணம். தர்வியைப் பரப்பி வ்யஞ்ஜனத்துடன் கூடிய அன்னத்திலிருந்து ஒரு தடவை எடுத்து வைத்து அபிகாரம் செய்து தெற்கில் சாம்பலுடன் கூடிய அக்னியைத் தெளிவாக்கி அதில் ஹோமம். பரிசேஷணம்.

ஸ்தலசுத்தி: பிராமண போஜனஸ்தானீய அக்னிக்கு மேற்கில் எள்ளும் மணலும் இறைக்கவும்.

கட்டை விரலால் அன்னத்தைத் தொட்டு எள்ளும் ஜலமும் விடவும்.

பிரேத பித்ருஸ்வரூபி ஜனார்த்தன ப்ரீயதாம்||

ப்ரேதபித: யதாஸுகம் ஜுஷஸ்வ

தெற்கு நோக்கி இருந்து கொண்டு எள்ளும் நெய்யும் கலந்த பாயஸான்னத்தைக் கையில் எடுத்து கையை மறித்து (பித்ரு தீர்த்த முறையில்) முப்பத்திரண்டு ஆஹுதிகள் செய்யவும்.

ஹோமம் செய்த பிறகு அன்னம் சமர்ப்பிக்கவும்.

அக்னி ஸமீபத்தில் மாஸிசிராத்தத்தில் போல ஜலத்தை விடவும். அர்க்ய ஜலதானம் இல்லை.

இதம்தே தக்ஷிணா। இதம் தே தாம்பூலம்। வாஜேவாஜே என்ற மந்திரத்தைச் சொல்லி முடிவில் தர்ப்பையால் தொட்டுக் கொண்டு 'அபிரம்யதாம்' என்று சொல்லவும். இதுதான் பிராமண விஸர்ஜனம்.

ஹோமம் செய்த அக்னிக்குத் தெற்கில் பிண்ட தானம் பிண்ட ப்ரதானம் கரிஷ்யே என்று சங்கல்பம்.

தெற்கு நுனியாகத் தர்ப்பைகளைப் பரப்பி சுவற்றில் 'மார்ஜயந்தம் ப்ரேத மமபிதா' என்று எள்ளும் ஜலமும் விட்டு ஹோமம் செய்து மிஞ்சிய அன்னத்தால் குதிரைக் குளம்பு அளவு அன்னத்தை பிண்டமாக எடுத்துக் கொள்ளவும்.

கோத்ரஸ்ய + ச்ராத்தே -

சோத்ராயரதம் பிண்டம் ததாமி

மார்ஜயதாம் ப்ரேதோ மமபிதா

என்று சொல்லி எள்ளும் ஜலமும் அதன்மேல் விடவும்.

தோத்ர + பித॥ ஏதம்பிண்ட முபாதிஷ்ட்டஸ்வ

என்று அர்க்கிய ஜலத்தால் மூன்று முறை அப்பிரதட்சணமாகப் பரிசேஷனம் செய்து பாத்திரத்தைக் கவிழ்த்து, புரோக்ஷணம் செய்து நிமிர்த்தி வைக்கவும்.

ஸாத்குண்யத்திற்காகத் தட்சிணை அளிக்கவும். எஞ்சிய அன்னம் முதலியவற்றையும், பிண்டத்தையும் ஜலத்தில் போட்டுவிட வேண்டும். பிறகு ஸ்நானம் செய்து புண்யாஹவசனம் செய்ய வேண்டும்.

இத்துடன் மஹகோத்திஷ்ட சிராத்தம் முடிவடைந்தது.

தொடர்ந்து அடுத்த நாள் ஸபண்டகோணம்.

●

# 7. சமண்டீகரணம்

## (பன்னிரண்டாம் நாள்)

---

சமண்டீகரணம் பன்னிரண்டாவது நாள் நடப்பது. இதுவரை பிரேத சொரூபமாக இருந்தவரை, அவருடைய முன்னோர்களான பித்ருக்களுடன் சேர்க்கிறோம். இதற்கு அவர்கள் வந்திருந்து ஏற்றுக் கொள்ள அனுமதி தரவேண்டும்? அதற்காகத் தான் இந்த முக்கியமான கர்மா செய்யப்படுகிறது.

தகப்பனாருக்கு மேலே பல காலம் பித்ருர்களாக இருக்கும் மூன்று பேரைக் கூப்பிடுகிறோம். தகப்பனாருடைய தந்தை - பாட்டன் - முப்பாட்டன் மூவரையும் அழைக்கிறோம். இப்போது பிரேத சொரூபமாக இருக்கும் அப்பா பித்ருஸ்தானத்தை அடைய வேண்டும். அதனால் அவருக்கு முந்தைய இரண்டு பித்ருக்கள்ளையும் அழைத்து ஆவாகனம் பண்ணி இருக்கிறோம். பிரேத சொரூபமாக இருக்கும் அப்பாவை பித்ருஸ்தானத்துக்கு உயர்த்தப் போகிறோம். ஆகவே இரண்டு பித்ருக்களுக்கு ஒன்றும், அப்பாவுக்கு ஒன்றும் என்று இரண்டு தனித்தனி சிராத்தங்கள் செய்யப்படுகின்றன. முந்தையவருக்கும் பவித்ரம்தனி - அப்பாவுக்கு ஒற்றைப் புல்லுடன் தனிப்பவிருத்ரம் - என்று இரண்டு பிரிவாகத் தனித்தனியே நடக்கிறது.

இப்போது அந்த இரு பித்ருக்களையும், பிரேத சொரூபமாக இருக்கும் அப்பாவுடன் பழக வைத்து,

பரிச்சயம் ஆன பிறகு சேர்த்து வைக்க வேண்டும். பிரேத சொரூபத்துக்குத் தனிச் சாப்பாடு - பித்ருக்களுக்குத் தனிச் சாப்பாடு என்றும், தனித்தனியாக அர்க்கியம் என்றும் வைத்து உபசாரம் செய்கிறோம். பித்ருக்களுடன் பழகிய அப்பாவையும் பித்ருவாக ஏற்றுக் கொள்ளுங்கள் என்று வேண்டி, அனுமதி கேட்கிறோம். அவர்கள் அனுமதி கொடுத்தவுடன் சேர்த்து வைக்க முற்படுகிறோம். இரண்டு அர்க்கிய ஜலத்தையும் மந்திரம் சொல்லிச் சேர்த்து விடுகிறோம். ஒன்றாகிவிட்ட ஜலத்தை அப்புறம் தனித் தனியாகப் பிரிக்க முடியாதல்லவா? அப்பாவுக்குப் பித்ருப்ய பிராப்தி கிடைத்து விட்டது!

இப்போது பிண்டங்களையும் சேர்க்கிறோம். மூன்று பித்ருக்களுக்காக மூன்று பிண்டங்களை வைத்துச் சிராத்தம் செய்த நிலையில், புதிதாக வந்து சேரப்போகும் அப்பாவுக்கும் பிண்டம் தயாராகிறது. அது வாழைப்பூ உருவத்தில் நீளமாக இருக்கும். அதை மூன்றாகப் பாகம் பண்ணி, மூன்று பித்ருக்களுடைய பிண்டங்களுடன் சேர்த்து விடுவோம். இப்போது பிதா, பிதாமகா, பிரபிதா மகா என்று மூன்று பித்ருக்களாக அமைத்து விட்டோம். அப்பாவுக்குப் பித்ருஸ்தானம் கிடைத்துவிட்டது. மந்திரத்தைச் சொல்லிச் சேர்த்து "நாங்கள் ஒன்றாக ஆகிவிட்டோம்" என்று சம்மதிக்க வைத்துவிட்டோம். பித்ருப்ய பிராப்தி கிடைத்துவிட்டது. பிரேத சொரூபம் வெளியேறிவிட்டது. இதைக் காட்டத்தான் ஒத்தனை அனுப்பி வைக்கிறோம்.

"இது எப்படிச் சாத்தியம்? இந்த ஒரு பாவனையில் பிரேத சொரூபமாக இருந்தவர் பித்ருவாகிவிட முடியுமா?" என்று நீங்கள் கேட்கலாம். ஆணும் பெண்ணுமாக இருந்தவர்கள், ரிஜிஸ்திரார் ஆபீசில் மாலை மாற்றிக் கொண்டு கல்யாணம் செய்து கொண்டவுடன் பதிவுத் திருமணம் மூலம் கணவன்

மனைவியாக ஆகி விடுகிறார்கள் அல்லவா? அதைப் போலவே இங்கும் சம்ஸ்காரம் மூலமாக அவர்களைச் சேர்த்து வைத்து அங்கீகாரத்தையும் பெற்று விடுகிறோம்.

மனஸா - வாசா - கர்மனாக மூன்றின் மூலமாகவும் இந்தக் காரியம் நிறைவடைகிறது. இது ஒரு வருஷத்தில் செய்து முடிக்கப்பட வேண்டியது. அப்படி ஒரு வருஷம் எடுத்துக் கொண்டு காத்துக் கொண்டிருந்தால், அதுவரையில் குடும்பத்தில் ஸாந்தி செய்து நடத்த வேண்டிய அவசியமான சுபகாரியம் எதையுமே செய்ய முடியாது. பையனுக்கு உபநயனம் பண்ணி வைக்க முடியாது. கர்ப்பமாக உள்ள மருமகளுக்கு பும்ஸவனஸீ மற்ற காரியங்கள் நடத்த முடியாது. கல்யாணம் நிச்சயமாகி உள்ள பெண்ணுக்குத் திருமணம் செய்விக்க முடியாது. மேலும் இந்த ஓர் ஆண்டுக்குள் இந்தத் தகப்பனாருக்குச் செய்ய வேண்டிய கர்த்தாவான மகன் இறந்து போய்விட்டால், அப்புறம் இதைச் செய்யவே முடியாது. அவனுடைய மகனுக்கு இதைச் செய்யக் கூடிய யோக்கியதாம்சம் கிடையாது அல்லவா? இதை உத்தேசித்துத்தான் ஒரு வருஷத்தில் செய்து முடிக்க வேண்டியதை ஒரே நாளில் செய்து முடித்து விடுகிறோம். பத்து நாள் தீட்டு முடிந்ததும், பதினோராம் நாள், ஏகோத்ருஷ்டம், உடனே பன்னிரண்டாம் நாள் தொடர்ந்து சமண்டீகரணம் என்று முடித்து விடுகிறோம். பதினோராம் நாள் காரியம் முடிந்த பிறகு, எங்கேயும் வெளியே போகாமல் பத்திரமாக வைத்திருந்து காப்பாற்றி, பன்னிரண்டாம் நாள் காரியத்தையும் பூர்த்தி பண்ணி விடுகிறோம். இப்போது அப்பாவுக்கு பித்ருவாக வந்து குடும்பத்தில் நல்ல காரியங்களில் நாள் கிடைக்கும்போது கலந்து கொள்ளும் முழுமையான தகுதி கிடைத்து விட்டது!

இப்படிப் பிராப்தி பண்ணியாகி விட்டது என்றாலும், சாவகாசமாகப் பன்னிரண்டு மாதங்கள் பண்ணி,

பிராமணர்களுக்குச் சாப்பாடு போட்டு, கடைசியில் 12வது மாத நிறைவில் ஆப்திகம் பண்ணி முடிக்க வேண்டும். அப்போதுதான் குடும்பத்தில் அவரவர் காரியங்கள் தடை இன்றி நிறைவேற முடியும். வீட்டில் ஸாந்தி பண்ணி பித்ருக்களுடன் நிறைவான ஆசீர்வாதத்துடன் காரியங்களைச் செய்து முடிக்க முடியும்.

இப்போது ஸபண்டீகரணத்தின் முக்கியமான அம்சங்களைப் பார்ப்போம்...

காலையில் விச்சின்னாக்னி ஸந்தானமோ, ஸமிதா தானமோ செய்து, நடுப்பகலில் அதே அக்னியில் ஸ்பிண்டீகரணம் செய்ய வேண்டும்.

மாத்யான்னிகம் செய்துவிட்டு, கர்த்தா பன்னிரண்டு நாழிகைக்கு மேல் பிராம்மணர்களை வரவேற்று ''கோபதாபம் இல்லாதவர்களாகவும் பரிசுத்தர்களாகவும், வேதம் ஓதுபவர்களாகவும் உள்ள உங்களுடன் என்னால் இந்தச் சிராத்த கர்மம் தொடங்கப்படுகிறது'' என்று அவர்களிடம் பிரார்த்தனை செய்துகொள்ள வேண்டும். பிறகு பாதப் பிரக்ஷாளனம்.

க்ருஸரம், தாம்பூலம், அப்யஞ்ஜனம் முதலியவற்றை அளித்து, ஸ்நானம் செய்வித்துத் தானும் ஸ்நானம் செய்து, உலர்ந்த வஸ்திரங்கள் இரண்டு அணிந்து, கால் அலம்பிக் கொண்டு, ஆசமனம் செய்துவிட்டு, வந்துள்ள பிராம்மணர் களைத் தனித்தனியே 'ஸ்வாகதம்' என்று கூறி, வரவேற்றுக் கால் அலம்ப ஜலம் கொடுத்து, முறைப்படி ஆசமனத்திற்குத் தீர்த்தம் கொடுத்துப் பதினைந்து நாழிகை அளவில் சிராத்தத்தைத் தொடங்க வேண்டும்.

வீட்டின் வடகிழக்கில் ஔபாசன அக்னிஸ்தானம். அதற்குத் தென்புறமாகப் பித்ருஸ்தான பிராமணருக்கு இடம். அதற்கு மேற்கில் விச்வேதேவஸ்தான பிராம்மணருக்கு

இடம் என்று கிருஹ்ய ஸூத்ரபாஷ்யத்தில் கூறியுள்ளபடி பிராமணர்களை வீற்றிருக்கச் செய்து அட்சதையால் அர்ச்சிக்க வேண்டும்.

பிராசீனாவிதி செய்துகொண்டு, என்னை எடுத்துக் கொண்டு 'வஸூருத்ராதித்ய ஸ்வரூபேப்யோ அஸ்மது பீது; பித்ரு பிதா மஹப் பிதா மஹோப்யோ நம:' என்று சொல்லித் தகப்பனாரின் பித்ருக்கள் ஸ்தானப் பிரம்மணனை அர்ச்சிக்க வேண்டும்.

உபவீதி அட்சதை எடுத்துக்கொண்டு 'சிராத்தஸம்ரட்சக மஹாவிஷ்ணுவே நம: என்று விஷ்ணு ஸ்தானத்தில் உள்ள பிராமணரை அர்ச்சிக்க வேண்டும்.

சிராத்த பூமியைக் கயையாகத் தியானித்துப் பகவான் ஜனார்த்தனைத் தியானித்து நமஸ்கரித்துப் பிறகு சிராத்தத்தைத் தொடங்குகிறேன் என்று வடக்கு நோக்கிப் பிரார்த்தனை செய்து நமஸ்கரிக்கவும்.

பிராம்மணர்களின் பாதங்களில் நெய் கலந்த கோமயத்தால், பூசிக்கத் தம் அட்சதை புஷ்பம் தீர்த்தம் தர்ப்பை ஆகியவற்றை எடுத்துக்கொண்டு, அர்ச்சித்து உபசரிக்க வேண்டும். பிராசீனா விதி செய்து கொண்டு அவ்வாறே பித்ராதிஸ்த்தான பிராமணருக்கும் பாதங்களில் நெய் கலந்த கோமயம் பூசி, கந்தம் எள், புஷ்பம் தீர்த்தம் எடுத்துக் கொண்டு, அர்ச்சித்து உபசரிக்க வேண்டும். பாதங்களில் ஜலம் விட்டு (ஸூபாத்யம்) அலம்பவும். அவ்வாறே விஷ்ணுவின் பாத பரக்ஷானனம்.

ஸபண்டீகரணச்ராத்த ஹோமகர்மங்களை முடித்து, பிறகு போஜனஸ்தானத்தில் அமரச் செய்து, இலையில் அன்னம், நெய், பட்சணம், காய் கறிகளைப் பரிமாறி அபிகாரம் செய்து வைக்க வேண்டும்.

பிரேத பித்ருபிராமணரும் தேவ ப்ராம்மணரும் ஆஹவநீய அக்னிக்கு ஒப்பானவர். பரிமாறியதும் இனிப் பரிமாறப் போவதுமான அன்னம் அமிருதம், ஆத்மா பிரம்மம், அன்னம்பிரம்மம், நானும் பிரம்மம், சாப்பிடுபவரும் பிரம்மம், இந்த பூமிகையை, இந்த போக்தா கதாதரர், இந்தப் பாத்திரம் வெள்ளி என்று தியானம் செய்யவும்.

போஜனம் முடித்த பிறகு, பிராம்மணர்களுக்கு உத்தரா போஜனத்திற்கு விச்வேதேவருக்கு முதலாக 'அம்ருதா பிதானமஸி' என்று மந்திரத்தைச் சொல்லித் தீர்த்தம் போடவும்.

உச்சிஷ்ட பிண்டத்தை காக்கைகளுக்குப் போடவும். முதலில் பிரேத பித்ருபிராமணர், கையலம்பிக் கொண்டு ஆசமனம் செய்ய வேண்டும். பிறகு பித்ரு பிராமணர், அதன் பிறகு விச்வ தேவபிராம்மணர், கடைசியில் விஷ்ணு பிராம்மணர் என்ற வரிசை. அதற்கு மேலுள்ள காரியங்களைத் தேவ பூர்வமாகச் செய்ய வேண்டும்.

ஹோமம் செய்து சாப்பிட்டு மிகுந்து முன்பே எடுத்து வைத்திருந்த எள்ளுடன் கூடிய அன்னத்தால் ஆறு பிண்டங்களும், பன்னிரண்டு விரற்கடை அளவு பிரேத பிண்டம் ஒன்றும் செய்து மார்ஜன கிரமத்தில் வைத்து எள்ளும் தர்ப்பை நுனியால் நீரும் விடவும். முறைப்படி பிதாவின் பித்ருக்களுக்கு மந்திரம் சொல்லி அர்க்கியம் விடவும்.

பிரேத பிண்டத்தை (தங்க) கம்பியால் மூன்று பாகம் செய்யவும். முதற்பாகத்தை பிதாமஹர் பிண்டத்துக்கு முன்பும், இரண்டாவதுபாகத்தை பிதாவின் பிதாமஹர் பிண்டத்துக்கு முன்பும், மூன்றாவது பாகத்தைப் பிதாவின் பிதாமஹர் பிண்டத்துக்கு முன்பும் வைக்கவும்.

பிறகு வைதரணி கோதானம் முதலியவற்றைச் செய்ய வேண்டும். பசுவை அலங்கரித்து, தக்ஷிணை, தாம்பூலம்

முதலியவற்றுடன் பூஜித்து மஹாவிஷ்ணு ஸ்வரூபமான பிராமணருக்குத் தானம் செய்ய வேண்டும்.

பிறகு நௌகா (படகு) தானம், பத்து தானங்கள், ஐந்து தானங்கள், ஒன்பது திரவிய தானங்கள், தடி, குடை, கமண்டலம், பாதரட்சை, படுக்கை, ஆசனம், வாகனம், விபூதி, ருத்ராட்சம், துளசி, வில்வம், கம்பளம் என்று தானங்களைச் செய்ய வேண்டும்.

பிறகு யமதர்மராஜாவின் சபையில் உள்ள பன்னிரண்டு சிரவணர்களை உத்தேசித்து, சங்கல்பத்துடன் தானங்களைச் செய்யவேண்டும்.

பிறகு மந்திரங்களை முறைப்படி சொல்லி, மேற்கு நோக்கிய இடது கையால், பிரேத பித்ரு (மாத்ரு) பிண்டத்தின் மூன்று பாகங்களையும், மேற்கு நோக்கி நகர்த்தி மீது பித்ராதீ (மாத்ராதி) பிண்டங்களுடன் ஒரே காலத்தில் ஒன்று சேர்க்கவும். இப்படிச் சேர்ந்த பின் தெற்கு முகமாகக் கைகூப்பி நின்று கொண்டு உபஸ்தான மந்திரங்களுடன் வேண்டிக் கொள்ளவும்.

மந்திரங்களைச் சொல்லிப் பிண்டங்களை அர்க்கிய ஜலத்தால் தெற்கிலிருந்து ஆரம்பித்து அப்பிரதட்சணமாக விடாமல் தொடர்ந்து, பித்ரு தீர்த்தத்தால் இரண்டு வரிசைப் பிண்டங்களையும் ஒன்று சேர்க்கவும்.

பின் பிண்டங்களை மேற்கிலிருந்து கிழக்காக முதலில் நடுப் பிண்டங்களையும், பிறகு தெற்குப் பிண்டங்களையும், அதன்பின் வடக்குப் பிண்டங்களையும் உத்வாஸனம் (எடுத்து அப்புறப்படுத்துதல்) செய்யவும். பிறகு தர்ப்பைகளை எடுத்துப் போட்டு ஆசமனம் செய்து முடிக்கவும்.

மயாக்ருதமிதம் ஸபிண்டீகரண சிராத்தம்

தத்ஸத் பிரஹ்மார்ப்பணமஸ்து''

*பிண்டங்களை எடுத்து நதி முதலியவற்றில் போட்டுவிட்டு, ஸ்நானம் செய்து, வீட்டுக்குத் திரும்பி, புண்யாகவசனம் செய்து, புது யக்ஞோபவீதம் தரித்துக் கொள்ளவும்.*

*மறுநாள் ஸபண்டீகரணத்தின் அங்கமாகத் தர்ப்பணம் இல்லை.*

*ஸ்பிண்டீகரணத்தால் பிரேதத்துவத்திலிருந்து பித்ருத்வம் பெறப்படுகிறது என்பது சாஸ்திரம்.*

●

# 8. திரயோதசாஹ விதி

**(பதின்மூன்றாவது நாள்: சுபஸ்வீகரணம்)**

---

உதக சாந்தி ॥ 1 ॥

நவக்ரஹஹோமம் ॥ 2 ॥

ஹோமமுடிவில் அக்ஷதை ஆசீர்வாதங்களுக்குப் பின் கர்த்தா புது வஸ்திரத்தை உடுத்துக் கொள்ளவேண்டும்.

பிறகு புரோகிதர் ஒரு தாம்பாளத்தில் சந்தனம், குங்குமம், புஷ்பம், வெற்றிலை, பாக்கு, பழம், முகம் பார்க்கும் கண்ணாடி முதலியவற்றை வைத்துக் கர்த்தாவுக்கு ஆசீர்வாதம் செய்து கொடுக்க வேண்டும். கர்த்தாவும் அவரது குடும்பத்தைச் சேர்ந்தவர்களும் சந்தனம், குங்குமம் முதலியவற்றைத் தரித்துக்கொள்ள வேண்டும்.

பிறகு எவருக்குக் கர்மா செய்யப்பட்டதோ, அவரைப் பற்றின சுலோகத்தை எழுதிப் படித்து, அவருடைய பெருமையைப் பற்றித் தெரிந்தவர்கள் சொல்லக் கர்த்தாவும் பிறரும் கேட்கவேண்டும்.

பின் வரும் மந்திரத்தைக் கர்த்தா ஜபிக்க வேண்டும்.

ஸம்பச்யாமி ப்ரஜா அஹமிட ப்ரஜஸோ மானவீ:

ஸர்வோ பவந்து நோ க்ருஹே॥

ஸந்த் வாஸிஞ்சாமி யஜுஷா ப்ரஜாமாயுர்த்தனஞ்ச। ரோசனோரோசமான: சோபன: சோபமான: கல்யாண:। ॥ இந்த்ர: ஸோமம் பிபது க்ஷேமோ அஸ்துந.॥

என்று ஆசாரியர் முதலியவர்கள் முடிவில் யஜமானருக்கும் குடும்பத்தில் அனைவருக்கும் மங்களாசீர்வாதம் செய்ய வேண்டும்.

பின் பிருஹஸ்பதி ஸம்பாவனை

ஸபாதாம்பூலம். ஆரத்தி ॥

சுபம்.

அன்று மாலை ஆலயத்துக்குச் சென்று பிரார்த்தனை செய்துகொள்ள வேண்டும்.

இப்படிப் பிராப்தி பண்ணியாகிவிட்டது என்றாலும், சாவகாசமாக பன்னிரண்டு மாதங்கள் பண்ணி, பிராம்மணர்களுக்குச் சாப்பாடு போட்டுக் கடைசியில் 12-வது மாத நிறைவில் ஆப்திகம் பண்ணி முடிக்க வேண்டும். அப்போதுதான் குடும்பத்தில் அவரவர் காரியங்கள் தடையின்றி நிறைவேற முடியும். வீட்டில் நாந்திபண்ணி பித்ருக்களின் நிறைவான ஆசீர்வாதத்துடன் காரியங்களைச் செய்து முடிக்க முடியும்.

இந்த வருடம் பூராவும் தகப்பனாருக்கு இந்தக் காரியம் பண்ணுகிறவன் கோயிலுக்குப் போகக்கூடாது. விரத சம்பிரதாயம் எதையும் மேற்கொள்ளக்கூடாது. ஹோமம் போன்ற பிரார்த்தனைக் காரியங்களில் ஈடுபடக்கூடாது. பூஜை, ஜபம் என்று வைத்துக் கொள்ளக்கூடாது. பண்டிகைகளைக் கொண்டாடக்கூடாது. க்ஷேத்திரங்களுக்குப் போவதோ, தீர்த்தாடனம் செய்வதோ கூடாது.

நமது சம்ஸ்காரங்கள், சம்பிரதாயங்கள் எல்லாமே வேதங்களை அடிப்படையாகக் கொண்டவை. அவை தர்க்க

பூர்வமாகவும் விஞ்ஞானப் பூர்வமாகவும் ஏற்றுக் கொள்ளப்பட வேண்டியவை. அவற்றை இயன்றவரையில் கடைப்பிடிக்க வேண்டியது நம்முடைய கடமை.

வேத அத்யயனம் செய்வது எல்லோராலும் முடியாது. ஆனால் சந்தியாவந்தனம் பண்ணலாம். தர்ப்பணம், சிராத்தம் எல்லாவற்றையும் தவறாமல் செய்ய வேண்டும். பூஜை, ஜபம், ஆசாரநியமம் எல்லாவற்றையும் கூடிய வரை கடைப்பிடிக்க வேண்டும்.

பித்ருக்களை முறைப்படி ஆராதித்து, ஆசீர்வாதத்தைப் பூரணமாகப் பெற்றால், அது நமக்கும் நம்முடைய குடும்பத்துக்கும் நன்மை தரும். அது எதிர்காலத்தில் வரும் பரம்பரையினரை நல்ல முறையில் உருவாக்கும்.

●

# ௯. அனுபந்தம்

இந்த நூலில் இதுவரை அளிக்கப்பட்ட சம்ஸ்காரம் பற்றிய விவரங்களை ஒட்டி ஆசௌசம் பற்றிய குறிப்புகள் அனுபந்தத்தில் வழங்கப்பட்டுள்ளன.

ஏற்கனவே விவரிக்கப்பட்டவை எல்லாவற்றையும் ஒட்டி, கடைப்பிடிக்க வேண்டிய விதிகளையும், செய்யவேண்டிய தானங்களைப் பற்றியும் விரிவான விவரங்கள் இங்கே அளிக்கப்பட்டுள்ளன.

ஆசௌசம், சம்ஸ்காரம் முதலிய விஷயங்களில் செய்ய வேண்டியவற்றைச் செய்யாவிட்டாலும், செய்யக்கூடாதவைகளைச் செய்தாலும், இந்த இரண்டிற்கும் மகாதோஷம் உண்டு. அவற்றைத் தவிர்க்கவும், அப்படி நேர்ந்து விட்டால் செய்ய வேண்டிய பிராயச்சித்தம் குறித்தும் இங்கு விவரங்கள் அளிக்கப்பட்டுள்ளன.

கர்மாக்களை நிர்ணயித்த காலத்தில் முறைப்படி செய்பவன் ஸ்வர்க்கத்தை அடைவான் என்றும், செய்யத் தவறியவன் விபரீதமான நரகத்தை அடைவான் என்றும் சாஸ்திரம் கூறுகிறது.

பாபம் என்பது ஆயுளைக் குறைக்கும்; வியாதியை உண்டு பண்ணும்; மனக்கிலேசத்தைத் தூண்டும்; தாரித்ரியத்தை வளர்க்கும்.

புண்யம் என்பது ஆயுள் வ்ருத்தி, ரோகமின்மை, மனநிம்மதி, சம்பத்து ஆகியவற்றை உண்டு பண்ணும்.

ஆகையால் கூடியவரை பித்ருக்களைத் திருப்தி செய்யக்கூடிய காரியங்களைச் சிரத்தையுடன் செய்து புண்ணியத்தைத் தேடிக்கொள்ள வேண்டும். அதைக் கைவிட்டுப் பாபத்தைச் சம்பாதித்துக் கொண்டு, பின்னர் பிராயச்சித்தத்தைத் தேடுவது மூடத்தனமாகும்.

## ஆசௌச காண்டம்

ஆசௌசம் என்றால், ஜ்ஞாதிகள் முதலானவர்கள் இறந்த போதாவது அல்லது பிறந்தபோதாவது அசுசியாக இருப்பது. தானம் முதலான கர்மங்களில் யோக்கியமில்லாமையைத் தெரிவிப்பதும், புண்யாதி கர்மாக்களைச் செய்யக்கூடாமல் விசேஷமான பாபரூபமாகவும் இருப்பதற்கு ஆசௌசம் என்று சொல்லப்படுகிறது.

ஸ்நானத்தால் போகக்கூடிய ஆசௌசம் எதுவெனில், அறிந்த ஸம்பந்தத்தையுடைய பந்துக்களின் மரணம் முதலானவைகளால் ஏற்பட்ட ஆசௌசம்.

காலம், ஸ்நானம் இவ்விரண்டினாலும் போக்கக்கூடிய ஆசௌசம் எதுவெனில் ஜ்ஞாதிகளின் பிறப்பு, இறப்பு இவைகளால் ஏற்பட்ட ஆசௌசங்கள்.

எது பிரேத பிண்டதானம் முதலானவைகளைச் செய்யக் காரணமாயும், அசுசியாக இருத்தலைச் செய்வதாயும் இருந்துகொண்டு, ஒருவனை அண்டிக்கொண்டு, காலம், ஸ்நானம் இவைகளால் போகக்கூடியதாக இருக்கிறதோ அதுவே ஆசௌசம் என்று சொல்லப்படுகிறது.

## 1. ஜ்ஞாதிகள்

*1.* ஜ்ஞாதிகள் என்பது இருவகைப்படும். முதலாவது ஸபிண்டர்கள், அதாவது பத்துநாள் தாயாதர்கள். **2**-வது ஸமானோதகர்கள், அதாவது மூன்று நாள் தாயாதர்கள்.

அவர்களுள் ஸபிண்டர்கள் என்பது கூடஸ்தனிலிருந்து ஏழு தலைமுறை வரையில் உள்ளவர்கள். ஸமானோதகர்கள் எட்டாவது தலைமுறைமுதல் பதினான்காவது தலைமுறை வரையிலுள்ளவர்கள்.

2. ஒருவனுக்கு பிதா, பிதாமகன், ப்ரபிதாமஹன், புத்ரன், பௌத்ரன், ப்ரபௌத்ரன், இவன் உள்பட ஏழு தலைமுறை.

3. தகப்பன் பிள்ளைகளும், அண்ணன் தம்பிகளும் தாயாதர்களே.

## 2. பிறப்புத் தீட்டு

1. நாலாவது மாஸத்தில், கர்ப்பத்தின் விச்சித்தி உண்டானால் பிதாவுக்கு ஸ்நானம், மாதாவுக்கு 4 நாள் தீட்டு. 5வது 6-வது மாஸங்களில் விச்சித்தியுண்டானால் பிதாவுக்கும், ஸபிண்டர்களுக்கும் ஸ்நானம், 5, 6-வது மாஸங்களில் பிண்டம்போல் விழுந்தால் மேற்சொன்னவர்களுக்கு 3 நாள் தீட்டு. மாதாவுக்கு 5வது மாஸத்தில் 5 நாள் தீட்டு. 6வது மாஸத்தில் 6 நாள் தீட்டு.

2. 7-வது மாஸம் முதல், பிறந்தது பிள்ளையானால், மாதாபிதாக்களுக்கும், ஸபிண்டர்களுக்கும் பத்து நாள் தீட்டும், ஸமானோதகர்களுக்கு 3 நாள் தீட்டுமுண்டு.

3. புருஷசிசுவானால் 30 தினங்களுக்குப் பிறகும், ஸ்த்ரீ சிசுவானால் 40 தினங்களுக்குப் பிறகும், மாதாவுக்கு பாண்டஸ்பர்ச யோக்யதை உண்டாகும்.

4. ஸ்த்ரீசிசு பிறந்தால், அதன் பின்னோதரனுள்பட ஸஹோதரன், தகப்பன், பின்னோதரனுள்பட சிறிய தகப்பன், பெரிய தகப்பன், பின்னோதரனல்லாத சிறிய தகப்பன், பெரிய தகப்பன் பிள்ளைகள், பிதாமஹன், அந்தப் பிதாமஹனுடைய பின்னோதரர்களுள்பட ஸஹோதரர்கள் இவர்களுக்கு பத்துநாள் தீட்டு.

## ஸ்த்ரீ ஜனனத்தில் இன்னின்னாருக்குத் தீட்டு என்பதைக் காட்டும் பட்டியல்

87-ம் பக்கம் பிறப்புத் தீட்டு, 4, 5 பாராக்களைப் பார்க்க.




N.B. 5-வது வனுக்குப் பெண் பிறந்தால் 2, 3, 4, 5, 6, 7, 14, 15, 16 இவர்களுக்கு 10- நாள் தீட்டு மற்றவர்களுக்கில்லை.

7-வது வனுக்குப் பெண் பிறந்தால் 2, 3, 4, 5, 6, 7, 17 இவர்களுக்கு 10 நாள் தீட்டு மற்றவர்களுக்கில்லை.

*5. பின்னோதரரான, சிறிய தகப்பன் பெரிய தகப்பன் பிள்ளைகளுக்காவது, பிதாமஹனுடைய ஸஹோதரர்களின் பிள்ளைகளுக்காவது, சிசுவின் ஸஹோதரனுடைய பிள்ளை களுக்காவது தீட்டில்லை.*

*குறிப்பு: பட்டியலைப் பார்க்க.*

*6. பெண்கள், தாய், தகப்பன் வீட்டில் ப்ரஸவித்தாலும், அவர்களின் த்ரவ்யச் சிலவினால் வேறு இடத்தில் ப்ரஸவித்தாலும், தாய் தகப்பன்களுக்கு 3 நாள் தீட்டு.*

*7. ஒரு ஸ்த்ரீ, தன் ஸஹோதரன், சிறிய தகப்பன், பெரிய தகப்பன், அம்மான் முதலிய பந்துக்கள் வீட்டில் ப்ரஸவித்தாலும், அவர்களின் த்ரவியச்சிலவினால் வேறு எந்த விடங்களில் ப்ரஸவித்தாலும், அவர்களுக்கு 1 நாள் தீட்டு.*

*8. உபநயனமில்லாதவனுக்கும், ப்ரம்ஹசாரிக்கும் தீட்டில்லை.*

*9. ஜனனாசௌசத்திற்கு அதிக்ராந்தாசௌசமில்லை. பிதாவுக்கு மட்டில் ஸ்நானமுண்டு.*

*10. ஜனனத்தில் பிதாவுக்கு 2 நாழிகை சுத்தி. வெகுதூரத்தில் இருந்தால் ஒரு நாள் சுத்தி. அல்பதூரத்திலிருந்தால் ஒரு பகல் சுத்தி.*

## 3. இறப்புத் தீட்டு

### *(1.) 10-நாள் தீட்டு*

*1. தசராத்ரஜ்ஞாதிகளின் மரணத்தில் 10 நாள் ஆசௌசம்.*

*2. பிறந்து, பத்து நாட்களுக்குமேல் புருஷ சிசுவின் மரணத்திலும், விவாஹம் வரையில் ஸ்த்ரீப்ரஜையின் மரணத்திலும் தாய், பிதா, பின்னோதரப்ராதா, ஸஹோதரப்ராதா இவர்களுக்கு 10 நாள் தீட்டு.*

3. 7 வயதிற்குட்பட்டு உபநயனமான தசராத்ரஜ்ஞாதிகளின் பிள்ளைகள் இறந்தால் 10 நாள் தீட்டு.

4. 7 வயது முதல், உபநயனமானாலும், ஆகாமலிருந்தாலும் புருஷப்ரஜையின் மரணத்தில் 10 நாள் தீட்டு.

## (2) புருஷர்களுக்கு மூன்றுநாள் தீட்டு

1. மாதாமஹன்.
2. மாதாமஹீ.
3. அம்மான்.
4. அம்மாமி.
5. மாமனார்.
6. மாமியார்.
7. தாயின் ஸஹோதரி.
8. தகப்பனின் ஸஹோதரி.
9. உபநீதனான மருமான்.
10. உபநீதனான தௌஹித்ரன்.
11. உபநீதனான ஸமானோதகன்.
12. விவாஹமான பெண்.
13. ஸஹோதரி.
14. ஜனகமாதா.
15. ஜனகபிதா.
16. தத்தனானபிள்ளை.
17. 25-வது மாஸம் முதல் 6 வருஷம் முடிய அனுபநீதனான தசராத்ரஜ்ஞாதிகளின் பிள்ளை.

*18. 24 மாஸங்களுக்குட்பட்டு சௌளமாகிவிட்ட ஜ்ஞாதிகளின் பிள்ளை.*

*19. 7-வது வருஷம் முதல் விவாஹம் வரையில் தசராத்ர ஜ்ஞாதிகளின் பெண்.**

*20. ஸமானோதகர்களுக்கு:*

*1. ஏழு வயதிற்குட்பட்டு உபநயனமான ஜ்ஞாதிகளின் பிள்ளை.*

*2. ஏழு வயது முதல் உபநயனமானாலும் ஆகாவிட்டாலும் ஜ்ஞாதிகளின் பிள்ளை.*

*இவர்களின் மரணத்தில் 3 நாள் தீட்டு.*

## *(3) புருஷர்களுக்கு $பக்ஷிணித் தீட்டு*

*1. அத்தையின் பிள்ளை, பெண்.*

*2. அம்மானுடைய பிள்ளை, பெண்.*

*3. தாய் ஸஹோதரியின் பிள்ளை, பெண்.*

*4. ஸஹோதரியின் பெண்.*

*5. ஸஹோதரனுடைய கல்யாணமான பெண்.*

*6. பித்ருவ்யனுடைய பெண்.*

*7. பௌத்ரீ.*

*8. தௌஹித்ரீ.*

*9. 3-வயதிற்குமேல் உபநயனமில்லாத மருமான், தௌஹித்ரன்.*

---

*ஸ்த்ரீ சிசு விஷயத்தில் 3 தலைமுறை வரையில்தான் ஸாபிண்ட்யமென்பதை கவனிக்கவும்.

$ குறிப்பு: - பக்ஷிணி என்பது, இரண்டு இரவும் ஒரு பகலும், அல்லது ஒரு இரவும் இரண்டு பகலும் உள்ள காலம்.

இவர்கள் மரணத்தில் பக்ஷிணி ஆசௌசம்.

அருணோதயத்திற்கு அருணோதயம் ஒருநாளாகக் கணக்குச் செய்பவர்கள் இரவில் எப்போது இறந்தாலும், இதை ஒரு காலமாக வைத்துக் கொள்ள வேண்டியது.

மற்ற, ராத்ரி பதினெட்டே முக்கால் நாழிகைக்கு மேல் நேரிடுவதை மறுநாளில் சேர்த்துக் கணக்குச் செய்பவர்கள் மறுநாள் முதற்கொண்டே கணக்குச் செய்துகொள்ள வேண்டியது.

## (4) புருஷர்களுக்கு 1 நாள் தீட்டு

1. ஸபத்னீமாதாவின் ஸஹோதரன், ஸஹோதரி, பெண்.

2. மேற்கண்ட மூவருடைய பெண் , பிள்ளை.

3. மைத்துனன்.

4. பின்னோதரர்களான சிறிய தகப்பன், பெரிய தகப்பன் இவர்களின் பெண்.

5. பின்னோதர ப்ராதாவின் பெண்.

6. பின்னோதர அத்தை.

7. மேற்படியாளுடைய பெண், பிள்ளை.

8. ஸபத்னீமாதாவின் தகப்பன், தாயார்.

9. 25-வது மாதம் முதல் 6 வருஷம் முடிவு வரையில் விவாஹமாகாத ஜ்ஞாதியின் பெண்.

10. ஜநக ப்ராதா.

11. ஜநக ஸபிண்டன்.

12. பத்னீ, அவள் ஸந்ததி இரண்டுமில்லாத விஷயத்தில் மாமனார், மாமியார்.

*13. 6 மாஸத்திற்கு மேல் 24- மாஸத்திற்குட்பட்ட சௌளமாகாத ஜ்ஞாதியின் பிள்ளை.*

*இவர்கள் மரணத்தில் 1 நாள் ஆசௌசம்.*

## 4. ஸ்த்ரீகளுக்குப் பர்த்தாவுடன் ஏற்படும் தீட்டைத் தவிர தனிமையாக ஏற்படும் தீட்டுகள்

### *(1) ஸ்த்ரீகளுக்கு 3 நாள் தீட்டு*

*1. உபநயனமான ஸோதரன்.*

*2. உபநயனமான மருமான்.*

*3. உபநயனமான ஸோதரியின் பிள்ளை.*

*4. *ஸபத்னீமாதா.*

*இவர்கள் மரணத்தில் மூன்று நாள் ஆசௌசம்.*

### *(2) ஸ்த்ரீகளுக்கு பக்ஷிண்யாசௌசம்*

*1. பித்ருவ்யன்.*

*2. தாயின் ஸஹோதரி.*

---

*குறிப்பு: ஆசௌசகாண்டத்தில் பின்னமாதாவுக்கு 1 நாள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் மாதாவின் ஜாரபுருஷனுடைய பத்னி 'பின்னமாதா' என்று அர்த்தம் பண்ணப்பட்டிருக்கிறது.

அசுவிவேசனக்காரர், ஸபத்னீமாதாவின் மரணத்தில் ஸபத்னியினுடைய பெண்ணிற்கு 1 நாளும், ஸபத்னியினுடைய பெண் மரணத்தில் ஸபத்னிக்கு ஒரு நாளும் தீட்டு என்று சொல்லியிருக்கிறார். அது பிசகு. ஏனெனில், ஸபத்னியினுடைய பெண் இறந்தால் அந்தப் பெண்ணினுடைய தகப்பனாராகிய தன் பர்த்தாவுக்கு 3 நாள் தீட்டு இருக்க, இவளுக்கு மட்டில் 1 நாள் தீட்டுச் சொல்லக் காரணமில்லை.

அகபஞ்சஷஷ்டிக்காரர் இவ்விஷயத்தில் 3 நாள் தீட்டுச் சொல்லி இருக்கிறார்.

இத்யாதி காரணங்களைக் கொண்டு 3 நாள் தீட்டு என்பது ஸித்தாந்தம்.

3. மாதுலன்.

4. அத்தை.

5. மேற்கண்ட நால்வருடைய பிள்ளை, பெண்.

6. பிதாமஹன்.

7. பிதாமஹீ.

8. மாதாமஹன்.

9. மாதாமஹீ.

10. ஸஹோதரீ.

11. மேற்படியாள் பெண்.

12. மருமாள்.

இவர்களின் மரணத்தில் ஸ்த்ரீகளுக்கு பக்ஷிணித் தீட்டு.

## (3) ஸ்த்ரீகளுக்கு 1 நாள் தீட்டு

1. ஸபத்னீமாதாவின் புத்ரன், புத்ரீ, பகிநீ, ஸஹோதரன்.

2. மேற்சொன்ன நால்வரின் பெண்கள், பிள்ளைகள்.

3. பின்னோதர பித்ருவ்யன்.

4. பின்னோதர அத்தை.

5. மேற்படி இருவர்களுடைய பெண்கள், பிள்ளைகள்.

6. ஸபத்னீமாதாவின் தாய், தகப்பன்.

இவர்கள் மரணத்தில் 1 நாள் ஆசௌசம்.

குறிப்பு: இறப்புத் தீட்டுச் சொன்னவர்களில் பிள்ளைகள் பெண்கள் என்று சொல்லியிருப்பதில் பிள்ளைகள் உபநயனமானவர்கள், பெண்கள் விவாஹமானவர்கள் என்று அறிந்துகொள்க.

# 5. தீட்டுச்சேர்க்கை

## *(1) பிறப்புத்தீட்டில் பிறப்புத்தீட்டு*

*1. 3 நாள் தீட்டில் மற்றொரு 3 நாள் தீட்டு வந்தால் அது முன் தீட்டோடு போய்விடும்.*

*2. 10 நாள் தீட்டில் மற்றொரு 10 நாள் தீட்டு வந்தால் அது முன் தீட்டோடு போய்விடும்.*

*3. 3 நாள் தீட்டின் மத்தியில் 10 நாள் தீட்டு வந்தாலும், பின் சொல்லியதில் முன் சொல்லியது வந்தாலும், 10 நாள் தீட்டின் முடிவில்தான் தீட்டுப்போகும்.*

*4. ஒரு தீட்டின் நடுவில் ஒரு சிசு பிறந்தால், அதன் தாய், தகப்பன் இவர்களுக்கு மட்டில் பிறந்தது முதல் 10 நாள் தீட்டு உண்டு.*

*5. 10 நாள் தீட்டின் 10-வது நாள் ராத்ரியில் மற்றொரு ஸமமான தீட்டு வந்தால், பிறகு 2 நாளும், 10-வது நாள் ராத்ரியின் 4-வது யாமத்திலாவது, அருணோதயத்திலாவது வந்தால் பிறகு 3 நாளும் அதிகத்தீட்டு உண்டு.*

*6. 10 நாள் தீட்டின் மத்தியில் 3 நாள் தீட்டு எப்போது வந்தாலும், அதற்காக விசேஷமொன்றுமில்லை.*

*7. ஒருவன் தனக்கு சிசு, பிறந்து தீட்டுக்காத்துக் கொண்டிருக்கும்போது 10-வது நாள் ராத்ரியில் எப்போதானாலும் வேறு ஜனனாசௌசம் வந்தால் அதிகத்தீட்டில்லை.*

*8. ஒரு தீட்டுக்காத்துக்கொண்டிருக்கும்போது, இந்தத் தீட்டின் ஆரம்பத்திற்கு முந்தியே ஜனனமானதாக ஒரு தீட்டு பிந்தி வந்தால், பிந்திக்கேட்ட தீட்டின் முடிவிலேயே தீட்டுப் போய்விடும். (ஸம்பவத்திற்கே ப்ராதான்யம், ச்ரவணத்திற்கில்லை யென்றபடி)*

9. ஒருவனுக்கு இரட்டைப் பிள்ளைகள் பிறந்து ஜனன மானதில், ஒன்று முதல் நாளும் மற்றொன்று மறுநாளுமாக ஏற்படுகிற விஷயத்தில், ஸமமான தீட்டுகளில் முன் வந்த தீட்டோடு பின் வந்த தீட்டுப் போய்விடும் என்கிற ந்யாயத்தினால், முதலில் பிறந்த சிசுவின் காலத்தை ஒட்டி தீக்ஷா நிவ்ருத்தி, தீட்டுப் போக்குதல் முதலான விஷயங்களை அனுஷ்டிக்க வேண்டியது.

ஆனால், ஸூதிகாசௌசமானதினால் தாயாருக்கு மட்டில் பின்னாடிப் பிறந்தது முதல் 11-வது நாளில்தான் தீட்டுப் போகும்.

## (2) பிறப்புத் தீட்டும், இறப்புத் தீட்டும்

1. பிறப்புத் தீட்டைக்காட்டிலும் இறப்புத் தீட்டு பலமானது. இறப்புத்தீட்டுடன் பிறப்புத்தீட்டுப் போய்விடும். பிறப்புத்தீட்டுடன் இறப்புத் தீட்டு போகாது. ஆனால், ஒருவன் தனக்கு சிசு பிறந்து தீட்டுக் காத்துக் கொண்டிருக்கும்போது ஜ்ஞாதிமரணாசௌசம் ஏற்பட்டால் அது ஜனனாசௌசத்தோடு போய்விடும்.

𑌵𑍍𑌯𑌾𑌸 𑌵𑌚𑌨𑌮𑍍॥

𑌜𑌨𑌨𑌾𑌶𑍌𑌚𑌮𑌧𑍍𑌯𑍇𑌤𑍁 𑌜𑍍𑌞𑌾𑌤𑍀𑌨𑌾𑌂 𑌮𑌰𑌣𑍇 𑌸𑌤𑌿 ।

𑌸𑍂𑌤𑍍𑌯𑌾𑌶𑍌𑌚𑍇𑌨 𑌜𑌨𑌕𑌃 𑌜𑍍𑌞𑌾𑌤𑍀𑌨𑌾𑌂 𑌶𑌵𑌾𑌪𑍍𑌲𑍁𑌤𑌿𑌃 ॥

ஜநநாஶௌச மத்தியில் ஜ்ஞாதிமரணாசௌசம் ஏற்பட்டால் அது தாய் தகப்பனார்களுக்கு மட்டில் பிறப்புத் தீட்டோடு போய்விடும். மற்றவர்களுக்கு இறப்புத் தீட்டின் முடிவில் சுத்தி.

2. தாய், தகப்பன், தங்களுக்கு சிசு பிறந்து தீட்டுக்காத்துக் கொண்டிருக்கும்போது அந்த சிசுவானது இறந்தால் இறப்புத் தீட்டு அதிகமில்லை. 10-வது நாளில் சிசு இறந்தால் 2 நாளும்,

அன்று 8-வது யாமத்தில் இறந்தால் 3 நாளும் அதிகத்தீட்டு உண்டு. மற்றவர்களுக்கு அதிகத் தீட்டு கிடையாது.

3. ஜ்ஞாதிமரணாசௌசமத்தியில் சிறு பிறந்தால், தாய் தகப்பன்களுக்கு மட்டில் பிறந்தது முதல் 10 நாள் தீட்டு உண்டு.

4. ஒருவனுக்கு மாதாபிதாக்களின் மரணாசௌசமத்தியில் சிசு பிறந்தால் அந்த ஜனனாசௌசம் மரணாசௌசத்தோடு போய்விடும். சிசுவின் தாயாருக்கு மட்டும் ஜனனம் முதல் 10 நாள் தீட்டு உண்டு.

5. ஸமமாயிருந்தாலும், அல்பமாயிருந்தாலும், இறப்புத் தீட்டுடன் பிறப்புத் தீட்டு போய்விடும்.

6. பிறப்புத்தீட்டுள்ள ஜ்ஞாதிகளுக்கு 10 நாளுக்குள் அந்த சிசு மரித்தால் இறப்புக்காகத் தீட்டில்லை.

## (3) இறப்புத்தீட்டில் இறப்புத்தீட்டு

1. 10 நாள் தீட்டில் வேறொரு 10 நாள் தீட்டு வந்தால் முந்திய தீட்டோடு பிந்திய தீட்டும் போய்விடும்.

2. 3 நாள் தீட்டில் 10 நாள் தீட்டு வந்தாலும், பின் சொல்லியதில் முன் சொல்லியது வந்தாலும் 10 நாள் தீட்டின் முடிவிலேயேதான் தீட்டுப்போகும்.

3. ஜ்ஞாத்யாசௌசத்தில் மாதாபிதாக்கள் இறந்தால் பிள்ளைகளுக்கும், பத்னி இறந்தால் பர்த்தாவுக்கும், பர்த்தா இறந்தால் பத்னிக்கும், பிள்ளை, பெண் இறந்தால் தாய் தகப்பன்களுக்கும், மரணம் முதல் 10 நாள் ஆசௌசமுண்டு. ஜ்ஞாத்யாசௌசத்தோடு நிவ்ருத்தியில்லை.

4. 10 நாள் தீட்டில் 10-வது நாள் ராத்ரியில் வேறொரு ஸமமான தீட்டு வந்தால் 2 நாளும், அன்று ராத்ரி 4-வது யாமத்திலாவது, அருணோதயத்திலாவது வந்தால் 3 நாளும் அதிகாசௌசமுண்டு.

*5. 10 நாள் தீட்டில் 3 நாள் தீட்டு எப்போது வந்தாலும், அதற்காக அதிகாசௌசமில்லை.*

*6. பிதா இறந்து 10 நாளைக்குள் மாதா இறந்தால், பிதாவின் ஆசௌசகாலத்திற்கு மேல் பக்ஷிண்யாசௌசம் அதிகமுண்டு. மாதாவின் தசராத்ரமத்தியில் பிதா இறந்தால் பிதாவின் மரண தினம் முதல் 10 நாள் ஆசௌசமுண்டு.*

*7. பிதாவின் தசமதினத்தில் மாதா எப்போது இறந்தாலும் அதற்காக பக்ஷிண்யாசௌசமே தவிர அதிகமில்லை.*

*8. தாய், தகப்பன் இறந்து 10 நாளுக்குள் பத்னீ, பிள்ளை, பெண் இவர்கள் இறந்தால் முந்திய ஆசௌத்தோடு பிந்திய ஆசௌசமும் போய்விடும். 10-வது நாளில் இறந்தால் முன் சொல்லியபடி 2, அல்லது 3 நாள் அதிகமாக ஆசௌசமுண்டு.*

*9. தாய், தகப்பன், பத்னீ, பர்த்தா, பிள்ளை, பெண் இவர்கள் இறந்த 10வது நாளில் வேறு ஜ்ஞாதி மரணம் ஏற்பட்டால் முந்திய தீட்டோடு பிந்திய தீட்டும் போய்விடும்.*

*10. 10 நாள் ஆசௌசம் காத்துக்கொண்டிருக்கும்போது வேறொருவனை தஹனம் செய்ய நேர்ந்தால் தஹன தினம் முதல் 10 நாள் ஆசௌசம். மறுபடியும் வேறு தஹனம் செய்ய நேர்ந்தால் முன் ஆசௌசத்தோடு பிந்திய ஆசௌசமும் போய்விடும்.*

*ஒரு மரணத் தீட்டு காத்துக் கொண்டிருக்கும்போது அந்தத் தீட்டின் ஆரம்பத்திற்கு முந்தியே இறந்ததாக வேறு ஒரு தீட்டு வந்தால் பிந்திக் கேட்ட தீட்டின் முடிவிலேயே முந்திக் கேட்ட தீட்டும் போய்விடும். ஸம்பவத்திற்கே ப்ராதான்யம். ச்ரவணத்திற்கில்லை யென்றபடி. இதற்கு வசனம்:*

[illegible] ।

[illegible] ॥

# 6. அதிக்ராந்தாசௌசம்

*1. 10 நாள் ஆசௌசத்தை 10 நாட்களுக்குப் பிறகு 3 மாதங்களுக்குள் கேட்டால் 3 நாள் ஆசௌசம். பிறகு 6 மாதங்களுக்குள் கேட்டால் பக்ஷிண்யாசௌசம். பிறகு ஒரு வர்ஷத்திற்குள் கேட்டால் 1 நாள் ஆசௌசம். பிறகு கேட்டால் ஸ்நானமாத்ரம்.*

*2. 3 நாள் ஆசௌசத்தை 3 நாளுக்குமேல் 10 நாளுக்குள் கேட்டால் 1 நாள் ஆசௌசம். பிறகு கேட்டால் ஸ்நானமாத்ரம்.*

*3. பக்ஷிணித்தீட்டை பக்ஷிணிக்கு மேல் 10 நாட்களுக்குள் கேட்டால் ஒரு காலம். அதாவது:- பகலில் கேட்டால் பகல், ராத்ரியில் கேட்டால் ராத்ரி. பிறகு கேட்டால் ஸ்நானமாத்ரம்.*

*4. 25-வது மாதம் முதல் 6-வது வர்ஷம் முடிவு வரையில் ஜ்ஞாதியின் பிள்ளை இறந்தால் அவன் அநுபநீதனானால் 3 நாள் ஆசௌசமுண்டென்று சொன்னதற்கு அதிக்ராந்தாசௌசம் கிடையாது.*

*5. ஒருநாள் ஆசௌசத்திற்கு அதிக்ராந்தாசௌசம் கிடையாது.*

*6. மாதாபிதாக்களின் மரணத்தில் ஜ்யேஷ்டபுத்ரனுக்கும், பர்த்தாவின் மரணத்தில் பத்னிக்கும், எப்போது கேட்டாலும் 10 நாள் ஆசௌசமுண்டு.*

*7. ஸபத்னீமாதாவின் மரணத்தை ஒரு வர்ஷம் சென்றபின் கேட்டால் 3 நாள் ஆசௌசம். ஸஹகளத்ரங்களுக்கும் 3 நாள் ஆசௌசம். ஒரு வர்ஷத்திற்குள் கேட்டால் 10 நாள் ஆசௌசம்.*

*8. மாதாபிதாக்களுக்கு ஜ்யேஷ்டபுத்ரனால் க்ருத்யங்கள் செய்யப்பட்டு பிறகு 2-வது முதலான பிள்ளைகள் ஒரு வர்ஷத்திற்கு மேல் கேட்டால் 3 நாள் ஆசௌசம்.*

9. க்ருத்யம் செய்யப்பட்டிருந்தாலும், செய்யப்படா மலிருந்தாலும், மாதாபிதாக்களின் மரணத்தை மூத்தகுமாரன் எப்போது கேட்டாலும், கேட்டது முதல் 10 நாள் தீட்டுக் காத்து ஸபிண்டீகரணம் முதலான யாவற்றையும் செய்ய வேண்டியது.

10. ஸஹோதர மரணவிஷயத்தில் க்ருத்யம் செய்யப் பட்டிருந்தால் 6 மாதத்திற்குள் கேட்டால் 3 நாள் ஆசௌசம். பிறகு கேட்டால் பக்ஷிண்யாசௌசம். க்ருத்யம் செய்யப்படாத விஷயத்தில் க்ருத்யம் செய்யும் ஸஹோதரனுக்கு எப்போதும் 10 நாள் ஆசௌசம். மற்ற ஸகோதரர்களுக்கு 6 மாதத்திற்குள் 10 நாளும், ஒரு வர்ஷத்திற்குள் 3 நாளும், ஆசௌசம்.

11. 10 நாள் தீட்டை 10-வது நாள் ராத்ரியிலும், 3 நாள் தீட்டை 3-வது நாள் ராத்ரியிலும் கேட்டால், உதகதானத்திற்காக மறுநாளும் ஆசௌசமுண்டு.

12. அதிக்ராந்தாசௌசமுள்ளவனுடைய த்ரவ்யாதி களுக்கு தீட்டில்லை.

13. அதிக்ராந்தாசௌசத்திற்கு வாஸோதகமில்லை.

14. அதிக்ராந்தாசௌசமும் பிறப்பு இறப்புத் தீட்டுகளும் சேர்ந்தால், அதிக்ராந்தாசௌசத்தையும் தாற்காலிகமான தீட்டாகப் பாவித்து தாற்காலிக தீட்டுச் சேர்க்கையில் என்ன விதியோ அதையே இதற்கும் அனுஷ்டிக்க வேண்டியது.

## 7. ஆசௌசமில்லாதவர்கள்

அநுபநீதன், ப்ரம்ஹசாரீ இவர்களுக்கு ஸம்ஸ்காராதிகளால் அந்தந்தக் காலத்தில் வரும் ஆசௌசத்தைத் தவிர, மற்ற காலங்களில் ஆசௌசம் கிடையாது.

## 8. மற்றவைகள்

1. தீட்டுத்தெரிந்தபின் தீட்டில் சாப்பிட்டால் அன்று முழுவதும் தீட்டைக்காக்க வேண்டும். மறுநாளில்தான் தீட்டுப்போகும்.

2. தீட்டுப்போகும் தினத்தில் ஸங்கவகாலம் வந்த பிறகு 6 நாழிகைக்கு மேல் தான் ஸ்நானம் செய்யவேண்டியது.

3. *ஜனனம், மரணம், ரஜஸ் இவைகள் ஸூர்யோதயத்திற்கு பதினொண்ணே கால் (3 மணி 50 நிமிடம்) நாழிகைக்கு முன் ஏற்பட்டால் முதல் நாள் முதல் கணக்கு. பிறகு ஆனால் மறுநாள் முதல் கணக்கு. அருணோதயம் முதல் கணக்கிடுபவர்களும் சிலர் உளர்.

4. ப்ரேதத்தின் பின்சென்றாலும், க்ஷௌரம் செய்து கொண்டாலும், புனஸ்நானம் செய்ய வேண்டியது.

5. ஸன்யாஸிகள், தங்கள் பிள்ளை பெண்கள் இறந்ததற்கு ஸ்நானம் செய்யக்கூடாது. மாதாபிதாக்கள் இறந்ததாகக் கேள்விப்பட்டால் உடனே ஸசேல ஸ்நானம் செய்ய வேண்டியது.

6. க்ராமத்திற்குள் சவம் இருந்தால் ஹோமம் செய்தலும், சமையல் செய்தலும், சாப்பிடுதலும் கூடாது. ஆனால் 11-விற்கடை அளவுக்கு ஒதுங்கின வேறு வீதியில் முன் சொல்லியவைகளைச் செய்யலாம். (1-விற்கடை 8 அடி.)

7. நானூறு (400) ப்ராம்ஹணர்கள் உள்ள ஊரில் 11-விற்கடை தூரம் இல்லாவிட்டாலும், 'நாராசத்தால்' பிரிக்கப்பட்ட வேறு வீதியில் தோஷமில்லை.

8. ஆயிரம் (1000) ப்ராம்ஹணர்கள் உள்ள ஊரில் ஒரே கூரையாயிருக்கும் பக்ஷத்தில் 30-விற்கடைக்கு மேற்பட்டால் தோஷமே இல்லை.

9. பட்டணங்களுக்கு தோஷமே இல்லை.

---

*குறிப்பு: - ராத்ரியின் வ்ருத்தி க்ஷயங்களை அனுஸரித்த யாமத்தின் நாழிகையைக் கொண்டு கணக்கிட வேண்டும்.

*10.* சூத்ரசவம் க்ராமத்திற்குள்ளிருந்தால் அது இருக்கும் வீட்டிற்குமாத்ரம் தோஷமுண்டு.

*11.* ஸன்யாஸியின் சவம் க்ராமத்திற்குள் இருந்தால் யாதொரு தோஷமும் கிடையாது. ஹோமம் முதலியவைகளைச் செய்யலாம்.

*12.* ஆசௌசமுள்ள ஒருவன் பலத்த வ்யாதியினால் ஆசௌசம்போகும் தினத்தில் ஸ்நானம் செய்ய முடியாவிட்டால், அவனுக்காக வேறொருவன் 10 தடவை ஸ்நானமும் ஆசனமும் செய்ய வேண்டியது. ஒவ்வொரு தடவையிலும் ஆசௌசியைத் தொட்டுவிட்டு ஸ்நானம் செய்ய வேண்டியது. ஒவ்வொரு தடவையிலும் ஆசௌசியானவன் வெவ்வேறு சுத்தவஸ்த்தரம் தரிக்க வேண்டியது. இப்படிச் செய்த பிறகு புண்யாஹவாசனத்தால் சுத்தனாகிறான். அவன் வ்பனம் செய்து கொள்ள வேண்டியவனாக இருந்தாலும் அது ஆவச்யகமில்லை.

*13.* ரஜஸ்வலையான ஸ்த்ரீயானவள் நாலாவது தினத்தில் ரோகத்தினால் ஸ்நானஞ்செய்ய முடியாவிட்டால், முன்பாராவில் சொல்லியபடி வேறொரு ஸத்ரீயைக் கொண்டு, 12 தடவை ஸ்நானம் செய்விக்க வேண்டியது. ஒவ்வொரு தடவையிலும் ரஜஸ்வலை வேறு சுத்தவஸ்த்ரம் தரிக்க வேண்டியது. பிறகு யதாசக்தி தானத்தினாலும், புண்யாஹவாசனத்தினாலும் சுத்தையாகி விடுகிறாள்.

*14.*ச்ராத்தம்: ஶ்ராஃ௦ (ஸ௰கூ) வாவூணவியாநெ.ந கூஷ்) கரிஷெ) || என்று ஸங்கல்பம் செய்த பிறகு ச்ராத்தகர்த்தாவுக்கு ஆசௌசம் நேர்ந்தால் ச்ராத்தம் முடியும் வரையில் தீட்டில்லை. ஹவதா கூணை: கதூவ): என்ற பிறகு போக்தாவுக்கு ஆசௌசம் நேர்ந்தால் விஸனர்ஜனமாகும் வரையில் தீட்டில்லை.

*15.* விவாஹத்தில் சேஷஹோமம் முடிவுறையில் தீட்டில்லை. அதற்குள் மாதா பிதாக்களின் மரணம்

நேர்ந்தால், அந்தக் கர்மாவைச் செய்துவிட்டு சேஷஹோமம் செய்ய வேண்டியது. தம்பதிகளுக்குள் மரணம் ஏற்பட்டால் சேஷஹோமம் வரையில் கர்மசேஷத்தைச் செய்துவிட்டுப் பிறகு தஹனம் செய்ய வேண்டியது.

16. யாகதீக்ஷையின் மத்யத்தில் மாதாபிதாக்களின் மரணம் நேர்ந்தால், பல பிள்ளைகளிருந்தால் மற்ற பிள்ளைகளைக் கொண்டு கர்மம் செய்ய வேண்டியது. ஒரே பிள்ளையானால் திக்ஷாரூபத்தை வைத்துவிட்டு ஸம்ஸ்காரம் செய்ய வேண்டியது. ஸ்நானம் செய்யக்கூடாது. பிறகு யாகசாலைக்கு வந்து தீக்ஷாரூபத்தை மந்த்ரபூர்வகமாய் சுத்தி செய்ய வேண்டியது.

## 9. இதர விஷயங்கள்

1. ச்ராத்தம் முதலியவற்றிற்கு தீட்டுக்கு முன் சேகரித்த பதார்த்தத்திற்கு தோஷமில்லை.

2. ஸன்யாஸியின் மரணத்தில் ஜ்ஞாதிகளுக்குத் தீட்டில்லை. ஸ்நானமாத்ரம்.

3. மாப்பிள்ளை இறந்தால் மாமனார், மாமியார், மச்சினன் இவர்களுக்குத் தீட்டில்லை, ஸ்நானமாத்ரம்.

4. ராஜாங்கத்தாரால் கொலை தண்டனை அடைந்தவனுக்கு உடனே கர்மம் செய்யலாம்.

5. தைவாதீனமாய் துர்மரணம் அடைகிறவன் விஷயத்தில் தீட்டு, உதகதானம் முதலிய எல்லாமுண்டு. வேணுமென்று சாகிறவன் விஷயத்தில் தீட்டில்லை. தகனம் முதலானது ஒன்றுமில்லை.

6. ஜாதிப்ரஷ்டர்கள், வ்யபிசாரிகள் இவர்கள் விஷயத்தில் அவர்களை அமந்த்ரகமாக தஹனம் செய்து ஒரு வருஷம் அல்லது 6 மாஸம் சென்ற பிறகு நாராயணபலி செய்துவிட்டு 3 நாள் தீட்டுக்காத்து கர்மங்கள் செய்ய வேண்டியது.

துர்மரணம் செய்து கொண்டவனுக்கும் இப்படியே செய்ய வேண்டியது. ஜ்ஞாதிகளுக்குத் தீட்டில்லை.

7. துர்மரணமடைந்தவன் விஷயத்தில் ஜ்ஞாதிகளுக்கு ஸ்நானத்தால் சுத்தி. ஒரு வருஷம், 6 மாதம், 3 மாதமாவது கழித்து 'நாராயணபலி' செய்து 3 நாள் தீட்டைக்காத்து 2வது நாள் ஸஞ்சயனம், 3-வது நாள் உதகதானம், 4-வது நாள் ச்ராத்தம் செய்யவேண்டியது.

8. தேஹம் அனித்யமானதால் துர்ம்ருதனுக்கு 24 நாள் சென்ற பிறகாவது கர்மம் செய்ய வேண்டியது. இந்த 24 நாளுக்குள் தாய், தகப்பன் ச்ராத்தம் வந்தால் ச்ராத்தம் செய்துவிட்டுப் பிறகு கர்மம் செய்யவேண்டியது. மற்ற ச்ராத்தமானால் பிந்தியே செய்ய வேண்டியது.

9. க்ருத்யம் செய்பவனுக்கு ஏகோத்திஷ்டத்தின் முடிவில்தான் தீண்டல் போகும்.

10. ஸமானோதகர்களுக்கு உபநயனத்திற்கு முன் மரணத்திற்குத் தீட்டில்லை. ஸ்நானமாத்ரம்.

11. விவாஹமான பெண்கள் மரண விஷயத்தில் ஜ்ஞாதிகளுக்கு தீட்டில்லை.

12. ஜனனத் தீட்டுள்ளவனைத் தொடலாம். அதனால் தோஷமில்லை. ஆனால் தகப்பனை மட்டில் ஜனனநிமித்தம் ஸ்நானம் செய்வதற்கு முன் தொட்டால் ஸ்நானம் செய்ய வேண்டியது. ஜனனாசௌசமுள்ளவன் கர்மாக்களுக்கு அர்ஹமில்லையே தவிர, தொட்டால் குற்றமில்லை.

13. இரட்டையாகப் பிறந்தால் தகப்பனை 10 நாள் வரையில் தொடக்கூடாது. மரணசௌசமுள்ளவனைத் தொடக்கூடாது. அஜ்ஞானத்தால் தொட்டால் ஸ்நானம் செய்ய வேண்டியது. வேணுமென்று தொட்டால் ப்ராயச்சித்தமுண்டு.

14. ஆசௌமுள்ள ஒருவன் வேறு ஆசௌசமுள்ளவனைத் தொடக்கூடாது.

15. ஆசௌசமுள்ளவன் வீட்டிற்கும், அவன் சாமான்களுக்கும் தீட்டுண்டு. தீட்டில்லாத ஒருவன் வீட்டில் ப்ரஸவம், மரணம் ஏற்பட்டால் அவ்வீட்டிற்குத் தீட்டில்லை. ஆனால், அந்த வீட்டில் ப்ரேதக்ருத்யம் நடந்தால் தீட்டுண்டு.

16. ப்ரம்ஹசாரிகள் க்ருத்யம் செய்தாலொழிய உதகதானம் செய்யக்கூடாது.

17. விவாஹதீக்ஷை, யாகதீக்ஷை இவைகளின் மத்யத்தினால் மரணாசௌசம் கேட்கப்பட்டால் தீக்ஷைமுடிந்தபின் பாக்கிநாள் தீட்டுண்டு. தீக்ஷையின் முடிவிற்குள் ஆசௌச காலம் நீங்கிவிட்டால் பிறகு அதிக்ராந்தாசௌசமுண்டு.

18. உபநயனமாகாதவன் மரணத்தில் தாய், தகப்பன், ஸகோதரர்கள் தவிர, மற்ற ஜ்ஞாதிகளுக்கு அதிக்ராந்தா சௌசம் கிடையாது.

19. கர்ப்பதீக்ஷையுள்ளவன் தானம் வாங்கக்கூடாது. தூரயாத்ரையும் செய்யக்கூடாது.

20. சவத்திற்கு முன்னாடியாவது, பக்கத்திலாவது போகக்கூடாது.

21. சவத்திற்குப் பின் ஜ்ஞாதியல்லாதவன் சென்றால் ஸ்நானம் செய்து ஈர வஸ்த்ரத்தை அவிழ்த்துவிட்டு உலர்ந்த வஸ்த்ரம் தரித்துக்கொண்டு அக்னியைத் தொட்டு நெய்யைக் கொஞ்சம் சாப்பிட்டு 3 ப்ராணாயாமங்களைச் செய்து மறுபடி ஸ்நானம் செய்ய வேண்டியது.

22. ருத்ரபூமிக்கு போய்விட்டு ஸ்நானம் செய்யாமல் ஊருக்குள் போகக்கூடாது.

23. தாயாதியல்லாத மற்றவர்கள், க்ரியை ஆரம்பத்திற்கு முன் ஸ்நானம் செய்தால் சுத்தர்களே. க்ரியை

ஆரம்பித்துவிட்டால் தஹனமான பிறகே ஸ்நானம் செய்ய வேண்டியது.

24. துக்கப்ரச்ன தினத்தில் ஸஞ்சயனத்திற்கு. முன்னால் ஸ்நானமும், பின்னால் ஆசமனமும் செய்ய வேண்டியது. ஆசமனம் செய்வதே போதும். ஸ்நானம் செய்ய வேண்டியதில்லை. துக்கப்ரச்னத்தில் தானம், ச்ராத்தம் முதலானதுகள் செய்யக்கூடாது. அதனால்தான் ச்ராத்த தினத்தன்று துக்கம் கேழ்க்கக்கூடாது.

25. ப்ராம்ஹணன் அல்லாத மற்ற ஜாதியாரை துக்கம் கேட்டால் ஸஞ்சயனத்துக்கு முன்னானால் 3 நாளும், பின்னானால் 1 நாளும் ஆசௌசமுண்டு.

26. ஜாதியல்லாத ஒரு சவத்தை பக்லில் சுமந்தால் பகல் முழுவதும், ராத்ரியில் சுமந்தால் ராத்ரி முழுவதும், ஊருக்கு வெளியில் உபவாஸமிருந்து பிறகு ஸ்நானம் செய்து பஞ்சகவ்யம் சாப்பிடவேண்டியது. ப்ராம்ஹணர்களால் புண்யாஹவாசனம் செய்துகொள்ள வேண்டும்.

27. பழைய சவத்தையும், தூரஸ்திரீ சவத்தையும், ப்ரஸவித்தவள் சவத்தையும், கர்பிணீ சவத்தையும் ஜாதி யல்லாத ஒருவன் சுமந்தால் பஞ்சகவ்ய ப்ராசனம் செய்து பசுமாட்டுக்குப் புல் வாங்கிப் போட்டு, தனக்கு சக்தியுள்ள மட்டும் காயத்ரீ ஜபம் செய்து, நெருப்பைத் தொட்டு, நெய்யைக் கொஞ்சம் ப்ராசனம் செய்ய வேண்டியது. பூநூலும் வேறு தரிக்க வேண்டும். பிறகு ப்ராம்ஹணர்களால் புண்யாஹவசனம் செய்துகொள்ள வேண்டியது.

28. பார்யை கர்ப்பிணியாகவிருக்கும்போது, தன்னுடைய தகப்பன், பிள்ளையில்லாத தமயன், பிள்ளையில்லாத மாமன், இவர்கள் சவத்தைச் சுமக்கலாம்.

ப்ரம்ஹசாரியானவன் தாய் தகப்பன் சவத்தைச் சுமக்கலாம். மற்ற சவங்களைச் சுமக்கக்கூடாது.

29. அனாதமான ப்ராம்ஹணசவத்தைச் சுமந்தால் ஸ்நானம் செய்து அக்னியைத் தொட்டு ப்ராணாயாமம் செய்து வேப்பிலையைத் தின்று உமிழ்ந்தால் சுத்தனாகிவிடுகின்றான்.

30. தெரியாத்தனமாய் மநுஷ்யனுடைய எலும்பைத் தொட்டுவிட்டால் ஆசமனம் செய்து பசுமாட்டைத் தொட வேண்டியது. அல்லது, ஸூர்யனையாவது பார்க்க வேண்டியது. மன:பூர்வமாய்த் தொட்டால் ஸ்நானம் செய்ய வேண்டும்.

31. எண்ணெ தேய்த்து ஸ்நானம் செய்த பிறகும், வாந்தி செய்த பிறகும், க்ஷௌரம் செய்து கொண்ட பிறகும், ஸ்த்ரீ ஸம்போகம் செய்த பிறகும், ஜலமலவிஸர்ஜனம் செய்த பிறகும் ஆசமனம் செய்ய வேண்டியது. அக்காலங்களில் ஆசமனம் செய்யாவிடில் அவன் 3 நாள் அசுசியாவான்.

32. தீட்டுக்காரர்கள் கோவிலுக்குள் போகக்கூடாது.

33. தீட்டுக்காரன் தீட்டில்லாதவனையும், தீட்டில்லாதவன் தீட்டுக்காரனையும், நமஸ்காரம் செய்யவே கூடாது.

34. ஜனனாசௌசம் மரணாசௌசம் இரண்டிலும், ஏகாதசீ, த்வாதசீ வ்ரதத்தை விடக்கூடாது.

35. சாவு தீட்டுக்காரர்கள் ப்ரதிதினம் ஸ்நானம் செய்ய வேண்டும். பூமியிலேயே படுக்க வேண்டும்.

36. ப்ராம்ஹணர்கள் தீட்டுப்போன பிறகு ஜலத்தைத் தொடவேண்டியது.

37. சிசுக்கள் இறந்து வநநம் (அதாவது புதைத்தல்) செய்வதாக இருந்தால், கனனம் செய்த தினம் முதல் தீட்டைக் கணக்கிட வேண்டியது. இறந்தது முதலல்ல.

38. பெண்களுக்கு எந்தத் தீட்டானாலும் கணவனுக்குள்ளபடி அனுஷ்டிக்க வேண்டும். ஸ்திரீகளுக்குரிய ப்ரத்யேக தீட்டுகள் தவிர.

39. ஆஹிதாக்நிகளுக்கு எவர் மரித்தாலும் அக்நி ஹோத்ர காலத்தில் ஆசௌசம் இல்லை. ஜனனத்திலும் அப்படியே சிவாராதான காலத்திலும் சிவபூஜை முடியும் வரையில் சுத்தி என்று பெரியோர்கள் சொல்லுவார்கள்.

40. சவம் இருக்கும் கிராமத்திற்கு சவம் உள்ள வரையில் ஆசௌசம். சவம் எடுத்தால் போய்விடும்.

41. யதிகளுக்கு எவ்வித ஜனன மரணங்களிலும் தீட்டில்லை.

42. ச்ரௌத, ஸ்மார்த்த வ்ருதங்களில், வ்ருதம் பூர்த்தியாகும் வரையில் ஜனன மரணங்களில் வ்ருதமுடையோருக்கு ஆசௌசம் இல்லை.

43. யக்ஞத்தில் வரணம் செய்யப்பட்ட ரித்விக்குகளுக்கு, தாய், தகப்பன் முதலிய குடும்பஸ்தர்கள் தவிர மற்றவர்கள் மரணத்தில், கர்மம் முடியும் வரையில் தீட்டில்லை. ஜனனா சௌசத்திலும் அப்படியே.

44. ச்ராத்தத்தில் நிமந்த்ரணம் புஜிப்பவர்களுக்கு ஜனன, மரணாசௌசங்கள் நேர்ந்தால் ச்ராத்தம் முடியும் வரையில் தீட்டில்லை.

45. பதினான்காவது தலைமுறைக்கு மேல் 21-ம் தலைமுறை வரையில், ஸகோத்ரர் மரணத்தில் ஒரு நாள் ஆசௌசம் சொல்லியிருக்கிறது. தலைகளும், பெயரும் தெரியாமல் போனாலும், தேசாந்திரத்திலிருந்தாலும் அவர்களுக்கு ஸ்நானம் மாத்திரம் அனுஷ்டிக்க வேண்டும்.

46. தீட்டுப் போனபிறகு, வீட்டை சாணியால் மெழுகிப் பெருக்கி கோலமிட்டு மறுபடியும் ஸ்நானம் செய்து, வீட்டுக்கும் தனக்கும், புண்யாகவாசனம் செய்த ஜலத்தைப் புரோக்ஷணம் செய்ய வேண்டும். ப்ராம்ஹண போஜனம் செய்து வைத்தால் சுத்தியுண்டாவதுடன் விஷ்ணுவுக்கும் ஸந்தோஷம் உண்டாகும். (இது ஸங்கிரஹம் என்ற கிரந்தத்திலிருந்து எடுத்துக்காட்டியதாக ஸ்ரீ தீக்ஷிதீய வசனம்.)

47. ஜனனாசௌசம், மரணாசௌசம் இவைகளை அனுஷ்டிக்கும் காலத்தில் சந்த்ர, ஸூர்யக்ரஹணங்கள் நேர்ந்தால் க்ரஹணம் முடியும் வரையில் சுத்தியுண்டு. ஆனதால் ச்ராத்த, தான தர்ப்பணாதிகளை அனுஷ்டிக்க வேண்டும்.

## 10. இறந்த வீடுகளில் ஸந்யாஸிகள் பிக்ஷை நியமம்

𑌪𑌿𑌤𑍍𑌰𑍋𑌰𑌬𑍍𑌦𑌂 𑌤𑍍𑌯𑌜𑍇𑌦𑍍𑌭𑌿𑌕𑍍𑌷𑌾𑌂 𑌮𑌾𑌤𑍁𑌰𑍍𑌷𑌣𑍍𑌮𑌾𑌸𑌮𑍇𑌵 𑌵𑌾 ।

𑌮𑌾𑌸𑌤𑍍𑌰𑌯𑌂 𑌤𑍁 𑌭𑌾𑌰𑍍𑌯𑌾𑌯𑌾𑌸𑍍𑌤𑌦𑌰𑍍𑌧𑌂 𑌭𑍍𑌰𑌾𑌤𑍃𑌪𑍁𑌤𑍍𑌰𑌯𑍋𑌃 ॥

𑌅𑌨𑍍𑌯𑍇𑌷𑌾𑌂 𑌬𑌨𑍍𑌧𑍁𑌵𑌰𑍍𑌗𑌾𑌣𑌾𑌂 𑌮𑌾𑌸𑍇𑌨𑍈𑌕𑍇𑌨 𑌶𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌤𑌿 ॥

தகப்பன் இறந்து ஒரு வருஷம் வரையிலும், தாயார் இறந்து ஆறு மாதமும், பார்யை இறந்து மூன்று மாதமும், புத்ரன், ஸஹோதரன் இவர்கள் இறந்து மூன்று பக்ஷம் வரையிலும், அந்த க்ரஹத்தில் ஸந்யாஸிகளுக்கு பிக்ஷை செய்து வைக்கக்கூடாது.

## 11. அங்குலம், விதஸ்தி முதலியவைகள்

| | | |
|---|---|---|
| 3-நெல் நீளம் | = | 1 அங்குலம் |
| 12 - அங்குலம் | = | 1 விதஸ்தி |
| 2 - விதஸ்தி | = | 1 அரத்னி |
| 2 - அரத்னி | = | 1 கிஷ்கு |
| 2 - கிஷ்கு | = | 1 தநுஸூ |
| 2000 - தநுஸூ | = | 1 குரோசம் |
| 4 - குரோசம் | = | 1 யோஜனை |

அதாவது 12 - மைல், 213 - கஜம், 1 - அடி.

.......

𑌧𑌰𑍍𑌮𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰 𑌸𑌂𑌗𑍍𑌰𑌹𑍇 𑌆𑌶𑍌𑌚𑌕𑌾𑌣𑍍𑌡𑌃 𑌸𑌮𑌾𑌪𑍍𑌤𑌃 ॥

தர்மசாஸ்த்ரச் சுருக்கத்தில் ஆசௌசகாண்டம் முற்றுப்பெற்றது.

## ச்ராத்த காண்டம்

### 1. ப்ராயச்சித்தாதிகள்

1. க்ருச்ராதி களின் ஸ்வரூபம்:- ப்ராஜாபத்யக்ருச்ரம் ஸாந்தபனக்ருச்ரம் அதிக்ருச்ரம் தப்தக்ருச்ரம் என்று க்ருச்ரங்கள் ப்ராயச்சித்தங்களில் ஏற்பட்டிருக்கின்றன.

அதிக்ருச்ரம் என்பது 30 ப்ராஜாபத்ய க்ருச்ரம் ।

2. க்ருச்ர ப்ரத்யாம்னாயங்கள்:-

ஒரு ப்ராஜாபத்ய க்ருச்ரத்திற்கு 10000 காயத்ரீ ।

10000 காயத்ரீ = 200 ப்ராணாயாமங்கள்

200 ப்ராணாயாமங்களுக்கு = 1000 திலஹோமம்

1000 திலஹோமங்களுக்கு = 30 வேத பாராயணங்கள்.

30 வேத பாராயண ஸ்தானத்தில் 60, அல்லது, 24, 12 ப்ராம்ஹணபோஜனம், அல்லது கன்றுடன் கூடிய பசுவின் தானம், அல்லது ஒரு விராகன் பொன்தானம் இவைகள் சக்திக்கு தக்கவாறு விதிக்கப்படுகின்றன.

3. பூரட்டாதி, உத்திரட்டாதி, இந்த நக்ஷத்திரங்களில் இறந்தால் பூமிதானம் செய்யவேண்டும்.

4. புனர்பூசம், விசாகம், பூரட்டாதி, இந்த நக்ஷத்ரங்களில் இறந்தால் ஹிரண்யதானம் செய்யவேண்டும்.

## 2. தநிஷ்டா பஞ்சகம்

1. (1) தநிஷ்டா பஞ்சகம்:-அவிட்டம், சதயம், பூரட்டாதி, உத்திரட்டாதி, ரேவதி, இந்த ஐந்து நக்ஷத்திரங்களுக்கும் பெயர்.

(2) கும்பமீநஸ்திதே சந்த்ரே மரணம் சோகதம் பவேத் ।

ம்ருதஸ்ய ஶாந்தி: ப்ரகுர்வீத பந்தூநாமநர்த்தகம் ஸர்வேஷாம் ॥

பஞ்சகத்ரயே ஸர்வேஷாம் அநர்த்தம் ஸ ஸ ஶ ஶ ॥

இந்த ஐந்து நக்ஷத்ரங்களில் இறந்தவர்கள் நல்ல கதியை அடைகிறார்கள். மற்ற பந்துக்கள் வகையறாக்களுக்கும், வீட்டிலிருக்கிற கால்நடைகளுக்கும் அடிக்கடி பீடையுண்டாகும்.

*(3)* தஸ்மாத்ஸர்வப்ரயத்நேந ஶாந்திம் ஸமாசரேத் ।

ஆகையால் பீடாபரிஹாரார்த்தமாக சாந்தி செய்ய வேண்டியது முக்யம்.

*(4)* யஸ்மிந் திநே ம்ருதிஸ்ஸ்யாத் தத்ரைவ ஸம்ஸ்காரஸ்ய ।

இறந்து போனதினத்தில் ப்ரேத க்ருத்தியம் ஆன பிறகு அனுக்ஞை பெற்று, க்ருச்ராசரணம் செய்து தர்ப்பைகளினால் 5 கூர்ச்சம் செய்து, அவைகளில் க்ரமப்படி ப்ரேதவஹம், ப்ரேதஸகம், ப்ரேததபம், ப்ரேதராஜம், ப்ரேதபூமிபம் என்று ஆவாஹநம் செய்து பூஜைசெய்து, எள்ளுகலந்த ஆஜ்யாஹுதி ஐந்தையும் உத்தேசித்துச் செய்து, யமாய யமராஜாய இதி 14 ஆஜ்யாஹுதி செய்து, வஹ வபாம் ஜாதவேத: என்ற ருக்கினால் ஆஜ்யாஹுதி செய்து வ்யாஹ்ருதிகளினால் ஆஜ்யாஹுதிகளும் செய்ய வேண்டியது. 5 கூர்ச்சங்களையும் ப்ரேதத்துடன் கட்டிக் கொண்டுபோய் அத்துடன் தஹநம் செய்துவிடவேண்டியது. தஹநம் ஆனபிறகு பூரட்டாதி நக்ஷத்ரத்தில் இறந்திருந்தால் எள்ளுடன் வெங்கலபாத்ரத்தை தானம் செய்ய வேண்டியது. யநிஷ்டாவதூகத்தில் மரணம் நேரிடும்போலிருந்தால் ரேழித் திண்ணையிலோ, ரேழி நடையிலோ அல்லது வாசல் திண்ணையிலோ கொண்டுவந்து போட்டுவிடுகிறார்கள். ரேழித் திண்ணையில் மரணம் நேர்ந்தால், சுவரை இடித்து த்வாரம் செய்து அதன் வழியாக ப்ரேதத்தை சிலர் வெளிப்படுத்துகிறார்கள். சுவரை இடிக்க வேண்டியதில்லை என்கிற எண்ணத்தைக்கொண்டு நடையிலும் வாசல் திண்ணையிலும் போட்டு எடுத்து

விடுகிறார்கள். ஆனால் இவைகளுக்கு ஆதாரம் தென்படவில்லை. எவ்விடத்தில் இறந்தாலும் எப்படி எடுத்தாலும் ஶாந்தி செய்வதே முக்யமென்று பலபேர் அநுஷ்டானத்தில் இருக்கிறது.

2. ശ്രവിഷ്ഠാദശമാസം സ്യാത് ഷാണ്മാസം ശതതാരകേ |
പൂർവ്വപ്രോഷ്ഠേ [illegible] വർഷം അഹിർബുധ്ന്യേ [illegible] |
രേവത്യാം ച ത്രിമാസം സ്യാത് തദ്ഗൃഹം പരിവർജയേത് |
വസിഷ്ഠാദി [illegible] |
[illegible] |
ഇതി ശൂദ്ര വിഷയഃ ||

அவிட்டத்திற்கு 10 மாஸம், சதயத்திற்கு 6 மாஸம், பூரட்டாதிக்கு 1 வர்ஷம், உத்திரட்டாதிக்கு 8 மாஸம், ரேவதிக்கு 3 மாஸம், அந்த க்ருஹத்தையோ அல்லது அந்த இடத்தையோ வர்ஜிக்க வேண்டும். இதை சூத்ரவிஷயமென்று தள்ளிவிட்டார்கள்.

3. വജ്രം വൈഡൂര്യകം നീലം ഗോമേദം പുഷ്പരാഗകം |
ഏഷു ഋക്ഷാണി ദാനാനി ധാന്യാനി ദാപയേത് ||
ഇതി ആഢ്യ വിഷയഃ |

அவிட்டத்திற்கு வைரம், சதயத்திற்கு வைடூர்யம், பூரட்டாதிக்கு நீலம், உத்திரட்டாதிக்கு கோமேதகம், ரேவதிக்கு புஷ்பராகம், இவற்றை தானம் செய்ய வேண்டியது. இது கோடீச்வர விஷயமென்று இதையும் தள்ளிவிட்டார்கள். ப்ராம்ஹணர்களுக்கு 13-ம் நாள் அதாவது ஸபிண்டீகரணம் நடந்து தீட்டுப்போன பிறகு சாந்தி செய்ய வேண்டியதே முக்யம். சாந்தி செய்வதில் அவிட்டத்திற்கு வஸ்த்ரம், சதயத்திற்கு ஸ்வர்ணம், பூரட்டாதிக்கு பருத்தி,

உத்திரட்டாதிக்கு எள், ரேவதிக்கு வெங்கலம் இவைகளை தானம் செய்ய வேண்டியது. இது ஒரு பக்ஷம்.

அவிட்டத்திற்கு வஸ்த்ரம், சதயத்திற்கு ஸ்வர்ணம், பூரட்டாதிக்கு ஸப்ததான்யம், உத்திரட்டாதிக்கு திலம், ரேவதிக்கு வெங்கலம், இவைகளை தானம் செய்ய வேண்டியதில், ஸப்த தான்யத்தில் வகைக்கு 2 மரக்கால் அல்லது 1 மரக்கால் தானம் செய்ய வேண்டியது.

ஏழு தான்யமாவன: எள், உளுந்து, நெல், யவை, தினை, அல்லது கம்பு, சாமை, பயரு, இது ஒரு பக்ஷம்.

4. செவ்வாய், வியாழன், வெள்ளி, இவ்வாரங்களில் இறந்தால் அந்தந்த க்ரஹத்திற்கு ப்ரீதிகரமானதை தானம் செய்ய வேண்டும்.

5. கர்மம் செய்ய அதிகாரம் வேண்டி 7, 5 அல்லது 3 க்ருச்ரமூல்யமாவது தானம் செய்யவேண்டும். இல்லாவிட்டால் பர்யுஷித தோஷமுண்டாகும்.

6. பகலிலிறந்தால் பகலிலும், ராத்ரி 9 நாழிகைக்குள் (1 நாழிகை = 24 நிமிடங்கள்) இறந்தால் ராத்ரியிலும், தகனம் செய்ய வேண்டியது.

7. பர்யுஷித சவத்திற்கு, 3 க்ருச்ரம் தத்தம் செய்து விட்டு, பஞ்சகவ்யத்தால் ஸ்நானம் செய்வித்து, பாவனங்களான மந்த்ரங்களால் அபிமந்த்ரித்துப் பிறகு சுத்த ஜலத்தால் ஸ்நானம் செய்து வைக்க வேண்டியது.

8. தக்ஷிணாயனம், க்ருஷ்ணபக்ஷம், ராத்ரி, ஊர்த்வோச்சிஷ்டம், அதோச்சிஷ்டம், கட்வாதிகளில் மரணம், இவைகளில் ஒவ்வொன்றிற்கும் 3 அல்லது ஒரு க்ருச்ரமாவது தத்தம் செய்து மந்த்ரவத்தாய் ஹோமம் செய்ய வேண்டும்.

## 3. ஸம்ஸ்காரம்

1. உபநயனமாகாதவன் வேதமந்த்ரத்தை உச்சரிக்கக் கூடாது. ஆனால் மந்த்ரம் சொல்லக்கூடியவனாய் இருந்தால் தாய், தகப்பன் க்ருத்யத்தைச் செய்யலாம்.

2. பர்த்தாவுக்கு பத்னீ க்ருத்யஞ்செய்யும் விஷயத்தில் அவன் பஹிஷ்டையாகிவிட்டால், ப்ரேதத்தை மந்த்ரமில்லாமல் தஹனம்செய்து ஐந்தாவது நாளில் ப்ராஜாபத்ய க்ருச்ரம்செய்து மந்த்ரபூர்வமாய் தஹனம் முதலானதைச் செய்ய வேண்டியது.

3. பர்த்தாவுக்கு பத்னீ க்ருத்யம் செய்யும் விஷயத்தில், அவள் ப்ரஸவித்துவிட்டால் ப்ரதேத்தை மந்த்ரமில்லாமல் தஹனம் செய்து தீட்டுப் போனபின் ப்ராஜாபத்ய க்ருச்ரம் செய்து, மந்த்ர பூர்வமாக மூன்று நாளில் தஹனம் முதலான யாவற்றையும் செய்ய வேண்டியது.

## 4. ஸம்ஸ்காராக்னிகளின் பெயர்

1. நிர்மதனாக்னி 2.ஔபாஸனாக்னி 3. உத்தபனாக்னி 4. கபாலாக்னி 5. துஷாக்னி.

நிர்மதனாக்னி என்பது = அரணி கடைந்து எடுக்கப்பட்ட அக்னிக்குப் பெயர். அது ஆஹிதாக்னிகளின் விஷயம்.

ஔபாஸானாக்னி என்பது = தம்பதிகளாயிருந்து ஔபாஸானாதிகள் செய்துவரும் அக்னிக்குப் பெயர்.

உத்தபனாக்னி என்பது = தர்ப்பங்களில் முதலில் நெருப்பைக் கொளுத்தி, அதிலிருந்து மறுபடியும் வேறு தர்ப்பங்களில் கொளுத்தி, அதிலிருந்து 3வது தடவை வேறு தர்ப்பங்களில் கொளுத்தி எடுக்கப்பட்ட அக்னிக்குப் பெயர்.

கபாலாக்னி என்பது = ஒரு வாணாயை அடுப்பில் வைத்து எரியவிட்டு, அதில் வரளித்தூள் அல்லது கரியைப் போட்டு நெருப்பு உண்டாக்கியெடுக்கும் அக்னிக்குப் பெயர்.

துஷாக்னி என்பது = ஒரு வாணாயை அடுப்பில் வைத்து எரியவிட்டு, உமியைப் போட்டு உண்டாக்கி எடுக்கும் அக்னிக்குப் பெயர்.

## 5. ஸம்ஸ்காரம் செய்வதற்கு அக்னி நிர்ணயமும், ப்ரேத க்ரியைகளும்

1. தம்பதிகளை தஹனம் செய்ய ஔபாஸனாக்னி.

2. விதுரனையும், விதவையையும், ஸமாவர்த்தனமாகியும் விவாஹம் செய்துகொள்ளாதவன், கதலீ விவாஹம் செய்தவன் இவர்களையும் தஹனம் செய்ய உத்தபனாக்னி.

3. ப்ரம்ஹசாரியை தஹனம்செய்ய கபாலாக்னி.

4. அனுபநீதர்களையும், விவாஹமாகாத பெண்களையும் தஹனம் செய்ய துஷாக்னி.

5. புருஷன் ஸன்யாஸம் வாங்கிக்கொண்ட பிறகு பத்னீ இறந்தால் ஔபாஸனாக்னியினாலேயே தஹனம் செய்ய வேண்டியது.

6. எந்த கர்மாவிலும் ஸ்நானம், ஆசமனம், ப்ரதக்ஷிணம், நமஸ்காரம், ப்ராணாயாமம் இவைகளை வலம்போட்டுக் கொண்டே செய்ய வேண்டியது.

7. ப்ரேதத்தைச் சுமந்துகொண்டு போகிறவர்களும், ஜ்ஞாதிகளும் பூநூலை மாலையாகப் போட்டுக்கொண்டு போக வேண்டியது.

8. ஆவாஹனம், அர்க்யம், ஸங்கல்பம், பிண்டப்ரதானம், திலோதகம், ஆஸனம், பாத்யம் இவைகளில் கோத்ரம் பெயர் இவைகளைச் சொல்லியே செய்ய வேண்டியது.

9. ஸ்த்ரீஸம்போகம், ஸ்த்ரீப்ரஜைகளின் ஜாதகர்மம் முதலான ஸம்ஸ்காரங்கள், ப்ரேதத்தை வஹித்தல், மனுஷ்ய

கர்மா இவைகளில் பூநூலை நிவீதம் செய்துகொண்டு செய்ய வேண்டியது.

*10.* ச்மசானத்தில் வன்னிமரத்தின் கிளையால் ஸ்தலத்தை சுத்தி செய்ய வேண்டியது. அதாவது ''அபேத வீத'' என்ற மந்த்ரத்தினால் மூன்று தடவை துடைக்க வேண்டியது.

*11.* ஆஸந்தி அத்திமரத்தினாலிருக்க வேண்டியது.

*12.* ப்ரேதத்தின் முகத்தை மூட வேண்டியது. கால் பக்கத்தில் நுணியுள்ளதாக மூடவேண்டியது.

*13.* எவ்விதத்திலும், க்ராமத்திலிருந்து ப்ரேதத்தை எதிர்முகமாய் கொண்டு போகக்கூடாது. அப்படிக் கொண்டு போனால் க்ராமம் நசித்துவிடும்.

*14.* ச்மசானத்திற்குக் கொண்டுபோகும் வழியில் மூன்று இடத்தில் சவத்தை கீழே வைத்து பலிபோட வேண்டும்.

*15.* அக்னி கீழே விழுந்துவிட்டால் ப்ராயச்சித்தம் செய்து, ப்ரேதாஹுதிமுதல் எல்லா கர்மங்களும் செய்ய வேண்டியது.

*16.* துளஸீகாஷ்டத்தை சிதையில் போடக்கூடாதென்றும், போட வேண்டுமென்றுமிருப்பதால் ஸமவிகல்பம்.

*17.* ப்ரேதத்தின்மேல் வஸ்த்ரமில்லாமல் தஹனம் செய்யக்கூடாது. மேலே போட்டிருக்கும் வஸ்த்ரத்தில் பாதியைக் கிழித்து எடுத்து எரிந்துவிட வேண்டியது.

*18.* எப்போதும் ஆதித்யாபிமுகமாய் தஹனத்தைச் செய்ய வேண்டியது. ஆனால் மேற்கு முகமாயிருந்தே அக்னி ப்ரதானம் செய்வதும் சிலரின் ஆசரணையிலிருக்கிறது.

★ விப்ரேண ப்ராஹ்மணேனைவ ஸ்வயம் ஸ்நாதகேன வா ।
ப்ரேதஸ்ய தஹனம் சைவ கர்தவ்யம் ப்ரேதகர்மவித் த்விஜ: ॥

---

★ இந்த ச்லோகம் தீக்ஷிதீயக்ரந்தத்திலில்லை

வைஶ்வாநராயக்ஷீதீய த்தில் ஶாபாக்ர முதலான ஶஹாஸ்த்ரங்களை ஸவ்யாபஸவ்யமாய் ஜபிக்க வேண்டுமென்றிருப் பதோடு ஊஹாந மும் ஸவ்யாபஸவ்யமாகவே செய்ய வேண்டியதென்று சொல்லப்பட்டிருக்கிறது.

*19.* உதகதானம், ஸ்நானம் முதலியவைகளை கனிஷ்ட க்ரமமாய் செய்ய வேண்டியது.

*20.* ச்மசானத்திற்குப் போகும்போது கனிஷ்டன் முன்னாலும், வீட்டிற்குத் திரும்பும்போது மூத்தவன் முன்னாலும் போக வேண்டியது. ஜ்ஞாதிகளுக்கும் இதே விதிதான்.

*21.* சவானுகமனம், க்ஷௌரம் இவைகளுக்கு புனஸ்நானம் செய்வதில் முதல் ஸ்நானத்திற்கும், நைமித்திக ஸ்நானங்களுக்கும் ஸ்நானாங்க தர்ப்பணம் கிடையாது. புனஸ்நானத்தில் உலர்ந்த வஸ்த்ரம் தரித்துக் கொள்ள வேண்டியது. அல்லது ஏழு தடவை வீசியாவது ஈரவஸ்த்ரத்தை கட்டிக்கொள்ள வேண்டியது.

*22.* எல்லா புத்ரர்களும், தாய் தகப்பன் விஷயத்திலும் கூட ராத்ரி தஹனமானால் இரண்டு யாமத்திற்கு மேல் வபனம் செய்து கொள்ளக்கூடாது.

*23.* மாத்ரு பித்ரு தீக்ஷாநியமம் மூத்த பிள்ளையைத் தவிர, மற்ற பிள்ளைகளுக்குக் கிடையாது என்பது சிலர் மதம். எல்லோருக்குமுண்டென்பது சிலர் மதம்.

*24.* ஆடி, புரட்டாசி, மார்கழி, மாசி இந்த மாஸங்களிலும், க்ருஷ்ணபக்ஷத்திலும், ப்ரதமை, ஷஷ்டி, அஷ்டமீ இந்த திதிகளிலும், +ரிக்ததிதிகளிலும், ஞாயிறு, செவ்வாய், சனி இவ்வாரங்களிலும், விஷு புண்யகாலத்திலும், குரு சுக்ரன்

---

+ ரிக்ததிதி என்பது = சதுர்த்தீ, நவமீ, சதுர்த்தசீ.

இவர்களின் மௌட்யகாலங்களிலும், காலையில் மூன்றே முக்கால் (3¾) (2) நாழிகைக்குள்ளாகவும், அசுபநக்ஷத்ரங்களிலும், மாத்ரு பித்ரு ச்ராத்தத்திற்கு ஒரு மாஸம், அல்லது ஒரு பக்ஷத்திற்குள்ளும் க்ஷௌரம் செய்துகொள்ளவே கூடாது. ஆனால்,

* 𑌧𑌨𑍁𑌃 𑌕𑍁𑌮𑍍𑌭 𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌰𑍍𑌕𑍇 𑌪𑍂𑌰𑍍𑌵𑌾𑌰𑍍𑌧𑌂 𑌪𑌰𑌿𑌵𑌰𑍍𑌜𑌯𑍇𑌤𑍍 ।
𑌕𑌟𑌕𑌸𑍍𑌯𑌾𑌪𑌰𑌂 𑌚𑌾𑌰𑍍𑌧𑌂 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌕𑌨𑍍𑌯𑌾𑌂 𑌪𑌰𑌿𑌵𑌰𑍍𑌜𑌯𑍇𑌤𑍍 ॥

என்கிற வசனப்படி ஸங்கடவிஷயத்தில் மார்கழி, மாசி இந்த இரண்டு மாஸங்களின் முன்பாதியையும், ஆடி மாஸத்தின் பின்பாதியையும், புரட்டாசி மாஸம் பூராவையும் விலக்க வேண்டியது.

25. நக்னச்ராத்தம்: இறந்து போனவனைத் தஹனம் செய்த பிறகு, கர்த்தா வபனம் செய்துகொண்டு ஸ்நானம் செய்து ஊருக்குள் வந்து, வீட்டு வாசலிலிருந்துகொண்டு ஸங்கல்பம் செய்து நக்னப்ரச்சாதன ச்ராத்தம் செய்ய வேண்டியது. நக்னப்ரச்சாதன ச்ராத்தத்தில் வெங்கலப் பாத்திரம், வஸ்த்ரம், நெய், அரிசி, பூர்ண பாத்திரம் இவைகளை ப்ராஹ்மணனுக்கு தானம் செய்ய வேண்டியது.

26. பாஷாணஸ்தாபனம் - அதன் பிறகு நதிதீரம்போய் பாஷாணஸ்தாபனம் செய்து வாஸோதகம் மூன்று, திலோதகம் மூன்று செய்து, வீட்டில் பாஷாணஸ்தாபனம் செய்து, வாஸோதகம் மூன்று செய்து, பிறகு பிண்டம், பலி இவைகளை கொடுக்க வேண்டியது. பாஷாணஸ்தாபனத்தை வீட்டிற்கு வெளியில் செய்ய வேண்டியதே தவிர, வீட்டிற்குள் செய்யக்கூடாது. வீட்டில் திலோதகதானம் கிடையாது.

---

* இந்த ச்லோகம் தீக்ஷிதீயக்ரந்தத்தில் காணப்படவில்லை.

27. திலோதகம் - திலோதகம் முதலாவது நாளில் மூன்று, இரண்டாவது நாளில் நான்கு. இவ்விதம் தினம் ஒவ்வொன்று கூடச் சேர்த்து வந்தால் 10-ம் நாளில் 12 திலோதகம் செய்யவேண்டும். 11-வது நாளில் திலோதகம் கிடையாது.

28. பிண்டம் - பிண்டம் கோழி முட்டையளவு இருக்க வேண்டும். பித்தளைப் பாத்ரத்திலாவது, மண் பாத்ரத்திலாவது பிண்டத்திற்குப் பாகம் செய்ய வேண்டியது.

29. ப்ரதிதினமும் பலிக்காக ஒரு பிண்டத்தையும் கொடுக்க வேண்டியது. உபநயனமாகாதவர்களுக்குப் பிண்டத்தைப் பூமியில் வைக்க வேண்டியது. உபநயனமானவர்களுக்கு பிண்டத்தை தர்ப்பையில் வைக்க வேண்டியது. ஒரே பிண்டம் வைக்கும்போது பிண்டம் குதிரைக்குளம்பு பரிமாணம் இருக்க வேண்டியது. வர்ஷாப்திகச்ராத்தத்தில், விளாம்பழம் அல்லது வில்வப்பழம் அளவு இருக்க வேண்டியது. மஹாளயத்தில் இலந்தைப்பழ ப்ரமாணமிருக்க வேண்டும். ஏகோத்திஷ்டத்திலும், ஸபிண்டீகரணத்திலும் தேங்காய் ப்ரமாணம் இருக்க வேண்டியது. கர்த்தாவைத் தவிர, வேறு ஒருவரும் பிண்டம் கொடுக்கக்கூடாது. பிண்டத்தை முதல் நாள் வைத்த இடத்திலேயே 10 நாளும் வைக்க வேண்டியது. ஸ்தலபேதம் கூடாது.

30. இறந்து போனவனுக்காக ஒருவன் கண்ணீர் ஜலத்தைவிட்டால் அந்த ஜலத்தை ப்ரேதம் சாப்பிடும். ஆதலால் அது கூடாது.

31. நவச்ராத்தம் 5, அல்லது 6 என்பது ஸுத்ரத்திற்குத் தகுந்தபடி ஏற்பட்டிருக்கிறது. ஆபஸ்தம்பீயர்களுக்கு ஆறு. ஒத்தப்படை நாளில் செய்ய வேண்டியது. நின்று போனால் பிந்தியாவது, 11-வது நாளிலாவது சேர்த்துச் செய்ய வேண்டியது.

32. கர்த்தாவுக்கும், ஜ்ஞாதிகளுக்கும், தஹனதினத்தில் சாப்பாடு கூடாது. தீட்டுக்காரர்கள் சமையல் செய்து சாப்பிடவும் கூடாது.

34. ஒரு ஸூத்ரக்காரனுக்குக் கர்த்தா, வேறு ஸூத்ரக்காரனாகயிருந்து ஸம்ஸ்காராதிகளைச் செய்கிற விஷயத்தில், இறந்தவனுடைய ஸூத்ரத்தினால் ப்ரதமாப்திகம் வரையில் செய்து, ஆப்திகம் முதல் கர்த்தா தன் ஸூத்ரத்தினால் செய்ய வேண்டியது.

35. இறந்தவனுக்கு அவனுடைய ஸூத்ரத்தினாலேயே தஹனம் முதலான ஸம்ஸ்காரங்களும் செய்யப்பட வேண்டியது. தஹனகாலத்தில் அவனுடைய ஸூத்ரம் கிடைக்காவிட்டால் அன்யஸூத்ரத்தால் செய்யலாம்.

36. அப்படி தஹனம் செய்யப்பட்டு பிறகு நடுவில் ஸ்வஸூத்ரம் கிடைத்தாலும் அதனால் செய்யாமல் அன்யஸூத்ரத்தினாலேயே ஏகோத்திஷ்டம் வரையில் செய்ய வேண்டியது, எப்படியானாலும் ஸபிண்டீகரணத்தை ம்ருதனுடைய ஸூத்ரத்தினாலேயே செய்ய வேண்டியது.

37. ஆனால், யஜுர்வேதிகளுக்கு போதாயனஸூத்ரத்தினால் செய்யப்பட்டாலும், ஸ்வஸூத்ரத்தால் செய்யப்பட்டது போலாகும். நடுவில் ஸ்வஸூத்ரம் கிடைத்தாலும் அதைக் கொண்டு மேல் க்ரியைகளை நடத்தலாம்.

38. அன்யனால் தஹனம் செய்யப்பட்ட பிறகு, முக்ய கர்த்தா (பிள்ளையைத் தவிர) 10 நாளுக்குள் வந்தால் புனர் தஹனமில்லை. ஸஞ்சயனம் முதல் யாவற்றும் செய்ய வேண்டியது. ஸஞ்சயனத்திற்குப் பிறகு வந்தால் பிண்டோ தகம் முதலான யாவற்றும் செய்ய வேண்டியது.

39. மந்த்ரமில்லாமல் தஹனம் செய்யப்பட்டு பத்து நாளைக்குள் ஸஞ்சயனத்திற்கு முன் புத்ரன் வந்தால், அஸ்தி

ஸம்ஸ்காரம், ஸஞ்சயனம் முதலானதைச் செய்து, அன்று வரையிலுள்ள உதகபிண்டம் முதலானதைச் செய்து, 11-வது நாள் ஆஉ)° செய்து, 12-வது நாள் ஸபிண்டீகரணம் செய்யலாம்.

40. அன்யனால் தஹனம் செய்யப்பட்ட பிறகு 10 நாளுக்குள் பிள்ளை வந்துவிட்டால் புனர்தஹனம், வபனம் முதலான யாவற்றும் செய்ய வேண்டியது. 10 நாளோடு தீட்டுப் போகும். 12வது நாள் ஸபிண்டீகரணம் செய்யலாம்.

41. ஸஞ்சயனத்திற்குப் பிறகு 10 நாளுக்குள்ளாவது 10வது நாளிலாவது வந்தால், பிண்டோதகம் முதலான யாவற்றயைும் பாக்கி நாளில் செய்ய வேண்டியது.

42. அந்தந்தக் காலத்தில் பிண்டோதகம் முதலான யாவற்றையும் செய்து, 11வது நாளில் ஆஉ)° செய்து கேட்டது முதல் 10 நாள் தீட்டுக்காத்து பிறகு "ஸூவுதாஉ)°" செய்து த்ரிபக்ஷாதிகாலத்தில் ஸபிண்டீகரணத்தைச் செய்ய வேண்டியது. புனர்தஹனம் கிடையாது. 12வது நாளில் ஸபிண்டீகரணம் செய்யக்கூடாது.

* ஸ்நுஷாணாம் ம்ருதாநாம் தத்ஸ்நாநம் ச ஶ்வஶுராதிஷு ।
ஸஞ்சயாத் ப்ராக்தஶாஹேந ஸஞ்சிதே த்ர்யஹாத் ததः ॥

என்கிற வசனப்படி,

மாமனார், மாமியார் இறந்த விஷயத்தில் நாட்டுப் பெண்களுக்கு, அவர்களின் பர்த்தா க்ருத்யம் செய்தாலும் செய்யா விட்டாலும், பிள்ளைகளைப் போலவே ஸஞ்சயனத்திற்கு முன் கேட்டால் 10 நாளோடு தீட்டுப் போய்விடும். ஸஞ்சயனத்திற்குப் பிறகு கேட்டால் கேட்டது முதல் 10 நாள் தீட்டுண்டு.

---

* இந்த வவநம் தீக்ஷதீயக்ரந்தத்தில் இல்லை

*43.* அன்யனால் தஹனம் செய்யப்பட்டு ஸஞ்சயனத்திற்கு முன் *10*வது நாள் ராத்திரியிலாவது, *11*வது நாள் காலையிலாவது புத்ரன் வந்தால், *11*வது நாள் காலையில் புனர்தஹனம், வபனம் முதலிய யாவற்றையும் செய்து, ஆத்யச்ராத்தத்தையும் செய்து, கேட்டது முதல் *10* நாள் தீட்டுக்காத்து உதகதானம் மட்டில் செய்து வந்து, தீட்டுப் போனபிறகு ஆவ்ருத்தாத்யம் செய்து, த்ரிபக்ஷாதிகாலத்தில் ஸபிண்டீகரணத்தைச் செய்ய வேண்டியது.

*44.* ஸஞ்சயனத்திற்குப் பிறகு *11*-வது நாளில் வந்தால், வபனம் செய்துகொண்டு வ்ருஷோத்ஸர்ஜனம், ஆத்யச்ராத்தம் இவைகளைச் செய்து, கேட்டது முதல் *10* நாள் தீட்டுக் காத்து உதகதானம் மட்டில் செய்து, தீட்டுப் போனபிறகு ஆவ்ருத்தாத்யமும் த்ரிபக்ஷாதிகாலத்தில் ஸபிண்டீகரணமும் செய்ய வேண்டியது.

*45.* அன்யர்கள் செய்கிற விஷயத்தில் புத்ரன் ஸஞ்சயனத்திற்கு முன் வந்தால் புனர்தஹனம் முதற்கொண்டும், பிறகு வந்தால் புனர்தஹனமன்னியிலும், மற்றதெல்லாவற்றையும் செய்ய வேண்டியது.

*46.* கனிஷ்டனால் ஸம்ஸ்காரம் செய்யப்பட்டு *10* நாளுக்குள் ஸஞ்சயனத்திற்கு முன் ஜ்யேஷ்டன் வந்தால் வபன ஸஞ்சயனங்களைச் செய்து கடந்த பிண்டோதகங்களை ஒரே தடவையில் செய்து பாக்கி நவச்ராத்தாதிகளை அந்தந்தக் காலத்தில் செய்து *11*-வது நாளில் ஆத்யத்தையும் ஆவ்ருத்தாத்யத்தையும் செய்து *12*-வது நாளில் ஸ்பிண்டீகரணத்தைச் செய்ய வேண்டியது.

*47.* ஸஞ்சயனத்திற்குப்பிறகு *10* நாட்களுக்குள் வந்தால் மேலே *43* பாராவில் சொல்லியபடி செய்ய வேண்டியது. ஸஞ்சயனத்திற்கு முன் வந்தால் *10* நாளோடு தீட்டு

நிவ்ருத்திக்கும், பிறகு வந்தால் கேட்டது முதல் 10 நாள் தீட்டு உண்டு.

48. கனிஷ்டனால் 9 நாள் க்ரியைகள் செய்யப்பட்டு 10-வது நாள் ஜ்யேஷ்டன் வந்தால் கண்டம் வரையில் வபனம் செய்துகொண்டு 9 நாள் உதகபிண்டங்களை ஒரே தடவையாகச் செய்து, 10-வது நாள் உதகம், பிண்டம், ப்ரபூதம் முதலியவைகளைச் செய்து, ஸர்வாங்க வபனத்துடன் சாந்தி ஹோமத்தைச் செய்து, 11-வது நாளில் ஆத்யச்ராத்தத்தைச் செய்து கேட்டது முதல் 10 நாள் தீட்டைக் காத்து பிறகு ஆவ்ருத்தாத்யத்தையும், த்ரிபக்ஷாதிகாலத்தில் ஸபிண்டீகரணத்தையும் செய்ய வேண்டியது.

49. புத்ரனைத் தவிர, வேறு கர்த்தாவானால் 10 நாளோடு தீட்டுப்போகும்.

50. கனிஷ்டன் செய்யும் விஷயத்தில் 11-வது நாளில் ஜ்யேஷ்டன் வந்தால் வபனம் செய்துகொண்டு வ்ருஷோத்ஸர்ஜனம், ஆத்யச்ராத்தம் இவைகளைச் செய்து கேட்டது முதல் 10 நாள் தீட்டுக்காத்து உதகதானத்தை மட்டில் செய்து (பிண்டமில்லை). தீட்டுப்போனபிறகு ஆவ்ருத்தாத்யத்தையும், த்ரிபக்ஷாதிகாலத்தில் ஸபிண்டீகரணத்தையும் செய்ய வேண்டியது.

51. ஜ்யேஷ்டனால் செய்யப்படுகிற விஷயத்தில் கனிஷ்டனுக்கு உதகமாத்ரம். ஸஞ்சயனத்திற்கு முன் கேட்டால் 10 நாளோடு தீட்டுப் போய்விடும். பின் கேட்டால் கேட்டது முதல் 10 நாள் தீட்டும், உதகதானம் மட்டுமுண்டு.

52. அன்யனாலாவது, கனிஷ்டனாலாவது ஸபிண்டீகரணமும் செய்யப்பட்ட பிறகு ஜ்யேஷ்டன் வந்தால் வபனம் செய்துகொண்டு 10 நாள் உதகதானம் செய்து, 11-வது நாளில் [illegible]த்தைச் செய்ய வேண்டியது.

53. அன்யர்களால் செய்யப்பட்டதில் ஜ்யேஷ்டன் வராமல் கனிஷ்டன் வந்தால், மேலே கண்ட மாதிரி செய்து ஸபிண்டீகரணத்தை பார்வணமாகச் செய்யவேண்டியது.

54. ஸபத்னீபுத்ரனால் க்ரியைகள் செய்யப்பட்ட மாதாவின் விஷயத்தில் ஔரஸபுத்ரனை ஜ்யேஷ்டனாகவும், ஸபத்னீபுத்ரனை கனிஷ்டனாகவும் பாவித்து மேலே சொல்லிய ந்யாயங்களை அவர்கள் விஷயத்தில் வைத்துக்கொள்ள வேண்டியது.

55. தாய், தகப்பன் தவிர, மற்றவனுக்கு ஒருவன் க்ருத்யம் செய்து கொண்டிருக்கும்போது வேறொருவனுக்கு க்ருத்யம் செய்யும்படி நேர்ந்தால் முதற் க்ருத்யத்துடன் இரண்டாவது க்ருத்யத்தையும் முடிக்க வேண்டும். ஏகோத்திஷ்டமாத்ரம் அதநின் 11-வது நாளில் செய்ய வேண்டியது.

56. தாய், தகப்பன் இவர்களுக்குமட்டில் இறந்து போனது முதற்கொண்டே கார்யங்களைச் செய்ய வேண்டியது.

## 6. தம்பதிகள் மரணம்

1. தம்பதிகள் ஒரே காலத்தில் மறித்தாலும், ஒருவரை தஹனம் செய்வதற்குள் மற்றொருவர் மறித்தாலும், இருவரையும் சேர்த்தே தஹனம் முதலிய கர்மங்களைச் செய்ய வேண்டியது. மந்த்ரங்களை இரட்டித்துச் சொல்ல வேண்டியது.

2. குண்டம் ஒன்று, அதே குண்டத்தில் கற்களை தனித்தனி நடவேண்டும். அன்னம், சிலாகுண்டம், சிதை, சாந்தி, ஸஞ்சயனம் இவைகள் ஒன்று.

3. திலோதகம், பிண்டம், ஸோதகும்பம், நவச்ராத்தம் ஏகோத்தரவ்ருத்தி, ஷோடசம் இவைகளைத் தனித்தனியே செய்ய வேண்டியது. ஸபிண்டீகரணம் ஒன்று, நிமித்தவரணம் இரண்டு.

4. பிதாமஹன், பிதாமஹீ இவர்களுக்கும் இப்படியே.

## 7. ஸங்காத மரணம்

ஸங்காத மரண விஷயத்தில் இறந்த வரிசைப்படிக்கும், சம்பந்தக்ரமப்படிக்கும், க்ருத்யம் செய்ய வேண்டியது.

## 8. 𑌦𑌹𑌨𑌂

இது இரு வகைப்படும். 1. 𑌸𑌕𑍃𑌦𑍍𑌦𑌹𑌨𑌂 2. புனர் 𑌦𑌹𑌨𑌂

அவற்றில் புனர்தஹனம் இரு வகைப்படும்.

1. 𑌅𑌸𑍍𑌥𑌿𑌦𑌹𑌨𑌂 அதாவது 𑌦𑌹𑌨𑌂 செய்யப்பட்டவர்களுடைய எலும்புகளைச் சேர்த்து புருஷாக்ருதியாகச் செய்து 𑌦𑌹𑌨𑌂 செய்வது.

2. புரசு இலைகளினாலாவது தர்ப்பைகளினாலாவது புருஷாக்ருதியைச் செய்து 𑌦𑌹𑌨𑌂செய்வது. இதைத்தான் தர்ப்பஸம்ஸ்காரம் என்று சொல்வது.

இந்த ஸம்ஸ்காரத்திற்கு பதிபிண்டம் பொங்குதல், வேஷ்டி விசுருதல், காலைச் சேர்த்துக் கட்டுதல், ப்ரதக்ஷிணம் செய்தல், நவத்வாரத்திலும் நெய்விடுதல், ஹஸ்தம் துடைத்தல், வேஷ்டி போர்த்தல், ஸம்மார்ஜனம், உபஸ்தானம், தலைபிரித்து முடிதல், அப்ரதக்ஷிணம், பதிபிண்டம் ஆகிய இவைகள் கிடையாது.

𑌚𑌰𑍁𑌶𑍍𑌰𑌪𑌣𑌸𑌂𑌸𑍍𑌕𑌾𑌰𑍇 𑌪𑌾𑌦𑌯𑍋𑌰𑍍𑌬𑌨𑍍𑌧𑌨𑌂 𑌨𑌹𑌿 ।
𑌪𑍍𑌰𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌾𑌜𑍍𑌯𑌸𑍇𑌕𑌶𑍍𑌚 𑌹𑌸𑍍𑌤𑌸𑌂𑌮𑌾𑌰𑍍𑌜𑌨𑌂 𑌨𑌹𑌿 ॥
𑌪𑌰𑍍𑌣𑌦𑌾𑌹𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌯𑌾𑌂 𑌤𑍁 𑌘𑍃𑌤𑌸𑍍𑌰𑌾𑌵𑌣𑌂 𑌨𑌹𑌿 ।
𑌸𑌂𑌮𑌾𑌰𑍍𑌜𑌨𑍋𑌪𑌸𑍍𑌥𑌾𑌨𑌂 𑌬𑌨𑍍𑌧𑌨𑌂 𑌚𑌾𑌪𑍍𑌰𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌮𑍍 ॥
𑌵𑌰𑍍𑌜𑌯𑍇𑌤𑍍 𑌪𑌤𑌿𑌪𑌿𑌣𑍍𑌡𑌂 𑌚 𑌪𑌾𑌷𑌾𑌣𑍋𑌦𑌕𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌾𑌣𑌿 ॥

## 9. துர்மரணமடைந்தவனுடைய ஸம்ஸ்காரம்

1. மரிக்கவேணுமென்ற இச்சையால் இறந்தவன் விஷயத்தில் உடனே தீட்டுப் போய்விடும். தஹநம். இல்லை. அஸ்திஸஞ்சயநம் உதகதாநம் கூடாது. அஶ்வத்தகாஷ்டக தஹநம் செய்ய வேண்டியது தேஹம் பஸ்மமாகும் வரையில் தான் தீட்டு, ஒரு வர்ஷம் அல்லது ஆறு மாஸம், அல்லது மூன்று மாஸம், அல்லது ஒண்ணரை மாஸம், அல்லது இருபத்தி நாலு நாள் சென்ற பிறகு க்ருத்யம் செய்ய வேண்டியது. நாராயண பலி செய்துவிட்டு க்ருத்யம் செய்ய வேண்டியது. உடனே செய்ய வேண்டியதாயிருந்தால் ஐந்து மடங்கு ப்ராயச்சித்தம் செய்து பிறகு அஸ்திதாஹம் முதல் செய்யலாம்.

2. ஒரு வர்ஷம் சென்ற பிறகாவது, ஆறு மாஸம் சென்ற பிறகாவது செய்வதாயிருந்தால், மூன்று நாள் தீட்டுக் காத்து நாலாம் நாள் ஶ்ராத்தம் செய்ய வேண்டும். இது மாதா பித்ருக்கள் விஷயம். மற்றவர்களுக்கு ஒரே நாள்தான் தீட்டு.

3. ஒரு வர்ஷம் சென்றபின் செய்வதாகயிருந்தால் ஒரே நாளில் பிண்டங்களைக் கொடுக்க வேண்டியது. மறுநாள் ஏகோத்திஷ்டத்தையும் மூன்றாம் நாள் ஸபிண்டீகரணத்தையும் செய்ய வேண்டியது.

4. துர்மரணத்தை அடைந்தவர்களுக்கு க்ருத்யம் காலாந்தரத்தில் செய்யப்பட வேண்டுமென்றிருந்தாலும், ப்ராயச்சித்தம் செய்தால் உடனேயும் செய்யலாமென்றிருக்கிறது.

ப்ராயஶ்சித்த மாவது:- ப்ராஜாபத்யம் 5 தப்தம் 15 சாந்த்ராயணம் 5 ப்ராஜாபத்யக்ருச்ரம் 3 கொண்டது ஒரு தப்த க்ருச்ரம். சாந்த்ராயணமும் அதுபோலவே. ஆக

65 ப்ராஜாபத்ய க்ருச்ரங்களை அனுஷ்டிக்க வேண்டியது.

## 10. பதிதனுடைய ஸம்ஸ்காரம்

பதிதனை ஸம்ஸ்காரம் செய்யும் விஷயத்தில் இவனுக்கு ஸபிண்டீகரணம் கிடையாது. நாராயண பலி மட்டுமே.

## 11. தேசாந்தரம்போய் இறந்தவர்களுடைய ஸம்ஸ்காரம்

1. தேசாந்தரம் போனவர்கள் தாய் தகப்பன் தவிர மற்றவர்களானால், 12 வர்ஷம் யாதொரு ஸமாசாரமும் தெரியாமலிருந்தால், நாராயண பலி செய்து விட்டு க்ருத்யம் மூன்று நாளில் செய்ய வேண்டியது. தாய் தகப்பன் விஷயத்தில் 15 வர்ஷம் சென்ற பிறகு 16வது வர்ஷத்தில் பலாச பர்ணப்ருதிக்ருதி செய்து தஹனம் செய்து க்ரியைகளை ஆரம்பித்துச் செய்ய வேண்டியது. 10 நாள் தீட்டுக் காத்து செய்யவேண்டியது. நாராயணபலியை முதலில் செய்துவிட்டுத்தான் க்ரியையை ஆரம்பிக்க வேண்டியது.

2. தேசாந்தரம் போனவன் விஷயத்தில், அவன் போன மாதம், திதி இவைகளை வைத்துக்கொண்டு க்ரியாரம்பம் செய்ய வேண்டியது. மாதம் தெரியாவிட்டால் ஆடி, புரட்டாசி, மாசி இம்மாதங்களில் செய்ய வேண்டியது.

3. திதி தெரியாவிட்டால் க்ருஷ்ணபக்ஷம், அஷ்டமி, ஏகாதசி, அமாவாஸ்யை இவைகளிலொன்றில் செய்ய வேண்டியது.

4. இறந்துபோனதாக ஸமாசாரம் தெரிந்த விஷயத்தில் மாஸம், திதி தெரியாவிட்டால் மேற்கண்ட மாதிரியாகவே செய்ய வேண்டியது.

5. காலாந்தரத்தில் க்ருத்யம் செய்வதாயிருந்தால் மாஸம், பக்ஷம், திதி, வாரம், யோகம் இவைகளை கவனித்து நாள் பார்த்தே செய்ய வேண்டியது.

# 12. புனர்தஹனம்

*1. அன்யனால் தஹன ஸஞ்சயனங்கள் செய்யப்பட்ட பிறகு புத்ரனாவது அல்லது வேறு முக்யகர்த்தாவாவது க்ரியைகள் செய்வதாயிருந்தால் புனர்தஹனமில்லை.*

*2. அன்யனால் தஹனம் செய்யப்பட்ட பிறகு (புத்ரனல்லாத) முக்யகர்த்தா மேல் க்ரியையைச் செய்ய வேண்டியதா யிருந்தால் புனர்தஹனமில்லை.*

*3. கனிஷ்டனால் தஹனம் செய்யப்பட்டு ஜ்யேஷ்டன் பிறகு செய்வதாயிருந்தால் புனர்தஹனமில்லை.*

*4. அன்யனால் தஹனம் செய்யப்பட்டு பிறகு புத்ரன் க்ரீயையை செய்வதாயிருந்தால் புனர்தஹனம் உண்டு.*

*5. மந்த்ரமில்லாமல் தஹனம் செய்யப்பட்டவர்களுக்கு மேல் க்ரியையை செய்வதில் புனர்தஹனம் உண்டு.*

*6. இறந்தவனுக்கு ஏற்பட்ட அக்னியைத் தவிர வேறு அக்னியால் தஹனம் செய்யப்பட்டால் புனர் தஹனம் செய்ய வேண்டும்.*

*7. தஹனத்தில் அங்கவைகல்யம் ஏற்பட்டால் புனர் தஹனம் உண்டு. இதற்கு வசனம்:*

**அஸ்திஸஞ்சயநே காலே தாஹஸ்ய வ்யங்கதா யதி பவேத்।**

**அஸ்வாத யதி தந்த்ரேண புநர்தஹநமாசரேத் ॥**

*8. தஹநம்பப்பட்டு ஸஞ்சயனம் ஆகாமலும் உதகதானம் பூர்த்தி செய்யப்படாமலும் 11-ம் நாள் ஆத்ய ஶ்ராத்தம் செய்யப்படாமலும் இருக்கிற விஷயத்தில் புனர்தஹனம் செய்ய வேண்டியது.*

## 13. ஶாலக்ருத்ய மரணவிஷயம்

*1. ஆணானாலும், பெண்ணானாலும், 23 மாஸம் பூர்ணமாவதற்குள் இறந்துபோனால் அவர்களுக்கு வநந ஸம்ஸ்காரம் செய்ய வேண்டியது.*

*2. 24-வது மாஸம் முதல் உபநயனம் முடிவு வரையில் துஷாக்னியினால்* " ஊஷூாதூ ஜயிஜாதொநஷி " *என்கிற மந்த்ரத்தால்* ஊகவூவியி *யாய் தஹனம் செய்ய வேண்டியது.*

*3. 25-வது மாஸம் முதல் 36-வது மாஸம் முடிவு வரையில் திலோதகமும் பிண்டங்களுமுண்டு. தர்ப்பமும் மந்த்ரமுமில்லை.*

*4. 37-வது மாஸம் முதல் 48-வது மாஸம் முடிய திலோ தகபிண்ட தானமும், நாராயண பலியுமுண்டு.*

*5. உபநயனம் முதல் 12-வது வயது வரையில் ஸபிண்டீகரணத்தைத் தவிர, மற்ற தஹன ஸஞ்சயன வாஸோதக திலோதக பிண்ட பலிப்ரதான ஏகோத்திஷ்ட ஷோடசச்ராத்த நவச்ராத்தங்களை மந்த்ரவத்தாய் செய்ய வேண்டியது.*

*6.49-வது மாஸம் முதல்* ஊஷூிஷைஷயுநம் ( தூஷூஜஜஷூகம் ) *செய்ய வேண்டியது.*

*7. 61-வது மாஸம் முதல்* ஆஷூ)ஶ)ாஙம் *உள்பட எல்லாம் தந்த்ரமாக மந்த்ரமில்லாமல் செய்ய வேண்டியது. அதாவது* நஹூம், நவஶ)ாஙம், ஊகொதூாவுஷி, விஷொதூஜூநம், ஆஷூ)ஜ ||

*8. 85-வது மாஸம் முதல் மேலே சொன்ன எல்லாவற்றோடு ஷோடசமும் செய்ய வேண்டியது. எல்லாம் தந்த்ரமாகச் செய்ய வேண்டியது.*

9. 97-வது மாஸம் முதல் வாஷாணஸ்தாவடநம் செய்து ஸகலமும் மந்த்ரவத்தாய்ச் செய்ய வேண்டியது.

10. உபநயனமாகாத ஆணுக்கும் விவாகமாகாத பெண்ணுக்கும் எத்தனை வயதானாலும் நாராயணபலியைத் தவிர ஸபிண்டீகரணம் ஆப்திகம்வருதர்ஙாஸீகம் இவைகள் கிடையாது. துஷாக்னியால்தான் தகனம்.

11. 4-வது வயது முதல் கூநூவநீதன் கூநூஙா இவர்களுக்கு நாராயணபலி செய்ய வேண்டியது.

12. புருஷனானாலும், ஸ்த்ரீயானாலும் 12-வது வயதிற்குள் விவாஹமாய்விட்டால் ஸபிண்டீகரணாந்தம் ஸர்வமும் செய்ய வேண்டியது.

13. 2 வயதிற்குற்பட்ட பெண் விவாஹமாய் மரித்தால், வநநம் செய்து உடனே எடுத்து ஸமந்த்ரகமாய் தஹநாதி ஸபிண்டீகரணாந்தம் எல்லாவற்றையும் செய்ய வேண்டியது.

## 14. நாராயணவலிः

1. யதிமரணத்திலும் வாஸுதியிலும் ஸஹஸ்ரவொஜநம் முதலிய காம்யானுஷ்டானங்களிலும் நாராயணவலிः செய்ய வேண்டியது.

2. ஸஹஸ்ரஹொஜந விஷயத்தில் கேஶவாதிகள் 12

3. யதிமரணத்தில் நாராயணவலிःயில் சுக்லக்ருஷ்ண பக்ஷங்களில் கேசவாதிகள் 12, விச்வம்பரர் 1 ஆக 13. ஆராதனத்தில் சுக்லபக்ஷமானால் கேசவாதிகள் 12. க்ருஷ்ணபக்ஷமானால் ஸங்கர்ஷணாதிகள் 12.

4. வாஸுதியில்:- ப்ரஹ்மா,1 விஷ்ணு,1 ருத்ர,1

வஸ்வாதி விதர்க்கள்1 வைதாஜா,1 யம,1

வைதநாராயண,1 கேஶவநாய 1 ஆக 8

ஙுஹா விஷ்ணுஶ்ச ரூத்ரஶ்ச வஸூரஹி ஹிதாஸ்யதா ।

வைநதாரஜோ யஶ்சைவ வைநதநாராயணஸ்யதா ॥

கேஶவாஶ்ரீ உாரதைநகம் ஶ்ராகூம் நாராயணாஉூணஃ ।

நாராயணம் ஸஶூஜிஶ) விஉநநஷளதா ஜோஜயேத ॥

## 15. ஸம்சயநஃ

1. அஸ்திஸஞ்சயனம் பூர்வாஹ்னத்தில் செய்ய வேண்டியது. மத்யாஹ்னத்தில் செய்தால் மத்யமம், அபறாஹ்னத்தில் செய்தால் அதமம்.

2. ப்ராம்ஹணர்களுக்கு நாலாவது நாளில் அஸ்தி ஸஞ்சயனம் செய்ய வேண்டும்.

ஆனால், போதாயனம், ஸத்யாஷாடம், பாரத்வாஜம், ஆபஸ்தம்பம் இந்த ஸூத்ரக்காரர்கள் 2 நாளில் செய்ய வேண்டியது.

3. தாய், தகப்பன் தவிர, மற்றவர்களுக்கு வெள்ளிக் கிழமையில் ஸஞ்சயனம் செய்யவே கூடாது.

4. மற்றவர்களுக்கு உர்சம் ஸங்க்ரமணம் இவை குறுக்கிட்டு காலமில்லாவிட்டால் வெள்ளிக்கிழமை தோஷம் பாராமல் ஸஞ்சயனம் செய்து க்ரியையை முடித்துவிட வேண்டியது.

5. உர்சம்வகையறாவுக்குப் பிந்தி க்ரியையை ஆரம்பிக்கும் பக்ஷத்தில் வெள்ளிக்கிழமையில் ஸஞ்சயனம் செய்யக்கூடாது.

6. புனர்தஹனத்தில் உடனே ஸஞ்சயனம் செய்ய வேண்டியது. ஸம்சயநம் கரிஷ்யே என்று ஸங்கல்பம் செய்துகொண்டு பாலினால் ப்ரோக்ஷணஞ்செய்து அவஸூஜேத)ாஹி மந்த்ரங்களினால் மூன்று ஆஜ்யாஹுதிகள்

செய்து 'உத்திஷ்டாத இதி' மந்த்ரத்தை ஜபிக்க வேண்டியது. மற்றதுகள் அப்படியே.

அஸ்தீநாம் ப்ரக்ஷேபணாஹே ஸத்யஸ்நாநம் இஷ்யதே ।
க்ஷௌரேண ப்ராக்ஷ்ய । அபஸ்யஜேதி த்ருவஸ்ய:
ஸர்வாஸாம் த்வஹம்ஸா உத்திஷ்டாத இதி ஜபனாத்ரம்
கர்தவ்யம், ஸர்வ ஜந்ம ஸ்நாநம் ॥

## 16. கர்த்ருக்ரம: ॥

*1.* ஔரஸ புத்ரன் *(1)* புத்ரர்கள் பலரிருந்தால் மூத்தவன். *(2)* இரட்டைப் பிள்ளைகளாயிருந்தால் பிந்திப் பிறந்தவனே மூத்தவன் *(3)* பல பெண் ஜாதிகளிலிருந்து எல்லோரும் புத்ரவதிகளாயிருந்தால் வயதில் பெரியோனே மூத்தவன். *(4)* ஸ்வீகாரம் செய்து கொண்ட பின் ஔரஸன் பிறந்தால் ஔரஸனே கர்த்தா. *(5)* ஒருவனுக்கு இரண்டு பெண் ஜாதிகளிலிருந்து மூத்தாளை வைத்துக்கொண்டு ஸ்வீகாரம் செய்து பிறகு இளையாளுக்குப் பிள்ளை பிறந்தால், தகப்பன் விஷயத்திலும் இணையாள் விஷயத்திலும் ஔரஸனே கர்த்தா என்பதில் ஸந்தேகமில்லை.

மூத்தாள் விஷயத்திலும் அவனேதான். ஸ்வீக்ருதன் கர்த்தாவாகமாட்டான்.

*2.* பௌத்ரன்

*3.* க்ஷயான் பிள்ளைகள்

*4.* தத்தன்

*5.* க்ஷயான் பிள்ளைகள்.

*6.* யதநஹாரீ தௌஹித்ர:

7. தௌஹித்ரன்.

8. பத்னி. (பலபேரிருந்தால் மூத்தாள்)

9. அவிபக்த குடும்பத்தில் ப்ராதா.

10. ஸ்த்ரீகள் விஷயத்தில் அவள் வயிற்றில் பிறந்த ஆண் ஸந்ததி வர்க்கமில்லாவிடில் ஸபத்னீபுத்ரன்.

11. பர்த்தா.

12. ஜாஹிதா

13. ப்ராதா, (ஸ்த்ரீகள் விஷயத்தில் எல்லாவற்றிற்கும் பர்த்தாவினுடைய என்று சேர்த்துக் கொள்ள வேண்டியது.) இது சிலர் மதம்.

14. க்ஷயான் பிள்ளைகள்.

15. அஸோதர ப்ராதா.

16. க்ஷயான் பிள்ளைகள்.

17. பிதா.

18. மாதா.

19. ஸ்நுஷா, (நாட்டுப் பெண்)

20. பௌத்ரீ.

21. தௌஹித்ரீ.

22. பௌத்ரஸ்ய பத்னீ.

23. தத்புத்ரீ. (மேற்படியாளுடைய பெண்)

24. தத்தனுடைய பத்னீ.

25. பகிநீ, (தங்கை, தமக்கை).

26. பாகிநேய, (மருமான்)

27. ஸபிண்டன்

28. ஸமானோதகன்

29. மாத்ருஸபிண்ட

30. தத்ஸமானோதக:

31. ஜாமாதா

32. ஸவா (ஸ்நேகிதன்)

33. தனஹாரீ.

கர்த்தாக்களில் ஒரே அந்தஸ்தில் பல பேர்களிருந்தால் தகப்பன் வழி, தாய்வழியைக் கவனிக்காமல் வயதில் மூத்தவர்களே கர்த்தாவாக ஆகிறார்கள்.

## 17. ஶ்ரொஜி விவயூரஸ

1. க்ருத்யம் செய்து கொண்டிருக்கும்போது வாஸோதகத்திற்காக வைத்துக் கொண்டிருக்கும் வஸ்த்ரம், பிண்டம் பொங்கும் பாத்ரம், கையில் வைத்துக் கொண்டிருக்கும் செம்பு, நட்டபாஷாணம் இவைகள் காணாமல் தவறினால் நடந்த பிண்ட திலோதகங்களை மறுபடி செய்ய வேண்டியது.

2. நதிக்கரையில் நட்ட கல் காணாவிடில் மந்த்ரவத்தாய் வேறு கல்லை நட்டு, அடிமுதல் வாஸோதக திலோதகங்களைச் செய்ய வேண்டியது.

3. மற்றது எது கெட்டுப்போனாலும் அடி முதல் எல்லாவற்றையும் இரண்டிடத்திலும் செய்ய வேண்டியது.

4. பிண்டம் உடைந்து போனாலாவது, காக்கை முதலிய ஜந்துக்களால் தூஷிக்கப்பட்டாலாவது உடனே வேறு பிண்டம் வைக்கவேண்டியது.

5. கர்த்தா வேறுபட்டால், முன் நடப்பட்ட கல்களை எடுத்தெறிந்துவிட்டு, வேறு கல்களை நட்டு அடிமுதல் எல்லாவற்றையும் செய்ய வேண்டியது.

## 18. பர்யுஷித சவமும், அதற்கு ப்ராயச்சித்தமும்

*1. பகலில் இறந்தால் 'ப்ரேதத்தை இருபத்தைந்து நாழிகைக்குள் (25x24 நிமிடங்கள்) தகனம் செய்துவிட வேண்டும். ராத்ரியிலாவது பகலிலாவது சவத்தை ஸம்ஸ்காரம் செய்யாமலிருந்துவிட்டால், அந்த சவத்தை 'பர்யுஷிதம்' என்று சொல்வார்கள். அதைத் தஹனம் செய்ய வழி என்னவென்றால், ப்ராஹ்மணர்களிடம் அநுக்ஞைபெற்று, மூன்று க்ருச்ரம் செய்து சவத்தை பஞ்சகவ்யத்தால் ஸ்நானம் செய்வித்து, பாவனமான மந்த்ரத்தால் அபிமந்த்ரித்து, பிறகு சுத்த ஜலத்தால் ஸ்நானம் செய்வித்து, அதன் பிறகு விதிப்படி தஹனம் செய்ய வேண்டியது. வேறு விதம் செய்தால் கர்மா நிஷ்பலம்.*

*2. சவமானது அழுகி நாற்றமடைந்து விட்டால் கோமயத்தால் ஸ்நானம் செய்வித்து, தப்தகிருச்ரம் செய்து தஹனம் செய்ய வேண்டியது.*

*3. சவமானது, அழுகியும், புழு உண்டாகியும், நாய், காக்கை, முதலானவைகள் ஸ்பர்சித்து விட்டால், சவத்தை கோமயத்தால் ஸ்நானம் செய்வித்து, மறுபடியும், பால், தேன் இவைகளால் ஸ்நானம் செய்வித்து, அதன் பிறகு, புண்யாகவாசன தீர்த்தத்தாலும், கங்கா தீர்த்தத்தாலும் ஸ்நானம் செய்வித்து, ப்ராஹ்மணருக்கு பசு தானம் செய்து, தஹனம் செய்ய வேண்டியது.*

*4. சவமானது, வேறு ஏதாவது ஒரு தீட்டுள்ளதானால் பஞ்சகவ்யத்தாலும், தர்ப்ப தீர்த்ததாலும் ஸ்நானம் செய்து வைத்து தஹனம் செய்ய வேண்டியது.*

*5. ப்ரேதத்துக்கு வீட்டில் செய்ய வேண்டிய கர்மங்கள் எல்லாம் செய்த பிறகு அந்த ப்ரேதம் உயிருடன் இருந்தால், ஆயுஷ்ய ஸூக்த ஹோமம் செய்ய வேண்டும்.*

ச்மசானத்துக்குப் போகும் வழியிலாவது, ச்மசானத்திலாவது ப்ரேதத்துக்கு உயிருண்டானால், அதை நெய்யினால் பூரண முக அமுக்கி ஸ்நானம் செய்வித்து, அதன் பிறகு ஜாதகர்மம் முதலான எல்லாம் செய்து வைத்து சேர்த்துக்கொள்ள வேண்டும் என்று சாஸ்திரம்.

6. இறந்து போனவர்களை ஒரு ஜாமம் அல்லது இரண்டு ஜாமம் வரையில் பார்த்து இறந்த நிச்சயம் தெரிந்துதான் கர்மங்கள் செய்ய வேண்டும். நிச்சயம் தெரிந்து கொள்ளாமல், கர்த்தா கர்மங்களை ஆரம்பித்து செய்தால் ப்ரம்ஹத்திதோஷம் ஏற்படும், நிந்தனைக்கும் உள்ளாவான்.

## 19. 𑌪𑍍𑌰𑌭𑍂𑌤𑌬𑌲𑌿𑌃 ।

தர்ச ஸங்க்ரமணங்களுக்காக நடுவில் க்ரியையை முடித்து விட்டாலும் ப்ரபூதபலிப்ரதானம், பாஷாணோத்தாபனம் இவைகளை மட்டும் 10-வது தினத்திலேயே செய்ய வேண்டியது.

## 20. 𑌉𑌦𑌕𑌦𑌾𑌨𑌮𑍍

1. அவரவர்களுக்கு ஏற்பட்ட ஆசௌசத்தின் முடிவு தினத்தில் உதகதானம் செய்ய வேண்டியது.

2. தாய், தகப்பன் தவிர மற்றவர்களுக்கு தர்ச ஸங்க்ரமணங்கள் நடுவில் வந்தால் அதற்கு முந்தியே க்ரியையை முடித்துவிட வேண்டியது. ஜ்ஞாதிகளும் உதகதானத்தை முடித்துவிட வேண்டியது.

3. தர்ச ஸங்கரமணங்களுக்குப் பிறகு க்ருத்யம் ஆரம்பிப்பதானால் க்ரமப்படி செய்ய வேண்டியது.

4. கர்த்தாவோடுகூட ஜ்ஞாதிகள் உதகதானத்தை முடிக்காமல் 10-வது நாளில் செய்வதாயிருக்கும் பாஷாண ஸ்தாபன குண்டத்தில் செய்யக்கூடாது என்பது பெரியோர்களின் கொள்கை.

*5. ப்ரேதத்திற்கு பசி தாகம் அதிகம். ஆனதால் தர்சஸங்க்ரமணங்களுக்கு முந்தியே முடித்துவிட வேண்டியது முக்யபக்ஷம். பிறகு ஆரம்பிப்பது கௌணபக்ஷம்.*

*6.தசராத்ர ஜ்ஞாதிகள் 10-வது தினத்திலும், த்ரிராத்ர ஜ்ஞாதிகள் 3-வது தினத்திலும் உதககதானத்தைச் செய்ய வேண்டியது.*

*7. ஆசௌசஸன்னிபாதவிஷயத்தில் தனித்தனியே ஒவ்வொன்றிற்கும் உதககதானம் செய்ய வேண்டியது.*

*8. உதககதானம் செய்யத் தவறிப்போய்விட்டால், மறுநாளில் உதககதானத்தைச் செய்து அன்றும் தீட்டுக்காக்க வேண்டியது.*

*9. தர்ச ஸங்க்ரமணங்கள் இரண்டும் நடுவில் வந்து விட்டால், தர்சம் ஸங்க்ரமணத்திற்குப் பிறகு, வந்தாலும், அதற்கு முன் வந்தாலும் தர்சத்திலேயே க்ரியையை ஸமாப்தி செய்ய வேண்டியது.*

*10. ஸங்க்ரமணம் மாத்ரம் நடுவில் வந்தால் அதில் க்ரியையை ஸமாப்தி செய்ய வேண்டியது.*

*11. பிதாவின் தசாமஹமத்யத்தில் மாதாவின் மரண மேற்பட்டிருக்கும் பக்ஷத்தில், பிதாவின் தசம தினத்திலேயே மாதாவுக்கும் உதகபிண்டஸமாபனம் செய்ய வேண்டியது.*

---

**குறிப்பு: தர்ச ஸங்க்ரமணங்களுக்காக க்ரியைகள் முடிக்கும் பக்ஷத்தில் ஜ்ஞாதி களும் முடித்துவிட வேண்டியது.**

**கர்த்தா முடிக்காவிட்டால் ஜ்ஞாதிகள் முடித்துவிட வேண்டுமென்று சாஸ்த்ரமிருக்கிறது.**

**ஆனால், அது கர்த்தாவோடுகூட முதல் தினத்தில் கண்டாதுபரி வபனம் செய்துகொண்டு ப்ரதிதினம் உதகதானம் செய்கிறவர்களின் விஷயம்.**

**சிஷ்டாசாரத்தில், 10-வது நாள் வபனம் செய்து கொள்ளுகிறது என்கிற விஷயம் அனுஷ்டானத்தில் இருந்து கொண்டு வருவதினால், மேலே சொன்ன சாஸ்த்ரம் இவர்களுக்கு உரித்தாகமாட்டாது.**

12. 'ஸமாபனம்' என்று சொல்லியவிடத்தில் உதககதானம், பிண்டதானம், ஏகோத்தரவ்ருத்திச்ராத்தம் இவைகளை மட்டும் ஆகர்ஷித்து முடிக்க வேண்டுமேயல்லாது நவச்ராத்தங்களை ஆகர்ஷிக்கக்கூடாது. அவைகளை ஸ்வகாலங்களிலாவது, 11-வது தினத்திலாவது செய்ய வேண்டியது.

13. விவாஹதீக்ஷையின் மத்தியில் ஏற்பட்ட ஜ்ஞாதி மரணத்திற்கு 30 உதககதானம் மட்டில் செய்ய வேண்டியது.

## 21. 𑌵𑌪𑌨𑌮𑍍 ॥

1. ஜநநாசௌச மரணாசௌசமத்யத்தில், விதியினால் அன்னியில் வபனம் செய்து கொள்ளக்கூடாது.

2. தகப்பனும் பிள்ளைகளும், ஒரே வயிற்றில் பிறந்த ப்ராதாக்களும், ஒரே தினத்தில் வபனம் செய்துகொள்ளக்கூடாது. ஒருவனால் வரிக்கப்பட்டு ச்ரார்த்தத்தில் சாப்பிடவும் கூடாது.

3. வயதில் தனக்குப் பெரியோர்களான தசராத்ரஜ்ஞாதிகளின் மரணத்திலும், மாதாமஹன், மாதாமஹீ, மாதுலன், மாதுலானீ, ச்வசுரன், மாமியார், பித்ருபகிநீ, மாத்ருபகிநீ, ஸீமந்தஜாபகிநீ, ஜனகமாதா, ஜனகபிதா இவர்களின் மரணத்திலும் வபனம் செய்துகொள்ள வேண்டியது.

குறிப்பு: 𑌜𑍍𑌯𑍇𑌷𑍍𑌠𑌸𑍍𑌵𑌸𑍄𑌣𑌾𑌂 𑌜𑌨𑌕𑌸𑍍𑌵𑌸𑍄𑌣𑌾𑌂

𑌮𑌾𑌤𑍃𑌷𑍍𑌵𑌸𑍄𑌣𑌾𑌮𑌪𑌿 𑌤𑌦𑍍𑌵𑌦𑍇𑌵 । 𑌮𑌾𑌤𑌾𑌮𑌹𑌸𑍍𑌯𑌾𑌪𑌿

𑌪𑌿𑌤𑌾𑌮𑌹𑌸𑍍𑌯 𑌤𑌤𑍍𑌪𑌤𑍍𑌨𑍍𑌯𑍋𑌰𑍍𑌵𑌪𑌨𑌂𑌚 𑌵𑍇𑌦𑍍𑌯𑌮𑍍 ॥

𑌤𑌦𑍍𑌵𑌦𑍇𑌤𑍇𑌷𑍁 𑌶𑌿𑌷𑍍𑌟𑌾𑌚𑌾𑌰𑌾𑌨𑍁𑌸𑌾𑌰𑌤𑌃 𑌉𑌪𑍇𑌕𑍍𑌷𑍍𑌯 ।

𑌜𑍍𑌯𑍇𑌷𑍍𑌠𑌸𑍍𑌯 𑌭𑍍𑌰𑌾𑌤𑍁𑌰𑍍𑌮𑌰𑌣𑍇 𑌵𑌪𑌨𑌂 𑌭𑌵𑍇𑌤𑍍 ।

𑌜𑍍𑌯𑍇𑌷𑍍𑌠𑌸𑍍𑌯 𑌭𑍍𑌰𑌾𑌤𑍁𑌃

என்று ஏகவசன மாகச் சொல்லியிருப்பதினால் 'ஸீமந்தஜாதா ஸ்வஸா' என்று வ்யாக்யானம் செய்யப் பட்டிருக்கிறது. ஆகையால் ஸீமந்த ஜாதையான தமக்கையின் மரணத்தில் மட்டில் வபனமுன்டென்று ஏற்படுகிறது.*

4. மாமனார், மாமியார் இவர்களுக்கு ஒருநாள் தீட்டுக் காக்கும் விஷயத்தில் வபனமில்லை.

5. வயதில் சிறியவர்களான பித்ருவ்யன், மாதுலன், மாதுலானீ, மாமனார், மாமியார், பித்ருபகிநீ, மாத்ருபகிநீ, ஸபத்னீமாதா, பித்ருவ்யபத்நீ, ஜ்யேஷ்டப்ராத்ருபத்நீ இவர்களுக்கு க்ருத்யம் செய்தால் வபனமுண்டு. இல்லாதபக்ஷத்திலில்லை.

6. மேலே சொல்லப்பட்டவர்கள் உபநயனமாகாதவர் களானால் கர்த்தாவுக்கும் வபனமில்லை.

7. ஸ்த்ரீகளுக்கு உபநயனஸ்தானத்தில் விவாஹம் சொல்லப்பட்டிருக்கிறது.

8. மேல் சொல்லப்பட்டவர்களுக்கு கர்த்தா வேறு இருக்க, ஏதோ காரணவசத்தால் தஹனம் மட்டில் செய்யும்படி நேர்ந்தால் தஹனாங்கவபனமில்லை.

9. த்ரிராத்ர ஜ்ஞாதிகளின் மரணத்தில் வபனமில்லை. க்ருத்யம் செய்தால் மூத்தவர்கள் விஷயத்தில் வபனமுண்டு.

10. அதிக்ராந்தாசௌசத்திலும் வபனமுண்டு.

11. தீக்ஷாமத்யத்தில், வபனப்ரஸக்தியுள்ள ஜ்ஞாத்யாதி மரணத்தில் வபனமில்லை. தாய், தகப்பன் மரணத்தில் வபனமுண்டு. மற்றவர்களுக்கானால் க்ஷௌரம் வேண்டியதில்லை.

---

*பேதமில்லாமல் தமக்கைகளின் மரணத்தில் வபனம் சிஷ்டாசாரத்திலிருக்கிறது

*12. தாய் இறந்து 10 நாளுக்குள் தகப்பன் இறந்தால் கர்த்தாவுக்கு தஹனாங்கவபனமில்லை. தகப்பன் இறந்து 10 நாளைக்குள் தாய் இறந்தால் வபனமுண்டு.*

*13. கர்ப்பதீக்ஷை, விவாஹ தீக்ஷை இவைகளின் மத்யத்தில் மாதாமஹாதிகளிறந்து க்ருத்யம் செய்யும்படி நேர்ந்தால் வபனமுண்டு, இல்லாத பக்ஷத்தில் இல்லை.*

*14. மாதாபித்ருதீக்ஷையில் க்ஷ விஷயத்தில் வபனமில்லை.*

*15. அபரவிஷயத்தில் வெள்ளிக்கிழமையில் க்ஷௌரம் செய்துகொள்ளவே கூடாது. மாதாபிதாக்கள் விஷயத்தில் க்ஷ நிஷேதமில்லை.*

*16. புத்ரனைத் தவிர, மற்றவர்கள் க்ருத்யம் செய்யும் பக்ஷத்தில் வெள்ளிக்கிழமையிலாவது, ராத்ரியிலாவது தஹனம் ஏற்பட்டால் தஹனாங்கவபனத்தை மறுநாள் செய்து கொள்ளவேண்டியது.*

*17. தசமதினமாவது, வபனப்ரஸக்தியுள்ள 3-வது தினமாவது வெள்ளிக்கிழமையாயிருந்தால் அதற்கு முதல் நாளே வபனம் செய்து கொள்ளவேண்டியது. அன்றைய தினமே ச்வரணமானால் (கேழ்விப்பட்டால்) மறுநாள் வபனம் செய்துகொள்ள வேண்டியது.*

"𑌜𑌨𑌨𑍇 𑌮𑌰𑌣𑍇 𑌚𑍈𑌵 𑌦𑌶𑌮𑍇𑌽𑌹𑌨𑌿 𑌵𑌾𑌪𑌯𑍇𑌤𑍍 ॥"

*ஜனனம், மரணம் இவ்விரண்டிலும் 10-வது நாளில் வபனம் செய்து கொள்ள வேண்டுமென்கிற வசனம் பொதுவசனம். மரணநிமித்த க்ஷௌரம் வெள்ளிக்கிழமையில் கூடாது என்பது விசேஷ வசனம்.*

*18. உதகதான ப்ரஸக்தியில்லாமல் வபனம் மட்டிலுள்ள 3 நாள் தீட்டை 3-வது நாளான வெள்ளிக்கிழமையில் கேட்டால் அதற்கு மருநாள் க்ஷௌரம் செய்துகொண்டு ஸ்நானம் செய்தால் அன்றே தீட்டுப்போய்விடும்.*

19. 10-வது தினத்தில் க்ஷௌரம், உதகதானம் இவைகளுக்குக் காலமில்லாமல் கேட்டால், மறுநாள் க்ஷௌரம் உதகதானம் இவைகளைச் செய்து அன்று தீட்டுக்காக்க வேண்டும். மறுநாள் தீட்டுப்போய்விடும்.

20. இறந்தவன் வயதில் பெரியவனா, இல்லையா? என்று ஸந்தேகம் உண்டானால் வபனம் செய்துகொள்வதே உசிதம்.

21. ஆசௌச ஸந்நிபாதத்தில், (சேர்க்கையில்) அநேக ஆசௌசங்களுக்கும் க்ஷௌரம் ஒன்றுதான்.

22. மாதாபிதாக்களின் மரண விஷயமான ஆசௌசத்தில் வபனப்ரஸக்தியுள்ள மாதாமஹாதி மரணத்தில் வபனமில்லை.

23. பத்னீ, புத்ரன், புத்ரி இவர்களின் மரணாசௌசமத்யத்தில் மாதாமஹாதிகளின் மரணம் நேர்ந்தால் அதற்கும் வபனம் கிடையாது.

ஆனால், கர்த்தாவாகவிருந்தால் தஹனாங்கவபனமும், க்ரமப்படி ஸர்வாங்க வபனமும், உதகதானம் முதலியவைகளுமுண்டு.

24. ஒருவனுக்கு பத்நீ, புத்ரன், புத்ரி இவர்கள் மரணத்தில், இவனே கர்த்தாவாக இருந்தாலும், இல்லாவிட்டாலும் வபனமில்லை.

25. ஸஹஸ்ரதீக்ஷை யுள்ளவனுக்கு பத்நீமரணத்தில் இவனே கர்த்தாவாக இருந்தாலும் இல்லாவிட்டாலும், வபனமில்லை. தீக்ஷா நிவ்ருத்தி ஆசௌசத்திற்குப் பிறகுதான்.

26. உதகதான ப்ரஸக்தியில்லாத மாதுலாவி மரணத்தை 3-வது நாள் ராத்ரியில் கேட்டால் மறுநாள் வபனம் செய்து கொண்டு ஸ்நானம் செய்தால் தீட்டுப் போய்விடும்.

அன்று ச்ராத்தமாயிருந்தாலும் வபனம் செய்து கொண்டுதான் ச்ராத்தம் செய்ய வேண்டியது.

*27. 12-வது தினத்தில் ஸபிண்டீகரணம் செய்யாவிட்டால் தாய், தகப்பன் விஷயத்தில் மட்டும் பிறகு க்ஷௌரம் செய்துகொண்டுதான் ஸபிண்டீகரணம் செய்ய வேண்டியது. மற்றவர்களுக்கானால் க்ஷௌரம் வேண்டியதில்லை.*

*28. மரணாசௌசத்தில் ஜீவபித்ருகனுக்கு வபனம் கிடையாது.*

ந ஜீவபிதருகை: காயு॰ ஶாவெ க்ஷௌர॰ கதாசந ।
யதி குயுாத ப்ரமாதெந கௌக்ஷயகா॰ ஹவெத ॥

என்கிற வசனப்படி. ஆனால் கர்த்ருத்வம் ஏற்பட்டு க்ருத்யம் செய்தால், வயதில் பெரியவர்கள் விஷயத்தில் தஹனாங்க வபனமும், 10-வது நாள் ஸர்வாங்கபவனமும் ஆவச்யகமேயாகும்.

*29. ஒருவனுக்கு இரண்டு பத்னிகள் இருந்து இருவர்களும் ப்ரஸவித்தால் ஜ்யேஷ்ட பத்னியின் ப்ரஸவத்தை அனுஸரித்து தீக்ஷையை நிவ்ருத்தி செய்துகொள்ள வேண்டும்.*

*30. மாதாபிதாக்களுக்கு க்ருத்யம் செய்யும் புத்ரர்களைத் தவிர மற்ற எவர்களும் எக்காரணத்தினாலும் ராத்ரியில் வபனம் செய்துகொள்ளக்கூடாது.*

*31. 24 மாஸம் பூர்த்தியாவதற்குள் சௌளமாகாத சிசுவுக்கு தாய், தகப்பன் கிருத்யத்தில் வபனம் கிடையாது. 25வது மாதம் பிறந்தது முதல் சௌளம் ஆனாலும் ஆகாவிட்டாலும் தஹனாங்கவபனம் உண்டு.*

---

குறிப்பு: ஒருவனுக்கு இரட்டைப் பிள்ளை பிறந்து ஜனனமானதில் ஒன்று முதல் நாளும் மற்றொன்று மறுநாளும் ஏற்படுகிற விஷயத்தில் ஸமமான தீட்டுகளில் முன்வந்த தீட்டோடு பின் வந்த தீட்டும் போய்விடுமென்கிற ந்யாயத்தால் முதல் பிறந்த சிசுவின் காலத்தை ஒட்டி தீக்ஷா நிவ்ருத்தி, தீட்டுப்போகுதல் முதலான விஷயங்களை அனுஷ்டிக்க வேண்டியது.

*32. [illegible] முதலாவது ஐட்டத்துக்கு புத்திரனாவது, அல்லது வேறு கர்த்தாவாவது செய்வதில்; புனர்தஹனம் இல்லாவிட்டாலும், கழுத்துக்கு மேல் க்ஷௌரம் செய்துகொண்டு க்ரியையை ஆரம்பிக்க வேண்டியது.*

*33. இரண்டாவது ஐட்டத்தக்கு புத்ரனல்லாது வேறு கர்த்தாவுக்கு புனர்தஹனம் இல்லாவிட்டாலும் கழுத்துக்கு மேல் க்ஷௌரம் செய்துகொண்டு க்ரியையை ஆரம்பிக்க வேண்டியது.*

*34. மூன்று, நான்கு, ஐந்து ஐட்டங்களுக்கு கழுத்துக்கு மேல் க்ஷௌரம் செய்துகொண்டு க்ரியையை ஆரம்பிக்க வேண்டியது.*

*35. 6, 7, 8வது ஐட்டங்களுக்கு ஏற்கனவே 10 நாள் அல்லது அதற்குட்பட்டு தகனமாய் இருந்தால் க்ஷௌரமில்லை. பத்து நாளுக்கு மேற்பட்டால் உண்டு.*

*36. முக்யகர்த்தாவுக்கு பலமான வ்யாதி முதலியவற்றால் முதல் நாளில் வபனம் செய்துகொள்ள முடியாவிட்டாலும், 10-வது நாளில் வபனம் செய்துகொள்ள முடியாவிட்டாலும், முதல் நாள் அக்னிப்ரதானத்திற்கே யோக்யதையில்லா விட்டாலும், யோக்யதை வந்த பிறகு 10 நாளுக்குள்பட்டால் புனஸ்ஸம்ஸ்காரம் முதல் செய்ய வேண்டியது. 10 நாளுக்கு மேல்பட்டால் 3 நாளில் எல்லாவற்றையும் செய்ய வேண்டியது.*

## 22 தீட்டுச் சேர்க்கையில்

### வபநமும் உதகதாநமும்

*1. வபனம், அல்லது உதகதானமுள்ள 3 நாள் தீட்டு மத்யத்தில் 3 நாள் உள்ள ஜனனாசௌசம் வந்தாலும், பின் சொல்லியதில் முன் சொல்லியது வந்தாலும் மரணாசௌசம் பலமானதால் மரணாசௌசத்தின் 3வது தினத்தில் வபனத்தையோ உதகதானத்தையோ செய்ய வேண்டியது.*

2. வபனமுள்ள 3 நாள் ஆசௌசமத்யத்தில் உதகதான மட்டிலுள்ள 3 நாள் ஆசௌசம் வந்தாலும், பின் சொல்லியதில் முன் சொல்லியது வந்தாலும் இரண்டு தீட்டுகளும் ஒன்றாய்ப் போய்விடுமாதலால் வபனமுள்ள ஆசௌசத்திற்கு முதலில் வபனம் செய்து கொண்டு உதகதானமுள்ள ஆசௌசத்திற்கு முதலில் வபனம் செய்துகொண்டு உதகதானமுள்ள ஆசௌசத்திற்கு உதகதானம் செய்ய வேண்டியது.

3. வபனமுள்ள 3 நாள் தீட்டுடன் அதேவிதமான தீட்டுகள் சேர்ந்தாலும், உதகதானமுள்ள 3 நாள் தீட்டுச் சேர்ந்தாலும், இரண்டு தீட்டுகளும் ஒன்றாய்ப் போய்விடுமாதலால் வபனம் ஒன்றுதான். உதகதானத்தை மட்டும் தனித்தனியே செய்ய வேண்டியது.

4. வபனமுள்ள, அல்லது உதகதானமுள்ள 3 - நாள் தீட்டு மத்யத்தில் 10 நாள் ஜனனத்தீட்டு வந்தாலும், பின் சொல்லியதில் முன் சொல்லியது வந்தாலும் மரணாசௌசத்துடன் ஜனனாசௌசமும் போய்விடும். ஆதலால் 3வது நாளில் வபனத்தையோ உதகதானத்தையோ செய்துகொள்ள வேண்டியது.

5. வபனமுள்ள அல்லது உதகதானமுள்ள 3-நாள் அல்லது 10 நாளுள்ள தீட்டுமத்யத்தில் தனக்கே சிசு பிறந்தாலும், பின் சொல்லியதில் முன் சொல்லியது நேர்ந்தாலும், கர்ப்பதீக்ஷையின் தீட்டு பலமானதால் வேறு தீட்டுக்கு க்ஷௌரமில்லை. 3, 10 நாள் தீட்டின் 3-வது 10-வது நாளிலாவது பிறப்புத் தீட்டுடன் போவதாயிருந்தால் 10-வது நாளில் உதகதானம்மட்டில் செய்துவிட்டு பிறகு கர்ப்பதீக்ஷா நிவ்ருத்தியைச் செய்துகொள்ள வேண்டியது.

6. வபனமுள்ள 3 நாள் தீட்டு மத்தியில் வபனமில்லாத அல்லது வபனமுள்ள 10 நாள் தீட்டு வந்தாலும், பின்

சொல்லியதில் முன் சொன்னது வந்தாலும் 10 நாள் தீட்டு பலமானதால் 3 நாள் தீட்டுக்கு வபனமில்லை.

7. உதகதானமுள்ள 3 நாள் தீட்டு மத்யத்தில் 10 நாள் தீட்டு வந்தாலும், பின் சொல்லியதில் முன் சொல்லியது வந்தாலும் 3-வது நாளிலாவது, 10-வது நாளோடு அதுவும் போவதாய் இருந்தால் 10-வது நாளிலாவது உதகதானம் தனித்தனியாய்ச் செய்யவேண்டியது.

8. வபனமுள்ள, அல்லது உதகதானமுள்ள 3 நாள் தீட்டு மத்யத்தில் தாய், தகப்பன் இறந்தாலும், பின் சொல்லியதில் முன் சொல்லியது நேர்ந்தாலும், 3 நாள் தீட்டிற்கு வபனம் கிடையாது. 3-வது நாளிலாவது, 10-வது நாளோடு சேர்ந்து போவதாயிருந்தால் அன்றாவது உதகதானம் தனித்தனியாய்ச் செய்ய வேண்டியது.

9. வபனமுள்ள அல்லது உதகதானமுள்ள 3 நாள் தீட்டு மத்யத்தில் பத்னி, பிள்ளை, பெண் இறந்தாலும், பின் சொல்லியதில் முன் சொன்னது வந்தாலும், கர்த்தா இவனேயானாலும், வேறு இருந்தாலும் வபனமில்லை. உதகதானம் மட்டில் முன் பாராவில் சொல்லியபடி செய்ய வேண்டியது.

10. வபனம், உதகதானமுள்ள 10 நாள் தீட்டின் மத்யத்தில் தாய், பத்னி, பிள்ளை, பெண் இறந்தாலும், பின் சொல்லியதில் முன் சொல்லியது சேர்ந்தாலும், பத்னி முதலியவர்களுக்கு இவனே கர்த்தாவாகயிருந்தாலும், வேறு கர்த்தாயிருந்தாலும் வபனம் கிடையாது. உதகதானம் மட்டில் அந்தத் தீட்டின் 10-வது நாளிலாவது, தாய், தகப்பன் வகையறா தீட்டோடு போவதாயிருந்தால் இந்த 10-வது நாளிலாவது சாந்திஹோமத்திற்குப் பிறகு தனியாய் செய்ய வேண்டியது. பத்னி வகையறா மரணத்தில் ஜ்ஞாதிமரணத்திற்கு வபனம் இல்லை.

*11. வபனம் சுத்யர்த்த மென்றும் உதககதானத்திற்கு அங்கமென்றும் சொல்லப்படுகிறது. சிலர் சுத்யர்த்தமென்று ஆசரிக்கிறார்கள். சிலர் வயதில் பெரியவர்களுக்கு மட்டில் வபனம் அனுஷ்டிக்கிறார்கள். ஆகையால் அது உதககதானாங்கமென்றாவது, சுத்யர்த்தமென்றாவது சொல்ல முடியவில்லை. ஆனாலும், மற்ற ந்யாயங்களைக்கொண்டு, சுத்யர்த்தமென்று வயதைக் கவனியாமல் வபனத்தை அனுஷ்டிக்கிறவர்களுக்கு பத்னி வகையறா மரணத்தில் ஜூாதிமரணத்திற்கு வபனமுண்டு. மற்றவர்களுக்கில்லை. பத்நியாதி மரணம் பலமானதால்.*

*12. வபனப்ரஸக்தியுள்ள 10 நாள் தீட்டு இரண்டு சேர்ந்தால் ஒரே க்ஷெளரம்.*

*13. வபனப்ரஸக்தியுள்ளதும், இல்லாததுமான 10 நாள் தீட்டுகள் இரண்டு சேர்ந்தால் வபனமுண்டு.*

*14. உதககதானப்ரஸக்தியுள்ள 10 நாள் தீட்டுக்கள் இரண்டு சேர்ந்தால், தனித்தனியாய் உதககதானம் செய்ய வேண்டியது.*

## 23. தீக்ஷையில் வபனம்

*1. தீக்ஷ என்பதால், கர்ப்பதீக்ஷ, விவாஹதீக்ஷ, உபநயனதீக்ஷ, மாத்ருதீக்ஷ, பித்ருதீக்ஷ இவைகள் சொல்லப்படுகின்றன.*

*2. கர்ப்பதீக்ஷ என்பது, பத்னி முதல் கர்ப்பமானபோது 4-வது மாஸம் முதலும், இரண்டாவது கர்ப்பத்திற்கு 5-வது மாஸம் முதலும், மற்ற கர்ப்பத்திற்கு 7-வது மாஸம் முதலும், (அதாவது 180 நாட்களுக்கு மேல்) தீக்ஷ என்றும், அப்படியே அநுஷ்டிக்கப்பட்டு வருவதாயும் தெரிந்த பெரியோர்கள் சொல்லுகிறார்கள்.*

𑌶𑌾𑌤𑌾𑌤𑌪 𑌸𑍍𑌮𑍃𑌤𑌿 𑌵𑌚𑌨𑌮𑍍:

𑌪𑌿𑌤𑍍𑌰𑍋𑌰𑍍𑌮𑌰𑌣𑍇 𑌸𑌂𑌵𑌤𑍍𑌸𑌰𑌾𑌤𑍍 𑌵𑌾𑌪𑍀𑌸𑌾𑌧𑌿𑌵𑌰𑍍𑌜𑌯𑍇𑌤𑍍 ।
𑌕𑌨𑍍𑌯𑌾𑌦𑌾𑌨𑍇 𑌮𑌹𑍇 𑌸𑌂𑌵𑌤𑍍𑌸𑌰𑌾𑌤𑍍 𑌸𑌤𑍍𑌰𑍀𑌸𑌾𑌧𑌿𑌵𑌰𑍍𑌜𑌯𑍇𑌤𑍍 ॥

3. விவாஹதீக்ஷை, உபநயனதீக்ஷை என்பது விவாஹம், உபநயனம் இவை நடந்தபின் 1 வர்ஷம் அல்லது 6 மாஸம்.

4. மாத்ருதீக்ஷை, பித்ருதீக்ஷை என்பது, மாதாபிதாக்களின் மரணத்திற்குப்பின் 1 வர்ஷம்.

5. மாத்ருதீக்ஷை, பித்ருதீக்ஷை என்ற இவ்விரண்டு சப்தங்களும், ப்ரம்ஹசர்ய கேசதாரணாதி நியமங்களுடன் கூடிய தீக்ஷையைக் கூறுகின்றன.

6. கர்ப்பதீக்ஷை, விவாஹதீக்ஷை, உபநயனதீக்ஷைகளின் நடுவில் மாதாபிதாக்களின் மரணம் ஏற்பட்டாலும், மாதாமஹன், மாதாமஹீ, பித்ருவ்யன், அவன் பத்னீ, அம்மான், அம்மாமி, ஜ்யேஷ்டப்ராதா, அவன் பத்னீ, அத்தை, மாத்ருஸஹோதரீ, பகிநீ, மாமனார், மாமியார் இவர்கள் மரணத்தில் கர்த்ருத்வமுண்டானாலும் வபனமுண்டு.

7. மாத்ரு, பித்ரு தீக்ஷையில் பத்னீ ப்ரஸவித்தால் வபனமுண்டு.

8. கர்ப்பதீக்ஷையுள்ளவனுக்கு, ஸபிண்டீகரண நிமித்தம் வபனமில்லை.

9. ஸபிண்டீகரணத்திற்குப் பிறகு தீக்ஷை ஆவச்யகமில்லை. அனுஷ்டிப்பது ச்லாக்யம். இல்லாவிட்டாலும் தோஷமில்லை. ஸபிண்டீகரணத்திற்கு முன் வேறு க்ருத்யம் செய்தால் வபனமில்லை. பின்செய்தால் தீக்ஷையை ஆசரித்தால் வபனமில்லை. இல்லாவிட்டால் உண்டு.

10. ஸந்யாஸியாகப் போனவர்களுடைய பிள்ளைகளுக்குப் பித்ருதீக்ஷை கிடையாது.

*11.* ★ வ்ருதயாஜ்ஞவிவாஹேஷு தீக்ஷாக்ஷணாதித்ருதீயே ।
சதுர்யாதி விவாஹேஷு தீக்ஷாக்ஷணம் ந வித்யதே ॥
என்ற இந்த வசனப்படி இரண்டாவது முதலான விவாஹங்களுக்கு விவாஹதீக்ஷை இல்லை என்றும், இவ்வசனம் பழைய கோஶங்களில் இருப்பதாயும் சிலர் சொல்லுகிறார்கள்.

## 24. ஸம்ஸ்காரத்தினால் அதிகத் தீட்டு

*1.* தத்தனாய்ப் போனவன், தன் ஜனகமாதா, ஜனக பிதா இவர்களுக்கும், தௌஹித்ரன் தன்மாதாமஹன், மாதாமஹீ இவர்களுக்கும், ஸமானோதகன் தன்ஸமானோதகனுக்கும் கர்த்தாவாக இருந்தால் 10 நாள் ஆசௌசமுண்டு.

*2.* ஜ்ஞாதியல்லாத ஒருவனுக்கு கர்த்தா வேறொருவனிருக்கும்போது, மற்றொருவன் தஹனம் செய்தால் ஷாஹனுக்கு 3 நாள் ஆசௌசமுண்டு. கர்த்தா வந்துவிட்டால் உடனே தீட்டுப்போய்விடும். ஸஞ்சயனத்திற்குப் பிறகு வந்தால் 10 நாள் ஆசௌசமுண்டு. ஆசௌச்யன்ன போஜனம் செய்தால் உதகதானமுமுண்டு.

*3.* பக்ஷிண்யாசௌசக்காரன் தஹனம் செய்த பிறகு கர்த்தா வந்தால், ஷாஹகனுக்கு 3 நாள் ஆசௌசம். ஸஞ்சயனத்திற்குப் பிறகு வந்தால் 10 நாள் ஆசௌசமும், உதகதானமுமுண்டு.

*4.* 3 நாள் தீட்டுள்ள ஸமானோதகன் தஹனம் செய்தால், கர்த்தா ஸஞ்சயனத்திற்கு முன் வந்தாலும், பின் வந்தாலும் 10 நாள் ஆசௌசமும், உதகதானமுமுண்டு.

*5.* ஸபிண்டன், கர்த்தாவாயிருக்கும்பக்ஷத்தில், 10 நாட்களுக்கு மேற்பட்டால் புனர்தஹனம் முதல் செய்து

---

★ இவ்விஷயம் மூலக்ரந்தத்திலில்லை.

தனக்குத் தீட்டிருக்கிற வரையில் பிண்டோதகதானம் செய்து, தீட்டுப் போகிற தினத்தில் ஏகோத்திஷ்டத்தையும், மறுநாள் ஸபிண்டீகரணத்தையும் செய்ய வேண்டியது.

6. ஒரு வர்ஷத்திற்குப் பிறகு கேட்டால் ஒரே நாளில் புனர்தஹனம், பிண்டதானம், உதகதானம் இவைகளைச் செய்து, மறுநாளில் ஏகோத்திஷ்டத்தையும், 3-வது நாளில் ஸபிண்டீகரணத்தையும் செய்ய வேண்டியது.

## 25. 𑌆𑌦𑍍𑌯𑌶𑍍𑌰𑌾𑌦𑍍𑌧𑌂

1. இறந்ததினம் முதல் 11-வது நாளில் ஆத்யச்ராத்தம் செய்யவேண்டியது. விக்னம் ஏற்பட்டால், 12, 23, 27-வது நாட்களில் பிண்டோதகதானத்தை மறுபடி செய்து ஊனமாஸிகத்திற்கு முன் செய்யவேண்டியது. வேறு ஆசௌசம் வந்தால், அதன் நிவ்ருத்திக்குப் பிறகு ஆவ்ருத்தாத்யத்தைச் செய்யவேண்டியது.

2. பிதாவின் க்ருத்யமத்யத்தில், மாதாவுக்கு அல்லது இதரர்களுக்கு மரணம் நேர்ந்தாலும், அந்தந்த 11-வது தினத்தில் ஆத்யத்தையும், ஆசௌசம் போனபிறகு ஆவ்ருத்தாத்யத்தையும் செய்ய வேண்டியது.

3. 11-வது தினத்தில், ஸங்கடம் நேர்ந்துவிட்டால் ஆவ்ருத்தாத்யத்தைப் பிறகு நாள் பார்த்துச் செய்ய வேண்டியது.

4. ஆவ்ருத்தாத்யத்தை ஸபிண்டீகரணத்திற்குப் பிறகு செய்யக்கூடாது. ஆனால், மலமாஸத்திலிறந்தால், ஸபிண்டீகரணத்திற்குப் பிறகு, சுத்தமான ம்ருததிதியில் ஆவ்ருத்தாத்யத்தைச் செய்யவேண்டியது.

5. ஆத்யச்ராத்தம் 11-வது நாளில் செய்யப்படாவிட்டால், ஸஞ்சயனமாகாமலிருந்தால், புனர்தஹனம் முதல் பிண்டோதகதானம் முதலிய யாவற்றையும் செய்து, ஆத்யம்

செய்ய வேண்டியது. ஸஞ்சயனம் செய்யப்பட்டிருந்தால் பிண்டோதகதானம் முதல் யாவற்றையும் செய்து ஆத்யத்தைச் செய்ய வேண்டியது.

6. பதினோறாவது நாளில் வ்ருஷோத்ஸர்ஜனத்தை பகலின் முதல் பாகத்திலாவது நடுப்பகலிலாவது செய்ய வேண்டியது. வ்ருஷபமானது, ஒன்று அல்லது இரண்டு வயதுள்ளதாய் இருக்க வேண்டும். கூ காளையானது உடம்பு சிகப்பாகவும், முகமும் முதுகும் சாம்பல் நிறமாயும், குளம்பும் கொம்பும் வெள்ளை நிறமாகவும் இருக்க வேண்டியது. இப்படிக் கிடைக்கா விட்டால் கருப்பு அல்லது சிவப்பு, அல்லது எந்த நிறமாயிருந்தாலும் இருக்கலாம். அதனுடைய பின் வலது காலின் அடியில் தனக்கு இஷ்டமான தேவதையினுடைய அடையாளத்தை மஞ்சளினால் செய்ய வேண்டியது. பர்த்தா, புத்ரன், இருவரையும் உடைய ஸ்திரீ விஷயத்தில் தனி வ்ருஷபத்தை விடாமல் பசுவுடன் கூட விடவேண்டும். புத்ரனில்லாத ஸ்த்ரீ பர்த்தாவின் எதிரில் மரித்தால் வ்ருஷபோ த்ஸர்ஜனம் செய்ய வேண்டியதில்லை. ஒரு பசுவை தானம் செய்யவேண்டியது. ஸ்த்ரீக்கு பர்த்தா வ்ருஷோத்ஸர்ஜனம் செய்யக்கூடாது.

7. காம்யவ்ருஷோத்ஸர்ஜனத்தில் நாந்தீச்ராத்தம் செய்ய வேண்டியது.

8. பதினோறாவது நாளில் செய்யப்படும் ஏகோத்திஷ்டத்திற்கு காலதோஷம் பார்க்க வேண்டியதில்லை.

9. பதினோறாம் நாளில் ஶூத்ரம் செய்யாவிட்டால் ஸஞ்சயனமாயிருந்தால் பிண்டம், உதகம் இவைகளை மட்டும் மறுபடியும் செய்யவேண்டும். ஸஞ்சயனம் செய்யாமலிருந்தால் மறுபடியும் ஸம்ஸ்காரம் முதல் செய்யவேண்டும். பத்து நாளைக்குள் வேறு தீட்டு வந்தாலும் ஏகோத்திஷ்டத்தைச் செய்தே தீரவேண்டும். ஆவ்ருத்தாத்யத்தைத் தீட்டுப்போன பின் செய்ய வேண்டும்.

*10.* ஆவ்ருத்தாத்யத்தையும் பதினோறாவது நாளில் செய்ய வேண்டியது. செய்யத் தடைப்பட்டால் பனிரண்டாவது நாள் முதலான காலாந்தரத்தில் ஊனமாஸிகத்திற்குள் செய்ய வேண்டியது. இப்படிச் செய்யப்படுவதில் ப்ரதமை, ஷஷ்டி, ஏகாதசி, சதுர்தசி, ஜன்மானுஜன்மம், த்ரிஜன்மம், வெள்ளிக்கிழமை இவைகளில் செய்யக்கூடாது. ஏகோத்திஷ்டத்திற்கு விஹிதகாலம் மாத்யான்ஹிக காலம்.

*11.* ஏகோத்திஷ்டத்தில் விச்வேதேவஸ்தானமில்லை. அர்க்யம் இல்லை. *1* தர்ப்ப பவித்ரம். ஆவாஹனம் இல்லை. அந்நௌகரணமில்லை. ஒரு பிண்டம், நமஸ்காரம் கிடையாது.

*12.* ப்ரேதநிமித்தமான ப்ராஹ்மணனை மேற்கு முகமாக உட்கார வைக்க வேண்டியது. பதினோறாம் நாள் ஷோடசம் செய்தபின் பனிரண்டாவது நாள் ஸபிண்டீகரணம் செய்யப்படாவிட்டால் ஸபிண்டீகரணம் செய்யும் முன்னிலைக்கு மறுபடியும் ஷோடசம் செய்ய வேண்டியது.

## 26. ஸபிண்டீகரணம் ॥

*1.* மரணதினம் முதல் *12*-வது நாளில் முக்யகர்த்தா ஸ்பிண்டீகரணத்தைச் செய்ய வேண்டியது.

*2.* மாதாபிதாக்களைத் தவிர, மற்றவர்கள் விஷயத்தில் *12*-வது தினங்கூட நாள் பார்த்துச் செய்ய வேண்டியது.

*3. 12*-வது நாளில் செய்யாவிட்டால் *12*-வது நாள் முதல் *17*-வது நாள் வரையிலாவது, *23*-வது நாள், த்ரிபக்ஷம், *3, 4, 6, 11*-வது மாஸங்கள், வத்ஸராந்தம் இவைகளிலாவது செய்ய வேண்டியது.

*4.* மாதாபிதாக்களின் விஷயத்தில் *12*-வது நாள் முதல் *17*-வது நாள் வரையிலும் நாள் பார்க்க வேண்டியதில்லை. பிறகு நாள் பார்த்தே செய்ய வேண்டியது.

5. ஜன்மநக்ஷத்ரம், த்ரிபத (வண்ட) நக்ஷத்ரம், ஞாயிறு, செவ்வாய், வியாழன், வெள்ளி, சனி, சதுர்தசி இவைகள் கூடாது.

6. ரோஹிணி, திருவாதிரை, கேட்டை, அனுஷம், ஹஸ்தம் இவைகள் சிலாக்யம். கர்த்தாவின் நக்ஷத்திரத்திற்குப் பொருத்தம் பார்த்தே செய்ய வேண்டியது.

7. ஒருவனுக்கு அனேக பார்யைகளிருந்தால் மூத்தவளே ஸபிண்டீகரணத்தைச் செய்ய வேண்டியது. அநேகம் பிள்ளைகளிருந்தால் மூத்தவனே செய்ய வேண்டியது. மூத்தவன் விதுரனாயிருந்தால் அவனுக்கு அடுத்த ஸாக்நிகன் (பெண் ஜாதியுள்ளவன்) செய்ய வேண்டியது. மூத்தவன் பிறகு விவாஹம் செய்துகொண்டு ஸாக்நிகனாயானால் அவன் மறுபடி ஸபிண்டீகரணத்தை பார்வணவிதியாய்ச் செய்ய வேண்டியது.

8. 12 வயது முடியாத ப்ரம்ஹசாரிக்கு ஸபிண்டீகரணமில்லை. நாராயணபலி மட்டுந்தான். ஆப்திக, ப்ரத்யாப்திகங்கள் கிடையாது.

9. அனுபநீதன், அனூடா இவர்களுக்கு ஸபிண்டீகரணாதிகள் இல்லை.

10. விவாஹமானவர்களுக்கு எவ்வளவு வயதாயிருந்தாலும் ஸபிண்டீகரணாதிகளுண்டு.

11. 3 நாளாசௌசமுள்ள ஸமானோதகன், தௌஹித்ரன், தத்தன், பாகிநேயன் முதலியவர்கள் கர்த்தாவாக ஆனால், 10 நாளாசௌசமனுஷ்டித்து 12-வது நாளில் ஸபிண்டீகரணத்தைச் செய்ய வேண்டியது.

12. பக்ஷிண்யாசௌசமுள்ளவர்கள் கர்த்தாவாக ஆனால் 3 நாளாசௌசமனுஷ்டித்து 4-வது நாளில் ஏகோத்திஷ்டத்தையும், 5-வது நாளில் ஸபிண்டீகரணத்தையும் செய்ய வேண்டியது.

13. பந்துக்கள் கர்த்தாவானால் 3-வது நாளில் ஏகாத்திஷ்டத்தையும், 4-வது நாளில் ஸபிண்டீகரணத்தையும் செய்ய வேண்டியது.

14. பிதாவின் தசாஹமத்யத்தில் மாதா இறந்தால் பிதாவின் ஸபிண்டீகரணத்தை த்ரிபக்ஷாதிகாலத்தில் செய்ய வேண்டியது. மாதாவின் தசாஹமத்யத்தில் பிதா இறந்தால் மாதாவின் ஸபிண்டீகரணத்தை த்ரிபக்ஷாதி காலத்தில் செய்ய வேண்டியது.

15. மாதா பிதாக்கள் இறந்த வர்ஷத்தில் வேறொருவருக்கும் ஸபிண்டீகரணத்தைச் செய்யக்கூடாது. ஆனால், 1. பத்னி, 2. புத்ரன். 3. பௌத்ரன், 4. ப்ராதா, 5. ப்ராத்ரு புத்ரன், 6. நாட்டுப்பெண், 7. ஸஹோதரீ இந்த ஏழுபேர்களும், மாதா பிதாக்களின் ஸபிண்டீகரணத்திற்கு முன் இறந்தால் த்ரிபக்ஷாதி காலத்திலும், பின் இறந்தால் அததின் 12-வது நாளிலும் ஸபிண்டீகரணத்தை லௌகிகாக்நியில் செய்ய வேண்டியது. 1. தாய், 2. தகப்பன், (ஜனகமாதா ஜனகபிதா) 3. ஸபத்னீமாதா, 4. பிதாமஹன், 5. பிதாமஹீ, 6. மாதாமஹன், 7. மாதாமஹீ, 8. அம்மான், 9. சிறிய தகப்பன், பெரிய தகப்பன், 10. ஸீமந்தஜனாகிய தமயன் இவர்களுக்கு ஸபிண்டீகரணத்தை ஔபாஸநாக்னியில் செய்ய வேண்டியது.

16. மாதாபிதாக்களுக்கு ஸபிண்டீகரண ஹோமத்தை ஔபாஸநாக்நியில் செய்ய வேண்டியது ஆவச்யகம். கர்த்தா அக்நிவானாக இல்லாவிட்டால் அவனுடைய அக்நியிலேயே செய்ய வேண்டியது. அநேகம் ப்ராதாக்களிலிருந்து மூத்தவன் அனக்நிகனாயிருந்தால் அவனுக்கடுத்த அக்நிவான் செய்ய வேண்டியது. மூத்தவனுக்கு பத்னி அனுகூலையாயில்லாமல் ப்ரதிகூலையாயிருந்தால், வர்ஷ முடிவு வரையில் ஸபிண்டீகரணத்திற்குக் காலமிருப்பதால் அதுவரையில் ப்ரதீக்ஷிக்க வேண்டும். அப்போதும் ப்ரதிகூலையாயிருந்தால்

அடுத்த அக்நிவான் செய்யவேண்டியது. ப்ராதாக்களில்லாதவன் 12-வது நாளில் யதாசக்தி க்ருச்ரங்களால் ஆத்மசுத்தி செய்து கொண்டு பத்னிக்கு ப்ரதிநிதி செய்துகொண்டு ஸபிண்டீகரணத்தைச் செய்ய வேண்டியது.

17. பத்நி அனுகூலையாயிருந்து புருஷன் நிஷ்காரணமாய் ப்ரதிகூலனாயிருந்தால் அதற்கு யாதொரு விதானமுமில்லை. இவ்விதம் பெரியோர்கள் சொல்லுகிறார்கள். அவன் ஸபிண்டீகரணம் செய்ய அர்ஹனல்ல.

18. கர்த்தாவுக்கு அநேகம் பத்னிகள் இருந்தால், அக்நி ஸம்ஸர்க்கம் செய்யப்பட்டிருந்தால் எந்த பத்னியைக் கொண்டாவது ஔபாஸனாரம்பம் செய்துகொண்டு ஸபிண்டீகரணத்தைச் செய்யலாம். அக்நிஸம்ஸர்க்கமாகாத பக்ஷத்தில் மூத்தவளை வைத்துக்கொண்டு செய்ய வேண்டியது. அவள் ப்ரதிகூலையாயிருந்தால் முன் பாராவில் சொல்லியபடி செய்ய வேண்டியது.

19. ஸபிண்டீகரணத்தில் ஷட்பிண்டிகளுக்கு ஹோமம், வரணம் முதலிய விஷயங்களைக் காட்டும் பட்டிகை ஒன்று இதன் கடைசியில் சேர்க்கப்பட்டிருக்கிறது. அதன்படி அநுஷ்டிக்க வேண்டியது.

20. விஷ்ணுவரணமில்லாமல் ஸபிண்டீகரணத்தைச் செய்யவேகூடாது. விஷ்ணுவரணமில்லாமல் ச்ராத்தம் செய்கிற சிலர், ஸபிண்டீகரணத்தில் விஷ்ணுவரணம் செய்தால் ஆப்திக ப்ரத்யாப்திகங்களிலும் அது ஆவச்யகமென்று தப்பெண்ணங்கொண்டு விஷ்ணுவரணமில்லாமல் ஸபிண்டீகரணம் செய்கிறார்கள். அது யுக்தமல்ல. ஸபிண்டீகரணத்திற்கும் ஆப்திக ப்ரத்யாப்திகங்களுக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை. தவிர, ஒரு தடவை விஷ்ணுவரணத்துடனோ, விஷ்ணுவரணமில்லாமலோ, ச்ராத்தம் செய்தால் எப்போதும் அதே விதம் செய்ய

வேண்டுமென்ற நியமமில்லை. தேசகால, தனங்களை அநுஸரித்து மாற்றிச் செய்வதினால் லோபமில்லையென்பது பெரியோர்களின் அபிப்ராயம்.

*21.* தாய் தகப்பன் தவிர, மற்றவர்களுக்கு செவ்வாய், வியாழன், வெள்ளி, சதுர்தசி இவைகளில் ஸபிண்டீகரணம் செய்யக்கூடாது. ஜன்மநக்ஷத்ரம், த்ரிபாதநக்ஷத்ரம், சனி, ஞாயிறு இவைகளில் செய்யக்கூடாது.

*22.* கர்த்தாவானவன் ஸ்பிண்டீகரணத்திற்கு முன் சுப கார்யத்தைச் செய்யக்கூடாது.

*23.* ப்ரஷ்டன், ப்ரஷ்டை இவர்களுக்கு ஸபிண்டீகரணம் செய்யக்கூடாது. நாராயணபலியைத்தான் செய்ய வேண்டியது.

*24.* அக்ரமமாக இறந்தவர்களில் மாதா, பிதா, பர்த்தா, பத்நி இவர்களைத் தவிர மற்றவர்களுக்கு ஸபிண்டீகரணம் செய்யக்கூடாது. மேலே கண்டவர்களுக்கு ஆமத்தினாலாவது, ஹிரண்யத்தினாலாவது ஸபிண்டீகரணம் செய்யலாம்.

*25.* ஸபிண்டீகரணத்தில் காலலம்ப 3 குண்டங்கள் வெட்ட வேண்டும். இரும்பினால் வெட்டக்கூடாது. வடபுரத்துக் குண்டத்தை சதுரமாகவும், நடுக்குண்டத்தை முக்கோணமாகவும், தென்புரத்துக் குண்டத்தை வட்டமாக யானையடி மாதிரியாகவும் வெட்ட வேண்டியது. அகலம் எவ்வளவோ அதில் அரை வரிசை ஆழமிருக்க வேண்டியது. விச்வேதேவ ப்ராம்ஹணனை கிழக்கு முகமாகவும், பிதாமஹ பிராம்ஹணனை வடக்கு முகமாகவும், ப்ரேதநிமித்த ப்ராம்ஹணனை மேற்கு முகமாகவும் உட்கார வைக்க வேண்டியது.

**𑌸𑌪𑌿𑌣𑍍𑌡𑍀𑌕𑌰𑌣𑍇 𑌦𑌾𑌹𑍇 𑌸𑌦𑍍𑌯 𑌤𑌦𑍍𑌗𑍍𑌰𑌾𑌮𑌵𑌾𑌸𑌿𑌨𑌾𑌂 ।**

**𑌶𑍍𑌵𑌃 𑌪𑍍𑌰𑌾𑌤𑍇 𑌨 𑌗𑌨𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 𑌗𑍍𑌰𑌾𑌮𑌾𑌨𑍍𑌤𑌰𑌂 𑌬𑍁𑌧𑍈𑌃 ॥**

தஹனம், ஸபிண்டீகரணம் இந்த தினங்களிலும் மறுநாட் காலையிலும், அந்த கிராமவாஸிகள் ப்ரயாணம் போகக்கூடாது.

## 27. த்வாதச ச்ரவணர்களின் பெயர்கள்

| | | | |
|---|---|---|---|
| தர்மராயண: | ௧ | தநாத்யக்ஷ: | ௨ |
| தர்மராஜ: | ௩ | தநஞ்ஜய: | ௪ |
| தர்மபுத்ர: | ௫ | தர்மஜீவ: | ௬ |
| தர்மஜ்ஞ: | ௭ | தர்மநந்தந: | ௮ |
| நீதிஶாஸ்த்ர: | ௯ | அதர்மவாரக: | ௧௦ |
| ஸத்யவாந் | ௧௧ | ஜ்ஞாநமோஹந: | ௧௨ |

---

## 28. வத்ஸராந்த ஸபிண்டீகரணவிஷயே மாஸிகாதி ஹோமஜப காயத்ரீஜப ஸங்க்யா ॥

த்ரைபக்ஷிகே த்ரிஸாஹஸ்ரம் த்விஸாஹஸ்ரம் து மாஸிகே ।
ஸம்வத்ஸரவிமோகே ச ஸஹஸ்ரம் நியதோ ஜபேத் ॥
ஸோதகும்பே து ஸாஹஸ்ரமேவம் ஷாண்மாஸிகேஷு ச ।
உத்க்ராந்திவைதரண்யோஶ்ச லக்ஷம் காயத்ர்யா: ப்ரதிக்ரஹே ॥

த்ரைபக்ஷித்தில், (நாற்பத்தைந்தாம் நாள்) ஊநமாஸிகத்தில் மூவாயிரம் காயத்ரியும், மாஸிகத்தில் இரண்டாயிரம் காயத்ரியும், ஸோதகும்பத்தில் ஆயிரமும், ஆறாம்மாத ஊநமாஸிகத்தில் ஆயிரம் காயத்ரியும், வத்ஸராந்த ஸபிண்டீகரணத்தில் ஆயிரம் காயத்ரியும், உத்க்ராந்தி, வைதரணியில் ப்ரதிக்ரஹம் வாங்கினதற்கு லக்ஷம் காயத்ரியும் தோஷ நிவர்த்திக்கு ப்ராயச்சித்தமாக ஜபிக்க வேண்டியது.

## 29. ஸொாஉகூ°ஂஹ ॥

*1. மரணதினம் முதல் 12-வது நாளில் துவக்க ஆப்திகம் வரையில் மாஸிகோநமாஸிகதினங்கள் தவிர, ப்ரதி தினமும் ஸோதகும்பச்ராத்தம் செய்ய வேண்டியது. அல்லது, மாஸிகதினத்திற்கு முன் தினத்தில் செய்ய வேண்டியது.*

*2. ப்ரதிதினம் செய்யும் விஷயத்தில் காரணவசத்தால் நின்றுபோன ஸோதகும்பத்தை மறுநாளில் சேர்த்துச் செய்ய வேண்டியது.*

*3. மாஸத்திற்கொரு தடவை செய்யும் விஷயத்தில் நின்றுபோனால் அதற்கு வேறு காலமில்லை.*

*4. ஸபிண்டீகரணத்திற்கு முன் செய்யப்படும் ஸோத கும்பங்களில் ஏகோத்திஷ்டமாக (ப்ரேதவரணமாக) வரணம் செய்ய வேண்டியது.*

## 30. ஊநமாஸிகம்

*1. ஊநமாஸிகங்களை நாள் பார்த்து விஹிதகாலத்தில் செய்ய வேண்டியது.*

*2. 27-வது நாளுக்கு மேல் 30 நாட்களுக்குள்ளும், 40 நாட்களுக்கு மேல் 45 நாட்களுக்குள்ளும், 170 நாட்களுக்கு மேல் 180 நாட்களுக்குள்ளும், 340 நாட்களுக்கு மேல் 355 நாட்களுக்குள்ளும், ஊநமாஸிகங்களைச் செய்ய வேண்டியது. அந்தந்தக் காலங்களில் செய்யத் தவறினால் வேறு காலம் கிடையாது.*

*3. வெள்ளிக்கிழமை, நந்தா, (ப்ரதமா, ஷஷ்டீ, ஏகாதசீ)*
த்ரிபுஷ்கரம், பரிஞீவாஸ், ஊஶ்ர, க்ருத்திகா, ஆர்த்ரா,
,உத்தரபல்குநீ ,ஜ்யேஷ்டா, விசாகா, உத்தராஷாடா,
உத்தரபத்ரபதா, ,பூர்வாஷாடா ,பூர்வபத்ரா ,

இவைகளை செய்யக்கூடாது. த்விதீயா, ஸப்தமீ, த்வாதஶீ, என்ற பத்ராதிதிகள் ஞாயிறு, செவ்வாய், சனி இம்மூன்று வாரங்கள் க்ருத்திகா, புனர்வஸு, உத்தரபல்குனீ, விஶாகா, உத்தராஷாடா, பூர்வப்ரோஷ்டபதா, இந்த த்ரிபாத நக்ஷத்ரங்கள் இவைகளுள் மூன்று சேர்ந்தால் த்ரிபுஷ்கரம் இரண்டு சேர்ந்தால் த்விபுஷ்கரம் ॥

4. தோஷமற்ற காலம் கிடைக்காவிட்டால் அந்தந்த காலங்களின் கடைசி தினத்தில் செய்ய வேண்டியது.

5. ஊநமாஸிகங்கள் நாள் கணக்கின் பேரில் ஏற்படுவதால் அவைகட்கு மலமாஸாதி தோஷங்களில்லை.

6. ஊநமாஸிகங்களை நாள் கணக்கின் பேரில் செய்ய வேண்டுமே தவிர, இந்த மாஸிகத்திற்குப் பின், இந்த மாஸிகத்திற்கு முன் என்கிற நியமமில்லை.

## 31. மாஸிகம் ॥

1. மாஸிகத்தை மாதந்தோறும் இறந்த திதியிற் செய்ய வேண்டியது.

2. ஸபிண்டீகரணத்திற்கு முன் செய்யும் மாஸிகங்களை ஏகோத்திஷ்டமாகவும், பின் செய்யும் மாஸிகங்களைப் பார்வணமாகவும் (ச்ராத்தம் போலவும்) செய்ய வேண்டியது.

3. தீட்டினால் நின்றுபோன மாஸிகத்தை தீட்டுப் போகிற தினத்திலேயே செய்ய வேண்டியது. ஸபிண்டீகரணத்திற்கு முன் ஏகோத்திஷ்டமாகச் செய்யும் மாஸிகத்தை அடுத்த மாஸிகதக்துடன் சேர்த்துச் செய்தாலும் செய்யலாம்.

4. மலமாஸத்தில் மரித்தவர்களுக்கு 11-வது நாளில் ஆத்யம் செய்து, சுத்த மாஸத்தில் ஆவ்ருத்தாத்யமும் ஊனமாஸிகமும் செய்து, பிறகு 2-வது மாஸத்தில் வருகிற திதியில் த்விதீயானுமாஸிகம் செய்ய வேண்டியது.

5. ஆப்திகம் மலமாஸத்தில் வந்தால் அதிலேயே செய்ய வேண்டியது.

6. ஒரு மாஸத்தில் 2 திதிகளிலிருந்து சூன்யதிதியான முதல் திதியில் இறந்தவனுக்கு, அதே மாஸத்தில் பின்வரும் திதியில் அதிக த்விதீயானுமாஸிகமென்று மாஸிகம் செய்ய வேண்டும், விடக்கூடாது.

7. ஒரு மாஸத்தில் திதியே இல்லாவிட்டால் முந்திய மாஸத்தின் திதியில் சேர்த்துச் செய்யவேண்டியது. உதாஹரணம்: மார்கழி மாஸத்தில் திதியே இல்லாமல் கார்த்திகை மாஸக் கடைசியில் 'வருச்சிகசாப சுக்லபஞ்சமீ திதி' என்று பஞ்சாங்கங்களால் தெரிந்து இரண்டு மாதத்திய திதி ச்ராத்தங்களும் செய்யப்பட்டு வருகின்றனவல்லவா? அதுபோன்ற திதியில் ஒருவனிறந்தால் அவனுக்கு வ்ருச்சிக சுக்லபஞ்சமீ திதிதான் ம்ருததிதி. மார்கழி மாஸத்தில் சுக்லபஞ்சமீ திதியில்லாததால் த்விதீய மாஸிகத்தை 11-வது நாளில் ஆத்யம் செய்தபின் ஆவ்ருத்தாத்யம் செய்யும்போது இரண்டு ப்ராம்ஹணர்களை வைத்து ஆவ்ருத்தாத்யத்திற்கென்றும், த்விதீயமாஸிகத்திற்கென்றும் தனித்தனியாய் ஏகோத்திஷ்டமாய் வரணம் செய்து ஆவ்ருத்தாத்யத்துடன் செய்ய வேண்டியது.

8. இறந்த வர்ஷத்தின் மத்தியில் முன் கூறியபடி திதி வந்தால் இரண்டு மாஸத்திய மாஸிகங்களையும், சேர்த்துச் செய்யவேண்டியது. 12-வது மாஸிகமும், ஆப்திகமும் சேர்ந்துவிட்டால் ஆப்திகத்தை மட்டும் செய்ய வேண்டியது.

9. ஸ்பிண்டீகரணத்திற்கு முன் ஷோடச ச்ராத்தங்களுக்கு ஸங்கல்பம் செய்யும்போதே அந்த வர்ஷத்திலும் அடுத்த வர்ஷத்திலும் திதிகளைப் பார்த்து மாஸிகங்களும், ஊநமாஸிகங்களும் எந்த வரிசையாக வருமோ, அவ்விதம் ஸங்கல்பம் செய்வதுடன், அதிகமாஸமிருந்தால் அதற்காக

மாஸிகத்தையும் சேர்த்துக்கொண்டு, கணக்கின்படி ப்ராம்ஹணர்களை ஏற்படுத்துவது ச்லாக்யம். தெரிந்து கொள்ள முடியாத பக்ஷத்தில் எப்படிச் செய்தாலும் பாதகமில்லை.

*10.* ஸபிண்டீகரணத்திற்கு முன் ஏகோத்திஷ்டமாகச் செய்து முடிந்துபோன மாஸிகங்களை நீக்கி, மற்றைய மாஸிகங்களை ஷோடசத்தில் சேர்க்க வேண்டியது.

*11.* மாஸிகாதிகளை சுபகார்யங்களுக்குமுன் ஆகர்ஷித்துச் செய்யவேண்டியது. சுபத்திற்குப் பிறகு க்ஷ மாஸிகங்களை அதததற்கேற்பட்ட காலங்களில் மறுபடியும் செய்ய வேண்டியதில்லை. ஆனால் மாதா, பிதா விஷயத்தில் *2, 3* தடவைகளில் மறுபடியும் அததன் காலங்களில் செய்ய வேண்டியது. ஸஹோதரன் முதலான அன்பர்களின் சுபத்திற்காக அபகர்ஷம் செய்யக்கூடாது. கர்த்தாவுக்கு மட்டில்தான் இந்த விதி.

## 32. த்ரிபுருஷோத்தேச ச்ராத்தமும், ஏகபுருஷோத்தேச ச்ராத்தமும்

*1.* பிதா, மாதா, ஸபத்நீ மாதா, பிதாமஹன், பிதாமஹீ, ப்ரபிதாமஹன், ப்ரபிதாமஹீ, மாதாமஹன், மாதாமஹீ, பத்நீ, பித்ருவ்யன், ஜ்யேஷ்டப்ராதா, ஜனகபிதா, ஜனகமாதா இவர்களுக்கு ச்ராத்தம் த்ரிபுருஷோத்தேச்யகமாய்ச் செய்ய வேண்டியது. மற்றவர்களுக்கானால் ஏகோத்தேச்யகமாய்ச் செய்ய வேண்டியது.

*2.* ஸ்த்ரீகள் செய்யும் ச்ராத்தங்களில் மாமனார், மாமியார், தாய், தந்தை, பர்த்தா, மச்சினன், பிதாமஹன், பிதாமஹீ, ப்ரபிதாமஹன், ப்ரபிதாமஹீ இவர்கள் ச்ராத்தங்கள் மட்டும் த்ரிபுருஷோத்தேச்யகம். மற்றவை ஏகோத்தேச்யகம்.

# 33. ஹோமமுள்ள ச்ராத்தங்களும், ஹோமமில்லாதவைகளும்

*1. பிதா, மாதா, ஸபத்நீ மாதா, பிதாமஹன், பிதாமஹீ, ப்ரபிதாமஹன், ப்ரபிதாமஹீ, ஸீமந்தஜ ஜ்யேஷ்டன், மாதாமஹன், மாதாமஹீ, பித்ருவ்யன், ஜனகபிதா, ஜனகமாதா இவர்கள் ச்ராத்தத்தில் ஹோமமுண்டு. மற்றவர்கள் ச்ராத்தத்தில் ஹோமமில்லை.*

*2. ஸ்த்ரீகள் செய்யும் ச்ராத்தங்களெல்லாவற்றிற்கும் ஹோமம் கிடையாது.*

# 34. ச்ராத்தம்

*1. ச்ராத்தம் என்பது அந்நச்ராத்தம் ஆமச்ராத்தம் ஹேமச்ராத்தம் இவற்றைக் குறிக்கும்.*

*2. தாய், தகப்பன் இவர்கள் ச்ராத்தங்கள் ஒரே திதியிலிருந்தாலும், திதித்வயத்தால் ஒரே தினத்தில் வந்தாலும் ஆசௌசத்தால் நின்று தீட்டுப்போகும் தினத்தில் சேர்ந்தாலும், ஒரே பாகத்தில் பிதாவின் ச்ராத்தத்தை முந்தியும், மாதாவின் ச்ராத்தத்தைப் பிந்தியும் செய்ய வேண்டியது.*

*3. தகப்பன், ஸபத்நீமாதா இவர்களின் ச்ராத்தங்கள் முன்சொல்லிய காரணங்களால் ஒன்று சேர்ந்தால் பிதாவினதை முன் செய்துவிட்டு, பின்பு வேறுபாகத்தில் ஸபத்நீ மாதாவின் ச்ராத்தத்தைச் செய்யவேண்டியது.*

*4. ஆப்திகமும், மாஸிகமும் ஒன்று சேர்ந்தால், ஆப்திகத்தை முந்தியும் மாஸிகத்தைப் பிந்தியும், வெவ்வேறு பாகங்களிற் செய்ய வேண்டியது.*

5. *பார்வணமும், + ஏகோத்திஷ்டமும் ஒன்று சேர்ந்தால், பார்வணத்தை முந்தியும் ஏகோத்திஷ்டத்தைப் பிந்தியுமாக வெவ்வேறு பாகங்களில் செய்ய வேண்டியது.

6. அனேக ச்ராத்தங்கள் ஒன்று சேர்ந்தால் தகப்பன், தாய், ஸபத்நீ மாதா, ப்ராதா இந்த வரிசையாய்ச் செய்ய வேண்டியது.

7. மாதாபிதாக்களுக்கு க்ருத்யம் செய்து கொண்டிருக்கும் போது க்ஷயார்களின் ஆசௌசத்தால் நின்றுபோன ச்ராத்தத்தை ஸபிண்டீகரணத்திற்குப் பிறகு செய்யவேண்டியது. 'மாதா பித்ரு வ்யத்ரிக்த க்ருத்ய' விஷயத்தில் அந்தரிதமான ச்ராத்தத்தை ஆத்யச்ராத்தமான பிறகு செய்யவேண்டியது.

8. மாதாபிதாக்களின் ஸபிண்டீகரணத்திற்கு முன் இதரர்களின் ச்ராத்தத்தைச் செய்யக்கூடாது. அன்யர்களின் ஸபிண்டீ கரணத்துக்கு முன் மாதாபிதாக்களின் ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். மாதாபிதாக்களின் ஸபிண்டீகரணம் காரண வசத்தால் தாமதித்தால் 12-வது நாளில் இதரர்களின் ச்ராத்தத்தைச் செய்துவிடலாம்.

9. ஒருவன் ஒரே நாளில் (ஷண்ணவதி ச்ராத்தங்கள் தவிர) 3 ச்ராத்தங்களைச் செய்யக்கூடாது. செய்யும்படி நேர்ந்தால் 2 ச்ராத்தங்களை தான் செய்துவிட்டு, மற்றொன்றை ஸஹோதரனால் செய்விக்க வேண்டியது. ஸஹோதரன் இல்லாவிடில் தானே மறுநாளிற் செய்யவேண்டியது.

10. ஒருவன் ஒரே நாளில் ஒரே தேவதையை உத்தேசித்து இரண்டு ச்ராத்தங்கள் செய்யக்கூடாது. ஆனால் நைமித்திக ச்ராத்தங்கள் சேர்ந்து வந்தால் அவைகள் எல்லாவற்றையும்

---

* பார்வணம் - மூன்று பேர்களை உத்தேசித்த ச்ராத்தம்.

+ ஏகோத்திஷ்டம் - ஒருவனை உத்தேசித்த ச்ராத்தம்

செய்யவேண்டியது. நித்ய நைமித்திகங்கள் சேர்ந்தால் நைமித்திகம் செய்ய வேண்டியது. நித்யம் செய்ய வேண்டியதில்லை. நைமித்திகத்தினாலேயே நித்யம் ஸித்தித்து விடுகிறது.

11. நித்ய நைமித்திகங்கள்: *நித்யம் என்பது க்லுப்தமாக வருவது. அதாவது दर्शं, संक्रमणं முதலியன.*

*நித்யம் என்பது நியதம், அநியதம் என இரு வகைப்படும். दर्शं என்பது நியதம். விஷ்வயனம், மந்வாதி, யுகாதி இவைகள் அநியதம்.*

*சில காலங்களில் வருவது அநியதம். நியதத்தைக் காட்டிலும் அநியதம் பலமானது. அநியதத்தைச் செய்ய வேண்டியது.*

*நைமித்திகம் என்பது ஒரு விஷயத்தை நிமித்தீகரித்து வருவது. க்ரஹணம், அர்த்தோதயம், மஹோதயம் முதலிய அலப்ய யோகங்கள் நைமித்திகங்கள்.*

*12. ஸ்த்ரீகள் செய்யும் ச்ராத்தமானது ரஜஸ்காலத்தினால் நின்றுவிட்டால் ஸ்நானம் செய்த மறுநாளில் அதாவது 5-வது தினத்தில் அதைச் செய்ய வேண்டியது.*

** ஸ்நானம் செய்யும் 4-வது தினத்தில் பர்த்தாவின் ம்ருததிதி நேர்ந்தால் அன்று 12 நாழிகைக்குமேல் ஸ்நானம் செய்து, புனஸ்நானமும் செய்து பஞ்சகவ்ய ப்ராசனம் செய்து அன்றே பர்த்ரு ச்ராத்தம் செய்யலாம். அதற்கு ப்ரமாணவ்சனம்:*

चतुर्थे दिवसे प्राप्ते मृते भर्तरि यदि ।

पुनः स्नात्वा पञ्चगव्यं पीत्वा श्राद्धं समाचरेत् ॥

---

*மேற்சொல்லும் விஷயத்திற்கு தீக்ஷிதீயத்திலா தாரமில்லை.

*13.* பஞ்சகவ்யம்: பஞ்சகவ்யமென்பது பசுவின் ஸம்பந்தமானது ஐந்து. அதாவது பால், தயிர், நெய், கோமயம், கோமூத்ரம். இவைகளை வைக்க வேண்டிய இடம்: மத்தியில் பால், கிழக்கில் தயிர், தெற்கில் மூத்ரம், மேற்கில் சாணம், வடக்கில் நெய்.

**சேர்க்க வேண்டிய விதி:**

𑌗𑌾𑌯𑌤𑍍𑌰𑍍𑌯𑌾𑌦𑌾𑌯𑌗𑍋𑌮𑍂𑌤𑍍𑌰𑌂 𑌗𑌨𑍍𑌧𑌦𑍍𑌵𑌾𑌰𑍇𑌤𑌿 𑌗𑍋𑌮𑌯𑌮𑍍 ।

𑌆𑌪𑍍𑌯𑌾𑌯𑌸𑍍𑌵𑍇𑌤𑌿 𑌚 𑌕𑍍𑌷𑍀𑌰𑌂 𑌦𑌧𑌿𑌕𑍍𑌰𑌾𑌵𑌿𑌣𑍍𑌣𑍇𑌤𑌿 𑌦𑌧𑌿 ।

𑌶𑍁𑌕𑍍𑌰𑌮𑌸𑍀𑌤𑌿 𑌚𑌾𑌜𑍍𑌯𑌂 𑌚 𑌦𑍇𑌵𑌸𑍍𑌯𑍇𑌤𑌿 𑌕𑍁𑌶𑍋𑌦𑌕𑌮𑍍 ॥

𑌮𑍂𑌤𑍍𑌰𑌮𑍇𑌕𑌪𑌲𑌂 𑌦𑌦𑍍𑌯𑌾𑌤𑍍 𑌅𑌙𑍍𑌗𑍁𑌷𑍍𑌠𑌾𑌰𑍍𑌧𑌂 𑌤𑍁 𑌗𑍋𑌮𑌯𑌮𑍍 ।

𑌕𑍍𑌷𑍀𑌰𑌂 𑌸𑌪𑍍𑌤𑌪𑌲𑌂 𑌦𑌦𑍍𑌯𑌾𑌤𑍍 𑌦𑌧𑌿 𑌤𑍍𑌰𑌿𑌪𑌲𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

𑌘𑍃𑌤𑌮𑍇𑌕𑌪𑌲𑌂 𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌪𑌲𑌮𑍇𑌕𑌂 𑌕𑍁𑌶𑍋𑌦𑌕𑌮𑍍 ॥

கருப்பு நிறமுள்ள பசுவின் மூத்ரத்தை காயத்ரியை உச்சரித்து ஒரு பலமும், வெண்ணிறமுள்ள பசுவின் சாணத்தை 𑌗𑌨𑍍𑌧𑌦𑍍𑌵𑌾𑌰𑌾𑌂 என்ற மந்த்ரத்தையுச்சரித்து அரைக்கட்டைவிரல் பிரமாணமும், தாமிர நிறமுள்ள பசுவின் பாலை 𑌆𑌪𑍍𑌯𑌾𑌯𑌸𑍍𑌵 என்ற மந்ரத்தை உச்சரித்து ஏழு பலமும், சிவப்பு நிறமுள்ள பசுவின் தயிரை 𑌦𑌧𑌿𑌕𑍍𑌰𑌾𑌵𑌿𑌣𑍍𑌣 என்ற மந்த்ரத்தை உச்சரித்து மூன்று பலமும், காராம்பசுவின் நெய்யை 𑌤𑍇𑌜𑍋𑌸𑌿 𑌶𑍁𑌕𑍍𑌰𑌮𑌿𑌤𑌿 என்ற மந்த்ரத்தை உச்சரித்து ஒரு பலமும், 𑌦𑍇𑌵𑌸𑍍𑌯𑌤𑍍𑌵𑌾 என்ற மந்த்ரத்தை உச்சரித்து ஒரு பலம் குசோதகமும் இவைகளை ஒன்றாகச் சேர்த்து அக்னியின் ஸமீபத்தில் வைத்து 𑌆𑌪𑍋𑌹𑌿𑌷𑍍𑌠𑌾 என்ற மந்த்ரத்தால் தர்ப்பையைக் கொண்டு அரைத்து, 𑌮𑌾𑌨𑌸𑍍𑌤𑍋𑌕𑍇𑌤𑌿 மந்த்ரத்தால் அபிமந்த்ரணம் செய்து, நுனியுள்ளதாயும் பசுமையாயுமுள்ள ஏழு தர்ப்பங்களால் அபிமந்த்ரணம் செய்த பஞ்சகவ்யத்தை எடுத்து

ஜாாவத⁰ ஜஓஂவிஷ்ணூ: என்ற மந்த்ரத்தால் ஹோமம் செய்ய வேண்டும். மீதியை கையினாலாவது காஷ்டத்தாலாவது ப்ரணவத்தை உச்சரித்துக்கொண்டே அபி மந்த்ரணம் செய்து, பாத்ரத்திலுள்ளதை எடுத்து புரசு, தாமரை, ஸ்வர்ணம் அல்லது வெள்ளிப்பாத்ரம், ப்ரம்ம தீர்த்தம் இவைகளில் ஏதேனும் ஒன்றினால் ப்ரணவத்தை உச்சரித்துப் பானம் செய்தால், அப்பஞ்சகவ்யமானது, ஜ்வலிக்கும் அக்நியில் விறகைப் போட்டால் எவ்விதம் தஹித்து விடுமோ அவ்விதம் பாபங்களை பஸ்மீகரம் செய்துவிடும்.

பஞ்சகவ்ய திரவ்யங்களில், கோமூத்ரத்தில் வருணனும், சாணத்தில் அக்நியும், தயிரில் வாயுவும், பாலில் சந்த்ரனும், நெய்யில் ஸூர்யனும் வசிக்கிறார்கள்.

மேற்கண்டபடியுள்ள பசுக்கள் கிடைக்காவிட்டால் காராம் பசுவினின்றே எல்லா த்ரவ்யங்களையும் க்ரஹித்துக் கொள்ளலாம்.

சதுர்த்தசியன்று உபவாஸமிருந்து பௌர்ணமியில் ப்ராதக் காலத்தில் பஞ்சகவ்யம் சாப்பிட வேண்டும். நதிக்கரை, பசுவின் கொட்டில், புண்ய க்ஷேத்ரம் இவ்விடங்களில் சென்று பரிசுத்தமான இடத்திலிருந்து பஞ்சகவ்யத்தை ப்ராசனம் செய்ய வேண்டும்.

சாப்பிட மந்த்ரம்:

யஜ்ஷ்ஸ்ரிமதம் உாஉம் ஜெஹெ திஷுதி ஊாஜகெ ।
கூவ

உ்ராஶநம் உஞ்சுமவுஸு ஓஹகூஷ்ரிவெநநஜ ॥

### பஞ்சகவ்யத்தின் விசேஷம்

ஹெஓஜ உயொ ஓாரிஓுநாஶாய ஓயி உூதுாஓி வஸுநஜ ।
மொஜூதும் உாஉுநாஶாய மொஜயம் ஸாஶுநாஶநஜ ।
வுதம் ஜொகஷுஉுஓம் ஜேூயம் உஞ்சுமவுஹஂ ஹவெக ॥

*பால் தரித்ரத்தைப் போக்கும், தயிர் ஸந்தானவ்ருத்தி, கோமூத்ரம் ஸர்வ பாபங்களும் துலையும், கோமயம் ரோகங்கள் தீரும், நெய் மோக்ஷத்தைக் கொடுக்கும்.*

*14. ஒரு ஸ்த்ரீயின் பர்த்தாவுக்கு தன் ஔரஸ புத்ரனோ, ஸ்வீக்ருதபுத்ரனோ அல்லது ஸபத்நீபுத்ரன் வகையராவோ ச்ராத்தம் செய்யும் காலத்தில், இவள் அவர்களின் முந்நிலையில் இருக்கவேண்டியது. அப்படி இல்லாவிட்டால்,*

வுூத்ரः க்ஷயாஹம் பிதுः ஶ்ராத்தம் பத்நீ ச தத³ஸந்நிதௌ ||

*என்றபடி, இவளும் பர்த்தாவை உத்தேசித்து தனிமையில் ச்ராத்தம் செய்யவேண்டியது. அப்படிச் செய்யாவிட்டால் ச்ராத்தத்தை விட்டவனுக்கு என்ன தோஷப்ராயச்சித்தம் ஏற்படுகிறதோ அதற்கு இவளும் உள்ளாகிறாள்.*

*15. ச்ராத்தம் தீட்டினால் நின்று போனால் தீட்டுப் போகும் தினத்தில் செய்ய வேண்டியது. வேறு காரணத்தினால், அல்லது மறதியினால் விட்டுப்போனால் க்ருஷ்ணபக்ஷ ஏகாதசியிலாவது அமாவாஸ்யையிலாவது க்ருச்ராசரணம் செய்து ச்ராத்தம் செய்ய வேண்டியது. மறதியினால் விட்டுப் போய் பச்சாதாபப்படுகிறவன் உடனே க்ருச்ராசரணம் செய்து ச்ராத்தம் செய்யலாமென்று சிலர் சொல்லுகிறார்கள். அதற்கு ப்ரமாணவசனம்:*

ப்ரத்யப்³த³ம் ப்ரதிமாஸம் ச ஏகோத்³தி³ஷ்டே ம்ருதக்ஷயே |
தத³ஹர்விஸ்ம்ருதிப்ராப்தௌ தர்ஶே வா தத்³ய ஏகாத³ஶ்யாம் வா ||

*16. மதாபிதாக்களிறந்த ஸமீபகாலத்தில் மாதாமஹன் முதலியவர்களிறந்து அவர்களுக்கு க்ருத்யம் செய்யும்படி நேர்ந்தால், அவர்களுக்கு ஸபிண்டீகரணத்தை மாதா பிதாக்களின் ஆப்திகத்திற்குப் பிறகு செய்யவேண்டியது. ச்ராத்தங்கள் அனேகமாய் 355-வது நாளில் அல்லது 385-வது நாளில் வரும். மாதா பிதாக்களின் ஆப்திகம் 385-வது நாளிலும்,*

மாதாமஹாதிகளின் ஆப்திகம் 355-வது நாளிலும் வந்து மாதா பிதாக்களின் ஆப்திகத்திற்கு முன் மாதா மஹாதிகளின் ஆப்திக திதி வந்தாலுங்கூட மாதா பிதாக்களின் ஆப்திகத்திற்குப் பிறகுதான் மாதாமஹாதிகளின் ஸபிண்டீகரணத்தைச் செய்ய வேண்டியது. மறுபடி வேறு ஆப்திகம் கிடையாது.

17. ஒவ்வொருவருக்கும் அவரவர்கள் இறந்துபோன மாதத்தில், பக்ஷத்தில், திதியில் வருஷந்தோறும் ப்ரத்யாப்திகத்தைச் செய்ய வேண்டியது.

18. ஒரு திதி இரண்டு நாட்களிலும் வ்யாபித்திருந்தால் அபராண்ஹவ்யாப்தியுள்ள தினத்தில் செய்யவேண்டியது. இரண்டு தினங்களிலும் அபராண்ஹவ்யாப்தியிருந்தால் அதிகமுள்ள தினத்திற்கு செய்யவேண்டியது.

19. இரண்டு தினங்களிலும் அபராண்ஹவ்யாப்திஸம மாயிருந்தால் முன் தினத்திற் செய்ய வேண்டியது.

20. இரண்டு தினங்களிலும் அபராண்ஹவ்யாப்தி இல்லாவிடில் மறுநாள் குதபவ்யாப்தி இருக்குமாதலால் அன்று செய்யவேண்டியது.

21. பகலை 5 பாகம் செய்தால் 1 ப்ராத: காலம், 2 ஸங்கவகாலம், 3 மத்யான்ஹகாலம், 4. அபராண்ஹகாலம், 5 ஸாயான்ஹ காலமென்று சொல்லப்படுகின்றன. மத்யான்ஹ காலத்தை 3 பாகமாகச் செய்தால் 1 காந்தர்வகாலம், 2 குதப காலம், 3 ரௌஹிணகாலம் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

22. ஒரு மாஸத்தில் இரண்டு திதிகள் வந்தால் பின் வரும் திதியில் ச்ராத்தம் செய்ய வேண்டியது. பிந்திய திதி ஸங்க்ரமணத்தால் துஷ்டமாயிருந்தால் முந்திய திதியில் செய்யவேண்டியது.

23. இரண்டு திதிகளுக்கும் தோஷமிருந்தால், பிந்திய திதியில் செய்ய வேண்டியது. ஆனால் மத்யான்ஹத்திற்கு முன்

ஸங்க்ரமணம் ஏற்பட்டால் அன்று தோஷமில்லை. ஆனால் ஆனி, புரட்டாசி, மார்கழி, தை, பங்குனி இம்மாஸங்களில் ஸங்க்ரமணம் மத்யான்ஹத்திற்கு முன் ஏற்பட்டால் தோஷமுண்டு. மற்ற மாஸங்களின் ஸங்க்ரமணமானால் தோஷமில்லை.

24. அர்த்தராத்ரிக்குமேல் ஸங்க்ரமணமானால் அன்றைக்கு தோஷமில்லை. முந்தியானால் தோஷமுண்டு.

25. ஒரு மாஸத்தில் ஒரே திதியானால் எந்த தோஷமிருந்தாலும், அதிலேயே ச்ராத்தம் செய்ய வேண்டியது.

26. ஒரு மாஸத்தில் திதியே இல்லாவிடில் முந்தின மாஸத்தில் சாந்த்ரமானப்படி சுத்தமாஸ திதியில் செய்ய வேண்டியது. பிந்திய மாஸத்தில் செய்யக்கூடாது. சாந்த்ர மானப்படியும் திதியில்லாவிடில் மறு மாஸ திதியில் செய்ய வேண்டியது.

இதற்கு உதாஹரணம்: கார்த்திகை மாஸ முடிவு தினத்தில் அமாவாஸ்யை: மார்கழி முதல் தினத்தில் ப்ரதமை; மார்கழி முடிவில் சதுர்த்தசி. அன்று மகர ஸங்க்ரமணம். தைமாஸம் முதல் தினத்தில் அமாவாஸ்யை. மார்கழி மாஸத்தமாவாஸ்யாதிதிக்காரர்களுக்கு தைமாஸம் முதல் தேதியில் ச்ராத்தம் செய்ய வேண்டியது. ஏன் எனில் மார்கழி முதல் நாள் முதல் தை மாஸம் அமாவாஸ்யை வரையில் மார்க சீர்ஷமானதால், தைமாஸ அமாவாஸ்யையில் செய்ய வேண்டியது.

27. ச்ராத்தத்தில் ஸமானகோத்ரர்கள், நிமந்த்ரணத்திற்கு யோக்யரல்ல. ஸோதகும்ப ச்ராத்தத்திற்கு பாதகமில்லை.

28. மாதாமஹன் முதலிய அன்யகோத்ரிகளுக்குச் செய்யும் ச்ராத்தத்தில், கர்த்தாவினுடையவும் உத்தேச்யனுடையவும் ஸஹோதரர்கள் நிமந்த்ரணத்திற்கர்ஹரல்லர்.

*29. ஸம்ஹொஜிநீ:- பரஸ்பரம் பந்துக்களே ச்ராத்தத்தில் சாப்பிடுவது ஸம்போஜினி எனப்படும் பிசாச பிக்ஷை. இது பித்ருக்களையோ, தேவர்களையோ போய் அடைகிறதில்லை. இவ்வுலகிலேயே புண்யமிழந்து நடமாடுகிறது. அப்படி பரஸ்பர ச்ராத்த போஜனமானது திரவியலாப ஆசையால்தன். அந்த தக்ஷிணை பரலோக ஸாதகமாகாது.*

*30. ச்ராத்தத்திற்கு முன் 1 மாஸம் அல்லது 1 பக்ஷம் வரையில் பரான்னம் க்ஷௌரம் இவை கூடாது. ஸங்கட விஷயத்தில் முதல் நாள் மறுநாள் ச்ராத்ததினம் இம்மூன்று நாட்களிலாவது பரான்னத்தை விடவேண்டும்.*

*31. தன்னுடைய மித்ரன், ஆசார்யன், அம்மான், தங்கை, தமக்கை, மாமனார், மாமியார் இவர்களின் அன்னத்திற்கு பரான்னமென்ற தோஷமில்லை.*

*32. பாதப்ரக்ஷாளனம்: வீட்டின் வாயிற்படிக்கெதிரில் 12 அங்குலம் சதுரமாய் விச்வேதேவர்களுக்கு மண்டலமும், அதற்குத் தென்புறமாய் 12 அங்குலம் சக்ரமாய் பித்ருக்களுக்கு மண்டலமும் செய்யவேண்டியது. 2 மண்டலங்களுக்கும் நடுவில் 6 அங்குலங்கள் இடைவெளி இருக்க வேண்டும். காலலம்பிய ஜலங்கள் ஒன்று சேரக்கூடாது. தேவ மண்டலத்தில் அக்ஷதையுடன் கூடிய தர்ப்பத்தைக் கிழக்கு நுனியாகவும், பித்ரு மண்டலத்தில் எள்ளுடன் கூடிய தர்ப்பத்தை தெற்கு நுனியாகவும் போடவேண்டும்.*

*33. நின்றுகொண்டு காலலம்பக்கூடாது.*

*34. தர்ப்பபவித்ரபாணியாய் காலலம்பவும் சந்தனம் பூசவும் கூடாது. பவித்ரத்தைக் கழற்றி வலது காதில் வைத்துக்கொண்டு காலலம்ப வேண்டும்.*

*35. ச்ராத்த ப்ராஹ்மணர்களின் காலை கணுக்காலுக்கு மேல் அலம்பக்கூடாது. உள்ளங்காலையும் அலம்பக்கூடாது.*

*36. ச்ராத்தத்தில் ப்ராஹ்மணர்கள் காலலம்பின பிறகு கர்த்தா மண்டலத்திற்கு வடக்கிலாவது ஈசான்யத்திலாவது முந்தி ஆசமனீயம் செய்ய வேண்டியது. ப்ராஹ்மணர்கள் பிறகுதான் ஆசமனீயம் செய்ய வேண்டும்.*

*37. ஹோமத்தில் மிச்சமான நெய்யினால் பாத்ராபிகாரம் அன்னாபிகாரம் இவைகளைச் செய்யக்கூடாது.*

*38. 3 வஸ்த்ரங்கள், அல்லது 2 வஸ்த்ரங்கள், அல்லது 1 வஸ்த்ரமாவது கொடுக்க வேண்டும். வஸ்த்ரமில்லாத பக்ஷத்தில் யஜ்ஞோபவீதமாவது கொடுக்க வேண்டும். உபவீதம் கொடுக்கப்படாத ச்ராத்தம் நிஷ்பலம்.*

*39. ச்ராத்தத்தில் பாகமெல்லாம் நெய்யினாலேயே செய்ய வேண்டும். எவ்விஷயத்திலும் எண்ணையைச் சேர்க்கலாமென்று சொல்லப்படவில்லை. எள், தேங்காய் இவைகளைச் சேர்க்கலாமென்று இருப்பதால் சிலர் நல்லெண்ணையையும், சிலர் தேங்காயெண்ணையையும் சேர்த்து வருவதாகத் தெரிகிறது.*

*40. ச்ராத்தத்திற்கு யோக்யமான வஸ்துக்கள்: உளுந்து, கருப்பு எள், சம்பாநெல், கோதுமை, பயறு, கடுகு, கருப்பில்லாத பாகல் (3 விதம்), பில்வம், நெல்லி, திராட்க்ஷை, பலா (2 விதம்), மா, மாதுளை, கடுக்காய், குங்குமப்பூ, கருவேப்பிலை, எலுமிச்சை, வாழை (5 விதம்), இலந்தை, தேங்காய், திப்பிலி, மிளகு, புடலங்காய், முள் கத்திரி, சுக்கு, தேன், நெய், சர்க்கரை, காயம், பச்சைக் கற்பூரம், வெல்லம், கடலுப்பு, வெள்ளரி, பசுவின்பால், அவல், எருமைப்பால் (மத்யமம்), ஜீரகம், சிவப்புக்கொடியுள்ள கூஷ்மாண்டம், கரணைக்கிழங்கு (2 விதம்), சேப்பங்கிழங்கு, கடலை, ஏலம், வெள்ளைப் புஷ்பங்கள், தாமரை, ஜாதிபுஷ்பம், சம்பகம், மல்லிகை, துளசி, தாழம்பூ, மரு இவைகள் ச்ராத்தயோக்யமான துகள்.*

41. ச்ராத்த யோக்யமல்லாத வஸ்துக்கள்: வரகு, காராமணி, கொள்ளு, கடலை, கருப்புப் பாகல்காய், பெருங்காயம், துவரை, முருங்கை, பூஷணி, சுரைக்காய், எருமைப்பால், மாதுளை, விளா, காச்சு உப்பு, ஒற்றைக் குளம்புள்ள ம்ருகத்தின் பால், எலுமிச்சை, புடலங்காய், மிளகாய், மோர், மந்தாரை இலைகள் ச்ராத்தத்திற்கு யோக்யமல்லாதவைகள்.

42. விதி நிஷேதம் இரண்டிலும் சொல்லப்பட்டவைகளைச் சேர்த்தாலும் சேர்க்கலாம். தள்ளினாலும் தள்ளலாம். போஜனப்ரகரணத்தில் நிஷித்தமான வஸ்துக்களை ச்ராத்தத்தில் சேர்க்கக்கூடாது. (ஆந்நிக காண்டம் 103-ம் பக்கம் பார்க்க.)

43. சமையல் செய்ய யோக்யமானதும், இதற்கு முன் உபயோகப்படுத்தாததுமான பாத்ரங்களில், சமைக்க யோக்யமுள்ள பந்துக்களுடன் சமையல் செய்யத் துவக்க வேண்டும். முன் உபயோகப்படுத்திய பாத்ரத்தில் ச்ராத்தத்துக்கு சமையல் செய்தால் தேவ பித்ருக்கள் புஜிக்க மாட்டார்கள் அது அசுர திருப்திகரமாகிவிடும்.

நன்றாக ஸ்நானம் செய்த பிறகு பரிசுத்தமான தங்கம் வெள்ளி முதலிய உலோகங்களால் செய்த பாத்ரங்களிலாவது புதிய மண் பாண்டத்திலாவது அன்னம் முதலியவை தயார் செய்ய வேண்டும். இரும்புப் பாத்ரம், உடைந்த பாத்ரம் வேறு விதமாய் கெட்டுப்போன பாத்ரம், உபயோகப்படுத்திய மண் பாத்ரம் இவைகளில் ஒருக்காலும் சமையல் செய்யக்கூடாது.

செம்புப் பாத்திரத்தில் பக்குவம் செய்த அன்னம் பித்ருக்களை கோரமான துக்கப் பெருங்கடலிலிருந்தும் கரையேற்றும். ஒருக்காலும் இரும்புப் பாத்ரத்தை உபயோகிக்கக் கூடாது. இரும்பைக் கண்டவுடனேயே பித்ருக்கள் ஓடிவிடுவார்கள்.

44. மணியோசை, இரும்பு, விபூதி, திலகம், ருத்ராக்ஷமாலை, முத்திரை இவைகளைக் கண்டவுடன் பித்ருக்கள் ஆசை ஒழிந்து ஓடிவிடுகிறார்கள்.

45. சமையல் செய்யுமிடத்தை கோமயத்தால் நன்றாக மெழுகி சுத்தம் செய்ய வேண்டும். எள்ளை எல்லாவிடங்களிலும் இறைக்க வேண்டும். அந்த எள்ளையே ச்ராத்தம் செய்யும் இடங்களில் கொட்டி வைக்க வேண்டும். அசுரர்களால் கொடுக்கப்பட்ட ஸர்வமும் திலம், தீர்த்தம் இவைகளினால் சுத்தியடைகிறது.

46. ச்ராத்த போஜனத்தில் உபயோகிக்கப்படும் வாழை இலையானது தண்டத்துடன் இருக்க வேண்டும். இடது பக்கம் நுனியும் நீண்டும் இருக்க வேண்டும். வலது பக்கம் நுனியிருந்தால் பித்ருக்கள் ஆசையற்று ஓடிவிடுகிறார்கள். ச்ராத்தத்தில் இலைகள் அடி, நுனி நறுக்கக்கூடாது. இலைகளின் நரம்பையும் கிழிக்கக்கூடாது.

47. ச்ராத்தத்தில் ப்ராஹ்மணர்கள் போஜனம் செய்த இலைகளை பூமியிலேயே புதைக்க வேண்டும் அல்லாது வேறு விதம் செய்தால் ச்ராத்தம் நஷ்டமாகும்.

48. ச்ராத்தத்தில் ப்ராஹ்மணர்கள் சாப்பிட்ட இலைகளை ஸ்வஸ்திவாசனத்திற்குமுன் எடுத்துவிட வேண்டியது. பிண்டப்ரதானத்திற்குப் பிறகு ஸ்தலத்தை சுத்தி செய்ய வேண்டியது.

49. ஸ்த்ரீ, பாலர்கள் செய்யும் ச்ராத்தத்தில் பின் வாங்கி செய்பவனுக்கு அபஸ்வயம் இல்லவே இல்லை.

50. சித்தப்பன், பெரியப்பன், மூத்த தமயன் இவர்களுடைய ச்ராத்தத்தில் அவரவர்களையும், அவரவர்களின் பித்ருபிதா மஹர்களையும் வரணம் செய்ய வேண்டியது.

51. ச்ராத்தத்தில் யோனிஸம்பந்தம், கோத்ரஸம்பந்தம், மந்தரஸம்பந்தம் இவைகள் உள்ளவர்களை நிமந்த்ரணம் சொல்லக்கூடாது. அனுகல்பமாக பாட்டன், அம்மான், மாமனார், தௌஹித்ரன், மருமான், மாப்பிள்ளை,

இவர்களை நிமந்த்ரணம் சொல்லலாம். நல்ல வேதவித்தாயிருந்தாலும் சத்ரு கூடாது.

52. ச்ராத்தத்திற்கு முதல் நாளில் கர்த்தா குச்சியினால் பல் துலக்கக்கூடாது. நிமந்த்ரணத்திற்கு ஏற்பட்டவர்கள் யாதொரு விதமான ப்ரதிக்ரஹமும் செய்யக்கூடாது. வரிக்கப்பட்டவன் வழி நடக்கக்கூடாது. சுமை சுமைக்கக்கூடாது. வரிக்கப்பட்டவன் பிறகு மாட்டேனென்று சொன்னாலும் வரிக்கப்பட்டவனை வேண்டாமென்று சொன்னாலும் இவ்விருவர்களும் ப்ரஹ்மஹத்யா தோஷத்தையடைந்து சூத்ரயோனியில் பிறப்பார்கள். ச்ராத்தத்தைத் தவிர மற்ற ஸ்நானம் தானம் முதலிய சத்கார்யங்களையும், கரும்பு, ஜலம், பழம், கிழங்கு, தாம்பூலம், பால், மருந்து இவைகளைப் பூஜித்த பிறகும் செய்யலாம். ச்ராத்ததினத்தில் கர்த்தா பல் தேய்க்கக்கூடாது.

53. ப்ராஹ்மணர்கள் ச்ராத்தம் முடிகிறவரையில் ஒருவரோடொருவர் தொட்டுக் கொள்ளக்கூடாது.

54. அக்ஷயத்ருப்திவாசனம், ஆஸனம் இவைகளில் ஆறாம் வேற்றுமையாகவும், ஆவாஹனத்தில் இரண்டாம் வேற்றுமையாகவும், அன்னம் கொடுப்பதில் நான்காம் வேற்றுமையாகவும், மற்ற உபசாரங்களில் எட்டாம் வேற்றுமையாகவும் உபசரிக்க வேண்டும்.

### 55. விச்வேதேவர்கள் 12:

इष्टिश्राद्धे क्रतुदक्षः संकीर्तितौ वैश्वदेविके ।

नान्दीमुखे सत्यवसू काम्ये तु धुरिलोचनौ ॥

पुरूरवार्द्रवौ चैव पार्वणे समुदाहृतौ ।

नैमित्तिके कालकामौ एवं सर्वत्र कीर्तितौ ॥

ஸந்ந்யாஸிந: ஸாயம்பாம்ப்ரஸம்ஜ்ஞகா: விஶ்வேதேவா:

இதி விஶ்வேதேவா ஸூக்தா | இஷ்டிஶ்ராத்தம் = யாகாதி க்ரதுதக்ஷ

ஶ்ராத்தம் இத்யர்த்த: ||

அதாவது:

1. ச்ராத்தம் - புரூரவர், ஆர்த்ரவர்

2. மகாளயம் - துறி, ரோசனர்

3. நாந்தீ - ஸத்யர், வஸு

4. யாகம் - க்ரது, தக்ஷர்

5. ஸபிண்டீகரணம் - காலர், காமுகர்

6. ஸந்ந்யாஸிநோ-ஸாய[illegible], [illegible].

56. மண்பாத்ரத்தில் சந்தனம் வைக்கக்கூடாது. நெய் தூபம் உதவாது.

57. எப்போதும் ஆபோசனம் தானாகவே போட்டுக் கொள்ளக்கூடாது.

58. ஆபோசனம் போட்ட பிறகு மறுபடி ஜலம் போடுவதும், அர்க்யபாத்ரத்தில் திலோதகத்தை விட்ட பிறகு மறுபடியும் விடுவதும் கள்ளுக்குச் சமானமாகும்.

59. அர்க்யபாத்ரங்களை திறந்து வைக்கக்கூடாது. இடம் விட்டு நகர்த்தவும் கூடாது. அர்க்யபாத்ர ஜலம் முழுவதும் கொட்டிப் போனால் மறுபடி முன் சொன்னதுபோல் மந்த்ர வத்தாய் ஜலபூர்ணமாய் செய்யலாம். கொஞ்சம் கொட்டினால் குற்றமில்லை.

60. ஒவ்வொரு உபசாரமும் விச்வேதேவருக்கானவுடன் பித்ருக்களுக்குச் செய்து இதே மாதிரி எல்லா

உபசாரங்களையும் தனித்தனியே செய்ய வேண்டியதே தவிர சேர்த்துச் செய்யக்கூடாது.

61. வஸு, ருத்ர, ஆதித்யர்கள் என்ற பித்ருக்கள் ச்ராத்த தேவதைகள், அந்த வஸ்வாதிகளுக்கு எவர் ச்ரத்தையுடன் ச்ராத்தம் செய்கிறார்களோ அவர், அப்படி பித்ருக்களை ச்ராத்தத்தில் பூஜிப்பதால் அக்ஷய பலனை அடைகிறார்கள்.

வஸுக்கள் பித்ருக்கள், ருத்ராள் பிதாமகாள், ஆதித்யாள் பிரபிதாமகாள் என்று அறிந்து ச்ராத்தம் செய்தவனுக்கு இந்த தேவதைகள் சந்துஷ்டாளாக ஆகிறார்கள்.

தேவ வரணத்துக்கு பிரதக்ஷிணமாகவும் உபவீதமாயும், பிதுர்வரணத்துக்கு அப்ரக்ஷிணமாகயும் ப்ராசீனாவீதியாயும் ச்ராத்தம் செய்யவேண்டும்.

தேவதைகளுக்கு வலது காலையும், பித்ருக்களுக்கு இடது காலையும் மடித்து உபசாரம் செய்ய வேண்டும்.

தேவதைகளுக்கு தர்ப்பங்கள் நேரே. பித்ருக்களுக்கு த்விகுணம் அதாவது இரட்டையாக மடித்து மூலம் அக்ரம் சேர்த்துப் போடவேண்டும்.

62. பருப்பு, பாயஸம், நெய் இம்மூன்றும் சாப்பிடுகிறவர்களுடைய வலது பக்கத்தில் இருக்க வேண்டும். மற்ற பதார்த்தங்களுக்கு நியமனம் இல்லை. பருப்பு, பால், நெய், தயிர், தேன் இவைகளைத் தொன்னையில் வைத்து அன்னம் வைக்கப்படுகிற பெரிய இலையில் வைக்காமல் பூமியிலேயே வைக்க வேண்டியது.

63. ச்ராத்த போஜனத்தில் பலி வைக்கக்கூடாது.

64. ஏகோத்திஷ்டம், ஸபிண்டீகரணம், மாஸிகம், அனுமாஸிகம், ஷோடசம், நாந்தி, கயாச்ராத்தம், நவச்ராத்தம் இவைகளில் அபிச்ரவணம் கூடாது.

65. ச்ராத்தத்தில் ஒருவருக்கொருவர் எச்சில் போட்டுக் கொண்டால் அந்த இலையைத் தொடாமல் எடுத்தெறிந்துவிட்டு அந்த இடத்தை கோமயத்தினால் சுத்தி செய்து அந்த இடத்தில் வேறு இலை போட்டு எல்லாவற்றையும் பரிமாறி பரிசேஷனம் செய்து சாப்பிட வேண்டும். தோஷமில்லை.

66. போஜனாரம்பம் முதல் முடிவிற்குள் ஹோமாக்னி அணைந்து விட்டால் அன்றைய தினம் உபவாஸமிருந்து புனச்ராத்தம் செய்ய வேண்டும்.

67. வாயஸபிண்டத்தை காகம் எடுக்காமல், அது நாயினால் தொடப்பட்டாலும், வேறு ஜந்துக்களாற் தொடப்பட்டாலும், சூத்ரனால் பார்க்கப்பட்டாலும், அன்று தினம் உபவாஸமிருந்து மறுநாள் புனச்ராத்தம் செய்யவேண்டும்.

68. விச்வேதேவவரண ப்ராஹ்மணன், பித்ருவரண ப்ராஹ்மணனுக்குப் பிறகு, கை அலம்ப வேண்டும். ஆசனமமும் அப்படியே செய்ய வேண்டும்.

69. ச்ராத்தகர்மாவில் ஒரே பங்க்தியில் சாப்பிடுகிற எல்லா ப்ராஹ்மணர்களுக்கும் பக்ஷ்யம், போஜ்யம் முதலான சாப்பிடக்கூடிய பதார்த்தங்களை சரியாய்ப் போடவேண்டும். தக்ஷிணையை நிம்ந்த்ரண ப்ராஹ்மணர்களுடைய வித்யை, குணம் இவைகளிலுள்ள ஏற்றக் குறைச்சலுக்குத் தக்கபடி வித்யாஸமாய்க் கொடுக்கலாம்.

70. பிண்டப்ரதானத்திற்குப் பிறகு ஆக்ராணம் செய்வதாவது கர்மாங்கமாகையால் செய்ய வேண்டும்.

71. பிண்டப்ரதானத்தில் நடுப்பிண்டத்தை கர்ப்பமாகாத தன் பத்னியிடம் மந்த்ரவத்தாகக் கொடுத்து சாப்பிடச் சொல்ல வேண்டியது.

பிண்டங்களை அக்னி, ஜலம் இவைகளில் போட்டுவிட வேண்டியது. தீர்த்த ச்ராத்தத்தில் ஜலத்திலேயே போட வேண்டியது.

72. ஸங்கல்ப ச்ராத்தத்தில் ஆவாஹனம், ஹோமம், அர்க்யம், விகிரம், பிண்டப்ரதானம் இவைகள் கிடையாது.

73. ஶ்ராத்தமான பிறகு வஸ்த்ரம் பிழிவதற்கு:

𑌉𑌚𑍍𑌛𑌿𑌷𑍍𑌟𑌭𑌾𑌗𑌿𑌨𑍋 𑌦𑌾𑌸𑌾𑌃 𑌯𑍇 𑌮𑍃𑌤𑌾𑌸𑍍𑌤𑍍𑌵𑌸𑌂𑌸𑍍𑌕𑍃𑌤𑌾𑌃 ।

𑌤𑍃𑌪𑍍𑌯𑌨𑍍𑌤𑍁 𑌤𑌾𑌂𑌤𑌾𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍁𑌃 𑌮𑌮 𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑌿𑌨𑍋 𑌮𑍃𑌤𑌾𑌃 ॥

74. இடது கையில் தர்ப்பங்களையும், வீட்டில் கோலங்களையும், நெற்றியில் திலகங்களையும் கண்டால் பித்ருக்கள் ஆசையற்றவர்களாய் ஓடிவிடுகிறார்கள். ஆகையால் ச்ராத்த தினத்தில் மேற்கண்டவை விலக்கத்தக்கது.

த்ரிபுண்ட்ர, ருத்ராக்ஷமாலை தரித்து விளங்கும் ச்ராத்த கர்த்தாவைக் கண்டு பித்ருக்கள் எவரும் ஆசையற்றவர்களாய் ஓடுகிறார்கள்.

ஊர்த்துவபுண்ட்ர, த்ரிபுண்ட்ரங்கள் நித்யமாக வேண்டியதேயாயினும், ச்ராத்த காலத்தில் கர்த்தாவும், புசிப்பவரும் தரிக்கவே கூடாது.

த்ரிபுண்ட்ரம், திலகம், ஊர்த்வபுண்ட்ரம் இவைகளைத் தரித்து ச்ராத்தம் செய்பவன் மஹாபாபியாய், ரௌரவம் முதலிய மகாநரகங்களில் மூழ்குகிறான். ப்ராஹ்மணர்களை வரித்துவிட்டு கர்த்தா த்ரிபுண்ட்ரம் தரித்தானாகில், அவன் தனது பித்ருக்களுடன் நரகத்தில் ஆழ்கிறான்.

75. ச்ராத்த தினத்தில் சாப்பிட்டவர், கொடுத்தவர் இவர்கள் நியமம்:

நிமந்த்ரணம் சாப்பிட்டவர் 10 தடவை காயத்ரியினால் ஜலத்தை சாப்பிட வேண்டும். பிறகுதான் ஸந்த்யாவந்தனம்

செய்யவேண்டியது. ஔபாஸனத்தை மற்றவர்களைக் கொண்டு செய்விக்கவேண்டும்.

நிமந்த்ரணம் சாப்பிட்டவர்களும், கர்த்தாவும் அன்றைய தினம் 1. வழி நடத்தல். 2. மறுபடியும் ஆஹாரம் செய்தல். 3. வைதிக கர்மங்களைச் செய்தல். 4. ஸ்த்ரீஸம்போகம் செய்தல் 5. தானம் வாங்குதல் 6. தானம் கொடுத்தல். 7. ஔபாஸனம் செய்தல் 8. அத்யயனம் செய்தல் முதலியவைகளை விலக்க வேண்டும்.

மறுதினத்தில் ஒரு வைதிக கர்மாவுக்கும் அவர்கள் கூடாது. ஏனென்றால்: ஸ்ரீகைவயயோக்யாஹம் என்று வசனம் ஏற்பட்டிருக்கிறது.

ச்ராத்த கர்த்தா மறுநாளும் 1. க்ஷௌரம், 2. எண்ணை தேய்த்துக் கொள்ளுதல், 3. பரான்னம், 4. ஸ்த்ரீ ஸம்போகம், 5. ப்ரதிக்ரஹம் வாங்குதல் இவைகளை முக்யமாய் விலக்க வேண்டியது.

76. ச்ராத்த தினத்தின் இரவை கர்த்தா ப்ரம்மசர்யத்துடன் போக்தாக்களோடு கழிக்க வேண்டும். அப்படியில்லாவிடில் இருவரும் நரகமடைகிறார்கள். கர்த்தா மறுநாளும் பித்ருத்ருப்தியின் பொருட்டு நிமந்த்ரணம் சாப்பிட்ட ப்ராஹ்மணர்களுக்கு போஜனம் செய்து வைக்க வேண்டும். அலக்ஷியமாக இருந்தால் பித்ருக்கள் சாபத்திற்குள்ளாகிறார்கள்.

பர்வதினத்தில் ப்ரத்யாப்திக ச்ராத்தம் க்ரஹணத்தால் நிஷேதிக்கப்பட்டு மறுநாள் செய்ய வேண்டிவரும் விஷயத்தில் பர்வதினத்தில் ப்ரத்யாப்திக ச்ராத்தத்தை ஹிரண்ய ரூபமாய்ச் செய்ய வேண்டியது. அதற்கங்கமாய் தர்ப்பணம் கிடையாது.

77. ச்ராத்த தினத்தில் ச்ராத்தக்ருஹத்தில் சூத்ரர்களுக்கு சாப்பாடு செய்விக்கக்கூடாது.

**வாமெய ஸ்ராஸம் ||**

ஸபிண்டீகரணத்திற்குப்பின், வ்ருத்தப்ரபிதா மஹனுக்குக் கொடுக்கும் பாதேய ச்ராத்தத்தை ஆமத்தினாலேயே செய்யவேண்டும். அவனுக்கு வேறு ச்ராத்தம் கிடையாது. ஆமச்ராத்தத்தில் அன்னத்திற்கு 4 பங்கதிகமாய் ஆமத்தைக் கொடுக்க வேண்டும். (ஆமம் = அரிசி).

## 78. ஸந்யாஸிகளின் மரணத்தில் ஆப்திகாதி விஷயங்களின் தோஷத்தைப்பற்றி

அயாூதம் பாவநணஸாநெ தஃஸூம் ஸஸிஷொஜநெ ।
ஆாாயநெ தஃஸூம்ஸ்ராஃ ப்ரத்யெஷ்தூ ஶதம் ஜவெக ।
ப்ரத்யெஷ்தூ ஒிநம்வெர்ாகூம் பாவநெ உஶவாஸாஃ ।
ஸஸெ பஞ்ஒிநம் வெர்ாகூம் வஜ்ரொாயநெ ஆயஃ ॥
(காஒநாாயணஸஸிவிஷயெ ப்ரத்ாஷிகஶ்ாஸவக)॥

## 79. ச்ராத்தாதிகளில் சாப்பிட்டால் எத்தனை காலத்திற்கு அவர்களுக்குச்சுத்தியில்லை என்பது

ப்ரத்யெ கூபெஒகாஹம் ஒாஸிகெஷு ச ஷஃிநஃ ।
ஷண்ாஸாநவஜி ஸாவஜிகெ ஸகொஷிகெ து வதாஃ ॥
ஊநெ ஶைத்ஒிநம் வெர்ாகூ ஒாஷிகெ ஸவாாதகஃ ।
வெதாணாஒயொகாூாஂதாம் நஷப்ூாஒநெஸ்வஜி ச ।
ந ஶஸிவக்லாஒவரஶிதெவம் ஒநாவ்யவீக ॥

## 80. ச்ராத்தாதிகளில் போஜனம் செய்த தோஷத்திற்காகச் செய்யவேண்டிய காயத்ரீஜப ஸங்க்யாநிர்ணயம்

ഭുക്ത്വാ തു പാർവ്വണം ശ്രാദ്ധം ശതമഷ്ടോത്തരം ജപേത് ।

ത്രിംശത്സഹസ്രമേകാഹം ജപം കുർവീത വൈ ദ്വിജഃ ।

സാപിണ്ഡ്യേ ദശസാഹസ്രം നൂതനശ്രാദ്ധകേഽപി ച ।

ജപേദഷ്ടസഹസ്രം തു നവശ്രാദ്ധേ ജപേദ്ദ്വിജഃ ॥

ഏകോദ്ദിഷ്ടേ തു സാഹസ്രം തഥൈവാ പ്രതിഗ്രഹേ ॥

## *81.* காக்கை பிண்டத்தை எடுப்பதின் பலன்

അഗ്രാസഃ പൃഥഗ്ഗ്രാ ദായുഷ്യസ്യ ഭവേത്ക്ഷയഃ ।

പ്രഥമാദിപിണ്ഡഗ്രഹണേ വായസൈരിതി കീർത്തിതഃ ॥

## 82. புனச்ராத்தம் செய்ய வேண்டியதற்கு ஹேதுக்கள்

അശ്വനാശേ ശയ്യാനാശേ ദീപനാശേ തഥൈവ ച ।

രാജദ്രോഹിഷു സംസർഗേ ഭൃത്യ വിസർജ്ജനേ ॥

ഛർദ്ദിശ്രാദ്ധഗൃഹേ ശ്വാനേഷു സംസ്പർശേ വിധിതോ യഥാ ।

ശൂദ്രദൃഷ്ടേ പതിതദൃഷ്ടേ ഹോമദോഷേ തഥൈവ ച ।

ഉപവാസം തഥാ കുര്യാത് പുനശ്ശ്രാദ്ധം സമാചരേത് ।

ഉച്ഛിഷ്ടോച്ഛിഷ്ട സംസർഗേ പുനശ്ശൂദ്രാദി ദർശനേ ।

പതനേ പിണ്ഡസംഹൃതേ കാകപിണ്ഡശ്വഭോജനേ ।

അപ്യവാദ്യന്തം നഷ്ടം ശ്രാദ്ധശേഷാന്നം ജപേദ്യദി ।

ഉപോഷ്യ തസ്മിന്ന് കർത്താ പുനശ്ശ്രാദ്ധം പ്രചോദതി ॥

## 35. பித்ருசேஷபோஜநம் ||

*1.* ஶ்ராத்தங்களில் பித்ருசேஷபோஜநம் அவச்யம் செய்ய வேண்டியது. ச்ராத்தம் செய்கிறவன் தரித்ரனாகயிருந்தாலும் தன்னுடைய அன்னத்தையாவது ச்ராத்தம் செய்தவன் வீட்டில் கொண்டுபோய் வைத்துக்கொண்டு சாப்பிட வேண்டும். அப்படி செய்யாவிட்டால் யமனுடைய அமேத்யத்தை சாப்பிடுகிறதுமன்னியில் பித்ருக்களையும் சாப்பிடச் செய்கிறான். வம்சமும் வ்ருத்தியாகமாட்டாது. அதில் பத்நீ சேஷமென்றும், சின்னவாள் சேஷமென்றும் விசேஷம் ஒன்றும் கிடையாது. அவர்களும் வஸ்வாதிரூபத்தை அடைந்து விட்டவர்களாதலால், ச்ராத்தம் செய்கிற கர்த்தா அந்த சேஷத்தை புஜிக்காவிட்டால் அவனால் கொடுக்கப்படும் ஹவிஸ்ஸை தேவர்களும், கவ்யத்தை பித்ருக்களும் ஒருக்காலும் புஜிக்கிறதில்லை. ச்ராத்தம் செய்யாதது போலவே ஆகும். கர்த்தா ஏகாதசீவ்ரதம் அனுஷ்டிப்படவனாகயிருந்தாலும் பித்ருசேஷபோஜனம் செய்தே தீரவேண்டும். வ்ரத பங்கம் ஆகமாட்டாது. ஜ்ஞாதிகளில், ஏகாதசீவ்ரதம் அனுஷ்டிப்பவனாகயிருந்தால் பித்ருசேஷத்தை ஆக்றாணம் செய்ய வேண்டியது.

*2.* ச்ராத்தத்தில் மிகுந்ததான அன்னத்தை ஸபிண்ட மில்லாதவர்கள் புஜித்தால் அவர்கள் ஸகலமான நரகங்களிலும் மூழ்கின்றனர். போஜனம் செய்து வைத்த கர்த்தாவும், அவனது பித்ருக்களும் அவ்விதமே நரகத்தை அடைகிறார்கள். பார்வண ச்ராத்தத்தில் சிஷ்டமான அன்னம் முதலியதை இதரர்கள் புஜிக்கக்கூடாது.

*3.* விதவைக்கு புருஷன் ச்ராத்தத்தில் ஏகாதசியாயிருந்தாலும் பித்ருசேஷபோஜனம் அவச்யம் செய்ய வேண்டியது. அதனால் வ்ரதபங்கமாகமாட்டாது.

4. அன்யகோத்ரியான சுமங்கலிகள், மாதா, பிதா, தமயன் இவர்களின் ச்ராத்தத்தில் பித்ருசேஷபோஜனம் செய்யலாம். விதவைகள் சாப்பிடவே கூடாது.

5. ஒருவன் மாமனார், அம்மான் இவர்களுடைய பித்ரு சேஷம் சாப்பிடலாம்.

6. பழம், கரி, பக்வமான வ்யஞ்சனம், பால்,தயிர், நெய், தேன், இன்னம் சமைத்தது, சமைக்காதது இப்பொருள் களுக்கு பித்ருசேஷதோஷம் கிடையாது.

7. ஏகோத்தேச்யகமாய் செய்யப்படும் ச்ராத்தத்தில் ஜ்ஞாதிகள் பித்ருசேஷபோஜனம் செய்யக்கூடாது.

8. த்ரிராத்ரஜ்ஞாதிகள் பித்ருசேஷபோஜனம் செய்யக்கூடாது.

## 36. ச்ராத்தாங்க தர்ப்பணம்

1. ஹோமத்துடன் செய்கிற ச்ராத்தங்களுக்கெல்லாம் அங்கபூதமான தர்ப்பணமுண்டு. மாதாபிதாக்களின் ச்ராத்தத்திற்கும், ஸக்ருன்மஹாளயத்திற்கும் அங்கமான தர்ப்பணத்தை மறுநாளிலேயே செய்ய வேண்டியது. மற்ற ச்ராத்தாங்கமான தர்ப்பணத்தை அன்றே செய்ய வேண்டியது.

2. ஜீவபித்ருகன் செய்யும் ச்ராத்தங்களில் அங்கமாக தர்ப்பணம் கிடையாது.

3. ஸபிண்டீகரணம், அநுமாஸிகம், நாந்தீச்ராத்தம், ப்ரதமாப்திகம் இவைகளுக்கு அங்கமாக தர்ப்பணம் கிடையாது.

4. ச்ராத்தசேஷமான திலத்தைக்கொண்டும், தர்ப்பத்தைக் கொண்டும், பரேஹநி தர்ப்பணம் செய்ய வேண்டியது. பரேஹநி தர்ப்பணத்தை ப்ராம்ஹமுஹூர்த்தத்திலெழுந்து ஸ்நானம் செய்த பிறகு செய்துவிட்டு மறுபடி ஸ்நானம் செய்ய வேண்டியது. ஸூர்யோதயமான பிறகு தர்ப்பணம்

செய்யும்படி நேரிட்டால், ஸ்நானம் செய்து ஸந்த்யாவந்தனம் செய்துவிட்டுப் பிறகு செய்ய வேண்டியது. பிறகு ஸ்நானமில்லை. ஔபாஸனஹோமம் செய்ய வேண்டியதுதான்.

## 37. தர்ச ச்ராத்தம் முதலியன

*1. தர்சமும், ஸங்க்ரமணமும் ஒன்று சேர்ந்தால் ஏதாவதொன்றை அனுஷ்டிக்கலாமென்று சிலர் கொள்கை.*

*2.* * யஜ்ராவதெதாං விஷுவாயநெ வெ உஸௌ

த உா விஷுயநெ ஙஸிவெஷு ।ஸ்ூவிுஷ்ுவஜ்ஷுஙஸிதயங

உஸௌதஉாஸ்ாஜ்ஷவாங ஸஷவ ॥

*என்ற விசேஷ வசனத்தால், உஸௌத்தில் விஷு ஷயநங்கள் நேர்ந்தால் அவைகளை செய்ய வேண்டியது. மற்ற 8 மாஸங்களிலும் உஸௌ செய்ய வேண்டியது என்பது சிலர் மதம். உஸௌத்தில் எந்த ஸங்க்ரமணம் நேர்ந்தாலும் ஸங்க்ரமணத்தையே அனுஷ்டிக்க வேண்டும். ஸங்க்ரமணம் நைமித்திகமானதால் என்பது சிலர் மதம்.*

*3. தர்சம், ஸங்க்ரமணம், அர்த்தோதயம் அல்லது மஹோதயம் இவைகள் சேர்ந்தால் அர்த்தோதயம் அல்லது மஹோதயத்தை அனுஷ்டிக்க வேண்டியது.*

*4. தர்சத்தில் க்ரஹணத்தை அனுஷ்டிக்க வேண்டியது.*

*5. பிதா மாதா இறந்துபோன வர்ஷத்தில் தர்ச ச்ராத்தம் முதலியவைகளை அன்னரூபமாகச் செய்யவே கூடாது.*

*6. ஸபிண்டீகரணத்திற்குப் பிறகு திலதர்ப்பணத்தை மட்டும் செய்ய வேண்டும். வேண்டாமென்பது சிலர் கொள்கை.*

*திலதர்ப்பணம்: பிதா இறந்து ஒருவர்ஷ காலத்திற்குப் பிறகு திலதர்ப்பணம் செய்யவேண்டும் என்றும், க்ரஹணம்*

*இவை தீக்ஷிதீய க்ரந்தத்திலில்லை.

முதலிய நைமித்திகம் நேர்ந்தால் அது முதற்கொண்டு செய்ய வேண்டுமென்றும், ஒரு வர்ஷம் க்ரமித்துத்தான் ப்ரேதத்வம் நீங்குகிறதென்றும் சிலர் சொல்லுகிறார்கள். அது ஸரியல்ல. ஏனெனில், ஸபிண்டீகரணத்திற்குப் பிறகு செய்யப்படும் ஸோதகும்பம், மாஸிகம் இவைகளை பித்ருத்வம் வந்துவிட்டதென்ற ந்யாயத்தைக் கொண்டு பார்வணமாகச் செய்கிறார்கள். திலதர்ப்பணத்திற்கு மட்டில் பித்ருத்வம் வரவில்லை என்று நினைப்பது தகுதியாகுமா? அன்றியும் தகப்பனிறந்து ஸபிண்டீகரணம் ஆன பிறகு, ஒரு வர்ஷத்துக்குள் தாயார் ச்ராத்தம் வந்தால் அதற்கு அங்கமான பரேஹநி தர்ப்பணத்தை செய்கிறதா விட்டுவிடுவதா? இதற்கு பதில் அவர்களேதான் சொல்ல வேண்டும்.

7. அவிபக்தர்களான ப்ராதாக்கள், தர்சம் முதலிய ச்ராத்த தினங்களில் வெவ்வேறிடங்களிலிருந்தால் தனித்தனியே ச்ராத்த தர்ப்பணாதிகளைச் செய்ய வேண்டியது.

8. தர்ச ச்ராத்தத்தில் ஸ்திரீகளுக்கு வரணம் கிடையாது. பித்ரு வரணத்துடன் சேர்த்தும் செய்யக்கூடாது. ஆனால் தர்ப்பணமும் பிண்டமும் உண்டு.

9. தகப்பன் உள்ளவனுக்கு பித்ருகார்யங்களில் அதிகாரமில்லை. ஆனால் பித்ருயக்ஞம், நாந்தீ, தீர்த்தச்ராத்தம் இவைகளை தகப்பன் உள்ளவனும் செய்ய வேண்டியது.

10. தகப்பன் செய்தால் யார் தேவதைகளோ அவர்கள் இவனுக்கும் தேவதைகள். தீர்த்த ச்ராத்தத்தில் கயா ச்ராத்தம் கிடையாது.

11. ஆள்காட்டிவிரலையும் கட்டைவிரலையும் சேர்த்து எள்ளை எடுக்கக்கூடாது. கட்டைவிரலாலேயே தள்ளிக் கொள்ள வேண்டியது.

*12. அமாவாஸ்யை இது இரு வகையாகயிருக்கிறது.*

*1. அமாவாஸ்யை. 2 போதாயன அமாவாஸ்யை. போதாயன அமாவாஸ்யை என்பது போதாய ஸூத்ரிகளாலும், காத்யாயன ஸூத்ரிகளாலும் அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது. இந்த போதாயன அமாவாஸ்யைக்கு சந்த்ர தர்சனம் முக்யம். போதாயன அமாவாஸ்யை கழித்த மறுநாளைக்கு மறுநாள், சந்த்ர தர்சனம் ஆக வேண்டியது. வரப்போகிற சங்கதியை முன்னாடி தெரிந்துகொள்ள அடியில் கண்ட வசனங்களும் நிபந்தனைகளும் ஏற்பட்டிருக்கின்றன. அப்படி இருந்தும் சில ஸமயங்களில் தவறி வருகிறது. அப்படித் தவறாமல் சொல்வதற்குத் தெரிந்தவர்கள் ஒருவரையும் காணோம்.*

[illegible] |

अमा च विद्यते कार्या वेदे वाजसनेयके ||

[illegible] |

[illegible] ||

[illegible] |

[illegible] ||

[illegible] |

[illegible] ||

[illegible] |

[illegible] ||

[illegible] |

[illegible] ||

पितृश्राद्धे सामेक्षिणो भवति वंशजः ।
अमावास्याश्राद्धे सामे [illegible] किं भवेद्ध्रुवम् ॥
अकृतस्थितस्य पितृयज्ञे [illegible]
व्यतीपाते क्षणापन्ना यदि काण्डकाण्डानां
[illegible] तु च पितृशेषं ॥

*13. சுக்லபக்ஷம் பஞ்சமிக்குள் திதித்வயம் வரவேண்டும்.*

## 38. மஹாளயம்

*1. மஹாளயபக்ஷத்தில் பரணிக்கு 'மஹாபரணி' என்று பெயர். த்ரயோதசிக்கு, 'கஜச்சாயை' என்று பெயர். மத்யாஷ்டமிக்கு 'கயை' எனப்பெயர். இவைகளிற் செய்யும் ச்ராத்தம், கயா ச்ராத்தத்திற்கு ஸமானம்.*

*2. அமாவாஸ்யை, வ்யதீபாதம், பரணீ, த்வாதசீ, அஷ்டமீ இவைகளில் திதி, நக்ஷத்ரம், வாரம் இவைகளால் ஏற்பட்ட தோஷங்களைக் கவனிக்க வேண்டியதில்லை. மஹாளயபக்ஷத்தைத் தவிர, மற்ற பக்ஷங்களில் ப்ரதமை, ஷஷ்டி, ஏகாதசி, த்ரயோதசி, ஜன்மநக்ஷத்ரம், ரோஹிணீ, ரேவதீ, மகம் இவைகளில் மஹாளயம் கூடாது.*

*3. ஏகவர்க்கத்திற்கு மஹாளயம் செய்யும் விஷயத்தில், த்ரயோதசீ, மகம் இவைகள் கூடாது. இரண்டு வர்க்கத்திற்கும் செய்கிற மஹாளயத்தில் த்ரயோதசீ, மகம் மெத்த ச்லாக்யம். பிள்ளைகள் பிரித்துக் கொண்டாலும், ஒன்றாக இருந்தாலும், ப்ரத்யேகமாய்த்தான் மஹாளயம் செய்ய வேண்டியது. பிரித்துக்கொள்ளாத காலத்தில், மகத்துடன் சேர்ந்த திரயோதசியில் செய்யக்கூடாது. இந்த மகா த்ரயோதசியில் பிண்ட தானம் கிடையாது. இரண்டு அயனங்களிலும், 2 விஷுவங்களிலும், எல்லா யுகாதிகளிலும் பிண்ட தானத்தைத்*

தவிர, ச்ராத்தம் செய்ய வேண்டும். மகாநக்ஷத்ரத்தில் பிண்டப்ரதானம் கூடாது. அந்வஷ்டகை, வ்ருத்தி, மஹாளயம், ப்ரத்யாப்திகம், கயை இவைகளில் மாதாவுக்குத் தனியாக வரணமுண்டு.

4. காருணிக பித்ருக்களாவன: சிறிய தகப்பன், பெரிய தகப்பன், தமையன், தம்பி, பிள்ளைகள், அத்தை, அம்மான், பெரிய தாயார், சிறிய தாயார், ஸகோதரிகள், தங்கை தமக்கைகளின் புத்ரர்கள், பார்யை, மாமனார், அத்திம்பேர், மாட்டுப்பெண், மைத்துனன், குரு, யஜமானன், ஸ்நேகிதன் இவர்களுக்கும் மஹாளயத்தில் ச்ராத்தம் செய்ய வேண்டும். பிள்ளையுள்ள சிறிய தகப்பனுக்கு வேண்டியதவச்யமில்லை.

5. சிலர் ஸபத்நீமாதாவை காருணிக பித்ருக்களில் சேர்த்து வரணம் செய்கிறார்கள். அது பிசகு. அவள் மாதாவைப் போலவே தவிர, காருணிக பித்ருக்களில் சேரமாட்டாள்.

6. மஹாளயச்ராத்தத்தை அன்னரூபமாய்ச் செய்கிறவர்களும், ஹிரண்யரூபமாய்ச் செய்கிறவர்களும், ப்ரதிவர்ஷமும் அவ்விதமே செய்ய வேண்டுமென்ற நியமமில்லை. தேச கால சக்த்யனுஸாரமாய் மாரிச் செய்வதால் தோஷமில்லை.

7. விதுரர்கள் மஹாளயத்தை அன்னரூபமாய்ச் செய்ய அதிகாரமுள்ளவர்களல்ல.

8. மாதா ஜீவித்திருந்தால் மஹாளயத்தில் மாத்ரு வர்க்கத்தக்கு வரணமில்லை. ஸபத்நீமாதா ஜீவித்திருந்தாலும் பிதாமஹ்யாதிகளுக்கு வரணமில்லை. ஆனால் மாதாவோ அல்லது ஸபத்நீமாதாவோ இறந்து போயிருந்தால் அவர்களுக்கு மட்டில் வஸுரூபமாக வரணம் செய்ய வேண்டுமென்று தோன்றுகிறது. இரண்டு பேரும் இறந்து போயிருக்கும் பக்ஷத்தில் க்ரமப்படி மாத்ருவர்க்கத்திற்கும் ஸபத்நீமாதாவுக்குத் தனியாகவும் வரணம் உண்டு.

9. ஸன்யாஸியின் மஹாளயத்தை த்வாதசியிலேயே செய்ய வேண்டியது. மற்ற திதிகளில் செய்யக்கூடாது. ஆனால் த்வாதசியில் ஸந்யாஸியல்லாத மற்றவர்களுக்குச் செய்யலாம்.

10. சஸ்த்ரஹநநம் முதலியவற்றால் துர்மரணமடைந்தவர் களுக்கு சதுர்தசியிலேயே மஹாளயம் செய்ய வேண்டியது. வேறு திதியில் செய்யக்கூடாது. வேறெவர்க்கும் அந்த திதி கூடாது.

11. மாதாமஹாதிகளை ஸபத்நீகர்களாக வரிக்க வேண்டும். மாதா மஹ்யாதிகளுக்குத் தனியாய் வரணம் செய்யக்கூடாது.

12. மஹாளயம் செய்வதற்கு முன் பிறர் மஹாளயத்தில் வரிக்கப்பட்டு புஜிக்கலாகாது.

13. தாயார் ஜீவித்திருந்தால் மஹாளயத்தில் பிதாமஹ்யாதிகளுக்கு வரணமில்லை. ஆனால் பிண்ட தர்ப்பணங்களுண்டு.

14. மாதாபிதாக்களின் ச்ராத்தம் வருகிற மாஸத்தில் ச்ராத்தத்திற்கு முன் மஹாளயமாவது, மஹாளய தர்ப்பணமாவது செய்யக்கூடாது.

15. மஹாளயத்தில் விச்வேதேவர், விஷ்ணு இவர்கள் இல்லாமல் செய்யவே கூடாது. செய்தால் ராக்ஷஸர்கள் அபஹரித்து விடுகிறார்கள்.

16. மஹாளயத்தை அன்னரூபமாகச் செய்கிறவர்கள் சிலர் பித்ராதிகளுக்குத் தனியாய் பாகமும், மாதாமஹாதிகளுக்குத் தனியாய் பாகமும் செய்கிறார்கள். அது வேண்டியதில்லை. அதற்கு சாஸ்த்ரமும் இல்லை.

## 39. நாந்தீச்ராத்தம்

1. பத்னியின் முதலாவது ரஜோதர்சனம், கர்ப்பாதானம், பும்ஸவனம், ஸீமந்தம், ஜாதகர்மம், பிறந்த குழந்தையை முதலில் பார்த்தல், நாமகரணம், அன்னப்ராசனம், சௌளம், உபநயனம், உபாகர்மம், ப்ராஜாபத்யாதி வ்ரதம்,

ஸமாவர்த்தனம், கோதான வ்ரதம், விவாஹம், யக்ஞம், ப்ரதிஷ்டை, நூதன க்ருஹப்ரவேசம், ராஜ்யாபிஷேகம், ஆச்ரம ஸ்வீகாரம் இவைகளில் நாந்தீ ச்ராத்தம் செய்ய வேண்டியது.

ஸர்வேஷ்வபி ச கார்யேஷு ச்ராத்தமேவம் ஸ்ம்ருதம் ।

என்பது பொதுவசனம். ஆனால் ஆபஸ்தம்பீயர்கள் அடியில் கண்ட வசனப்படி அனுஷ்டித்து வருகிறார்கள்.

ஸீமந்தோந்நயநே விவாஹே ச ஸவனே ஜாதகர்மணி

நாமோபகர்மஸ்நானேஷு ப்ருதக்ஷேத்ர ஸம்பவே ।

ப்ராஹ்மணான் போஜயேத்தத்ர வாசயேதாசிஷஸ்ததா ॥

2. அனேக சுபகார்யங்கள், அதாவது உபநயனத்துக்கு, முன் ஜாதகர்மம் முதல் சேர்த்துச் செய்யப்படும்போது, நாந்தி ஒன்றுதன். நாந்தியில் தயிர் இலந்தைப்பழம் சேர்த்து பிண்டம் செய்ய வேண்டியது. கிழக்கு முகமாய் உட்கார்ந்துகொண்டு கிழக்கு நுனியாக தர்ப்பத்தைப் போட்டு அதில் இரண்டிரண்டு பிண்டம் வைக்கவேண்டியது. அப்ரதக்ஷிணம் அபஸவ்யம் கூடாது. எள்ளுக்குப் பதில் யவையை உபயோகப்படுத்த வேண்டும். பித்ர்ய மந்த்ரங்களை ஜபிக்கக் கூடாது. ஸ்வதாவாசநம் கூடாது. பாத்ரத்தைத் தலைகீழாகக் கவிழ்க்கக்கூடாது. கோத்ரத்தைச் சொல்லி ஒரு பிண்டமும், மௌனமாக ஒரு பிண்டமும் ஆக இரண்டு பிண்டங்களைக் கொடுக்க வேண்டும். இதை ஆமமாயாவது ஹிரண்யமாயாவது செய்யலாம்.

3. நாந்தீச்ராத்தத்தில் ஒவ்வொரு வரணத்திற்கும் இரண்டு ப்ராம்ஹணர்களை வரிக்க வேண்டியது.

வ்ருத்திச்ராத்தே விவாஹே ச த்விகுணாஸ்த ஸர்வதா ।

என்ற வசனப்படி.

வ்ருவிதாஜஹ விதாஜஹ வித்ரு

என்று வரிக்க வேண்டியது.

4. நாந்தியில் மாத்ருவரணம் முதலில் செய்ய வேண்டியது. பிறகு பித்ருவரணம் செய்ய வேண்டியது.

5. நாந்தி செய்த 6 தினங்களுக்குள் வேறு நாந்தியை செய்யக்கூடாது.

6. பிதா, ப்ராதா ஒருவருமில்லாதவனுக்கு அன்யன் உபநயனம் செய்யும் பக்ஷத்தில் அவனே நாந்தீச்ராத்தம் செய்ய வேண்டியது. உபநயனம் செய்யப்படுகிறவனுடைய பித்ராதிகள் ச்ராத்ததேவதைகளாவார்கள்.

7. பிதா, ப்ராதா இல்லாத மாணவகனுக்கு அன்யன் ப்ராஜாபத்யாதி வ்ரதஸமாபனத்தில் ஆசார்யனானால், அந்த நாந்தீ ச்ராத்தத்தில் ஆசார்யனுடைய பித்ராதிகள் ச்ராத்த தேவதைகளாவார்கள்.

8. நாநி கூநுஸாகூத்தில் கர்த்தாவுக்கு அன்றைய தினம் மட்டில் நியமம். நிம்ந்தரணம் சாப்பிட்ட பேர்களுக்கு 3 நாள் வஜநூ செய்ய வேண்டும்.

9. நாநி செய்த க்ருஹத்தில் ஆஜு்ம் கூவ்ருதூஜு்ம் வஞூஸம் ஸபிண்டீகரணம், வ்ருத்ராஸ்லிகம் இந்த ஐந்து தவிர, 3 மாஸம் வரையில் ஜஸூம் ஸங்க்ரமணம், மந்வாதி யுஹாஜி வகையறாவுக்கு கஹஸ்ரீாஜும் செய்யக்கூடாது. கர்த்தாவுக்கும் இந்த விதிதான். தினந்தோறும் செய்யும் ஸ்நாநாங்க தர்ப்பணத்தில் விவாஹமானால் ஒரு வர்ஷத்திற்கும், உபநயன மானால் 6 மாஸத்திற்கும் சௌளமானால் 3 மாஸத்திற்கும் நாநி செய்த கர்த்தா எள்ளையும் தர்ப்பையையும் உபயோகிக்கக் கூடாது. நைஜிதிகஞு காஜுஞு திமெைவ வியியதெ தர்சாதி தர்ப்பணங்களெல்லாம் எள்ளும் தர்ப்பையையும் கொண்டுதான் செய்ய வேண்டும்ஜீவ ஹிதுஸ்நாநாங்க

தர்ப்பணத்தில் கருப்பு எள்ளை உபயோகிக்கக் கூடாது.

10. இரு கைகளினாலும் பித்ருதர்ப்பணம் செய்யக்கூடாது. ஞாயிற்றுக்கிழமை, ஜன்ம நக்ஷத்ரம், வீட்டுக்குள், சோபனக்ருஹம், சோபனதினம் இவைகளில் எள்ளுகூடாது. வீட்டில் செய்ய -வேண்டியதாயிருந்தால் ஒரு பாத்ரத்தில் எள்ளும் ஜலமும் வைத்துக் கொண்டு மற்றொரு பாத்ரத்தில் தர்ப்பணம் செய்ய வேண்டியது.

11. ஜீவபித்ருகன் ஒருவன் நாந்தி செய்தால் அவனுக்கு தாயார் இல்லாவிடினும், தகப்பன் யாரை உத்தேசித்து செய்கிறானோ அவர்களையே உத்தேச்ய தேவதைகளாகச் செய்ய வேண்டியது.

12. பத்நி ரஜஸ்வலையாக இருந்தால் நாந்தி செய்யக்கூடாது.

## 40. மலமாஸ விசேஷம்

1. மலமாஸம் என்பது 2 அமாவாஸ்யை அல்லது 2 பூர்ணிமை உள்ள மாஸம், 2 ஸங்க்ரமணமுள்ள மாஸம், ஸங்க்ரமணமில்லாத மாஸம்.

2. அதிகமாஸம் என்பது சாந்த்ரமானப்படி 12 மாஸத்திற்கு மேல் வருபவை.

3. அக்னிஹோத்ரம் எடுத்துக்கொள்வது, சாலை, ப்ரதிஷ்டை, யக்ஞம், தர்மம், வ்ரதம், காம்ய வ்ருஷோத்ஸர்ஜனம், சௌளம், உபநயனம், விவாஹம், ராஜ்ய பட்டாபிஷேகம், நாந்தி, காம்ய ச்ராத்தங்கள், தடாக ப்ரதிஷ்டை, ஆச்ரமஸ்வீகாரம், தீர்த்தயாத்ரை, க்ஷேத்ரயாத்ரை, அன்னப்ராசனம், க்ருஹப்ரவேசம், வேதோபாகர்மம் இவைகளை மலமாஸத்தில் செய்யக்கூடாது.

4. அதிமாஸம் வருகிற வர்ஷத்தில் சாந்த்ரமானப்படி இரண்டு மாஸங்களிலும் பித்ருகார்யங்களைச் செய்ய

வேண்டியது. தேவகார்ய்களை பிந்திய மாஸத்தில் செய்ய வேண்டியது.

5. ஆனால் தர்சாந்தத்தில் சாந்த்ரமான மாதத்தை அநுஷ்டிப்பவர்களுக்குத்தான் ச்ராத்தம் முதலியவற்றில் மலமாஸ தோஷத்தைக் கவனிக்க வேண்டும். ஸௌரமானத்தைஅனுஷ்டிக்கிறவர்களுக்கு ஒரே பேருள்ள இரண்டு மாஸமில்லாததால் மலமாஸதோஷமில்லை.

6. குரு சுக்ரமௌட்யம்: குரு சுக்ரர்களின் அஸ்தமனம், வ்ருத்தத்வம், பால்யம், இவைகளிருக்கும் காலத்தில் நாமகரணம், அன்னப்ராசனம், சௌளம், உபநயனம் விவாஹம், ஜாதகர்மம், வேதாரம்போத்ஸர்ஜனங்கள், காம்யகர்ம இவைகளைச் செய்யக்கூடாது. புது ஆபரணம், வஸ்த்ரம், இவைகளை தரிக்கக்கூடாது. க்ருஹப்ரவேசம், கோதானம், ஆச்ரமஸ்வீகாரம், மகோத்ஸவம் இவைகளைச் செய்யக்கூடாது.

7. குரு, சுக்ரன் இவர்கள் ஸூர்யனுடைய ஸாமீப்யத்தால் மறைந்து போகும் காலம் மௌட்யம். மௌட்யத்திற்கு முந்தினது வார்த்தகம், பிந்தியது பால்யம். கிழக்கிலானால் சுக்ரனுக்கு வ்ருத்தத்வம் 15 நாள், மேற்கிலானால் 5 நாள், கிழக்கிலானால் பால்யம் 5 நாள், மேற்கிலானால் 10 நாள் குருவுக்கு கிழக்கு மேற்கு இரண்டு திக்குகளிலும் வார்த்தகம் 15 நாள், பால்யம் 15 நாள். இந்தக் காலங்களில், மலமாஸத்தில் எது எது செய்யக்கூடாததோ அவைகளைச் செய்யக்கூடாது.

## 41. ச்ரார்த்தத்தைக் கொண்டாடுதல்

1. ச்ராத்தத்தைவிட நன்மை தரத்தக்க வேறு காரியம் கிடையாது. தெரிந்தவன் எல்லா முயற்சியுடனும் ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும். இந்த லோகத்தில், ச்ராத்தம்

செய்ய வேண்டும் என்ற அவாவுடையவன் ரோகமில்லாமலும், நல்ல ஸ்வபாவத்துடனும், தீர்க்காயுசுள்ளவனும், பிள்ளை பேரன்களுடன் கூடினவனாயும், எல்லா கர்மங்களும் உள்ளவனாயும் இருப்பான். சிராத்தம் செய்தவன் பரலோகத்திலும் மேலான ஸந்தோஷத்தையும் எசஸ்ஸையும் அடைகிறான். யாதொருவன் சிராத்தத்தில் பித்ருக்களையும் தேவர்களையும் அக்நியையும் திருப்தி செய்து வைக்கிறானோ அவன், ஸர்வ ப்ராணிகளும் அந்தர்யாமியாய் வஸிக்கும் ஸ்ரீமகாவிஷ்ணுவையே த்ருப்தி செய்து வைத்தவனாகிறான். புத்திமான் ச்ராத்த விஷயங்களைத் தெரிந்து அதன்படி நடந்து பலனையடைய வேண்டும்.

2. இந்தப் புண்ணியமான ச்ராத்த விதியை யார் எழுதுகிறானோ, எவன் படிக்கிறானோ அவன் ஸர்வாபீஷ்டங்களையும் அடைந்தவனாகிறான். நிஸ்சயமாய் புனர்ஜன்மம் இல்லாதவனாகிறான்.

3. எந்த இடத்தில் ச்ராத்தம் செய்யாமல் விடப்பட்டதோ, பித்ருக்கள் இல்லை என்று எவன் மனதில் நினைத்து ச்ராத்தம் செய்யவில்லையோ அவனுக்கு எவ்வித நன்மையும் கிடையாததுடன், அவனுடைய பித்ருக்கள் ரத்தத்தை புஜிக்கிறார்கள். அவனுக்கும் நரகத்தைத் தவிர வேறு இடம் இல்லை.

4. சிராத்த பித்ரு தேவதைகளான வஸு, ருத்ரர், ஆதித்யர் என்பவர்கள் ச்ராத்தத்தினால் திருப்தியடைந்தவர்களாகி, செய்யும் கர்த்தாவினுடைய பித்ருக்களை த்ருப்தி பண்ணி வைக்கிறார்கள். திருப்தியடைந்த பித்ருக்கள், கர்த்தாவுக்கு ஆயுஸ், புத்தி, தனம், வித்தை, ஸ்வர்க்கம், மோக்ஷம், தனம், ராஜ்யம், புத்ரலாபம் முதலானவைகளைக் கொடுக்கிறார்கள் என்பது ஸித்தாந்தம்.

## 42. ச்ராத்தத்தின் ப்ரயோஜனம்

அக்நௌ ஹுதேந தேவாச்ச ஸர்வேஸ்தா விப்ரபோஜநாத் ।

யக்ஷா: பிண்டப்ரதாநேந கந்தர்வா ப்ராஹ்மணபோஜநாத் ॥

உச்சிஷ்டேந பிசாசாத்யா: நாகா விகிரேண து ।

அஜாதா: காகபிண்டேந ச்ராத்தே த்ருப்யந்தி ஸர்வதா ॥

தர்மசாஸ்த்ர ஸங்க்ரஹே ச்ராத்தகாண்டஸமாப்தி: ॥

தர்ம சாஸ்த்ரச் சுருக்கத்தில், ச்ராத்த காண்டம் முற்றுப்பெற்றது.



# எள்ளும் தண்ணீரும் எங்கே போயின?

## - ஒரு விளக்கம்

மனுஷ்யராகப் பிறந்த எல்லோரும் தங்களுடைய முன்னோர், தெய்வம், இவர்களுக்கு நன்றி தெரிவிக்க வேண்டும். இதுவே பித்ரு கடன், தேவகாரியம் என்பவை. நம்முடைய சக ஜீவர்களுக்கு நம்மால் ஆனதைச் செய்ய வேண்டும்.

தாய் தந்தையர் உயிருடன் இருக்கும் வரையில் அவர்களிடம் பணிவுடன் நடந்து கொண்டு, அவர்களுக்கு நம்மால் இயன்ற சௌகரியங்களைச் செய்து தரவேண்டும். தாய் தந்தையர் நமக்காக ஆதியில் செய்துள்ள தியாகங்களுக்கு நாம் பிரதியே செய்ய முடியாது. அவர்களது மனம் கோணாமல் அவர்களை வைத்துக் காப்பாற்ற வேண்டும்.

அவர்கள் இந்த உலகத்தை விட்டுப் போன பிற்பாடும், அவர்களுக்காகச் சாஸ்திரப் பிரகாரம் தர்ப்பணம், சிரார்த்தம் (திதி) இவற்றை அனைவரும் தவறாமல் செய்ய வேண்டும்.

பெற்றோர் உயிருடன் இருக்கும் வரையில், அவர்களை வைத்துப் பராமரிக்க வேண்டும் என்பதைச் சீர்திருத்தக்காரர்களும் ஒப்புக் கொள்ளுகிறார்கள். ஆனால் அவர்கள் மரணம் அடைந்தபின் பித்ரு காரியம் செய்வது அவர்களுக்குப் பரிகாசமாக இருக்கிறது.

''என், தர்ப்பண ஜலம், பிண்டம், அரிசி, வாழைக்காய் சாப்பாடு எல்லாம் இங்கேயே இருக்கின்றன; அல்லது கண்

முன்னாலேயே ஒருத்தன் எடுத்துப் போனான்; அல்லது சாப்பிட்டான். பிதிரர்கள் எங்கேயோ மறு ஜன்மா எடுத்து விட்டார்கள் என்று நீரே சொல்லுகிறீர். அப்படி இருக்க இங்கே உள்ள வஸ்து அங்கே போய் அவர்களைச் சேருகிறது என்பது பைத்தியக்காரத்தனம் அல்லவா?'' என்று சீர்திருத்தக்காரர் கேட்கிறார். அவர் வாய் விட்டுக் கேட்கிறார்; உங்களில் பலருக்கு இந்தச் சந்தேகம் இருக்கலாம்.

உதாரணத்துக்கு ஒரு கதை சொல்லுகிறேன்: ஒருவர் பையனைப் பட்டணத்தில் படிக்க வைத்திருந்தார். அவன் பரீட்சைக்குப் பணம் கட்ட வேண்டி இருந்தது. அதுவும் மறுநாளே கட்ட வேண்டி இருந்தது. உடனே அப்பாவுக்கு ''தந்தி மணியார்டரில் பணம் அனுப்பு!'' என்று எழுதினான். அப்பாவுக்குத் தந்தியும் மணியார்டரும் தனித்தனியாகத் தெரியும். பிள்ளையோ தந்தி மணியார்டர் அனுப்பும்படி எழுதி இருந்தான். அப்பா தபாலாபீசுக்குப் போனார். குமாஸ்தா கம்பியில் ஓட்டை பண்ணித் தந்திக் கம்பியில் ரூபாயை அனுப்புவார் என்று அவர் எதிர்பார்த்தார். ''தந்தி மணியார்டரில் அனுப்புங்கள்'' என்று அவரிடம் சொன்னார்.

ஆனால் பணம் வாங்கிக் கொண்ட குமாஸ்தா ரசீது கொடுத்துவிட்டு ''உம்முடைய பணம் சேர்ந்துவிடும் அனுப்பியாகிவிட்டது!'' என்று சொல்லிவிட்டார். குமாஸ்தா பணத்தை வாங்கிப் பெட்டியில் போட்டதையும், ஓட்டை பண்ணிக் கம்பியில் கோர்க்கவில்லை என்பதையும் பார்த்த அப்பாவுக்குச் சந்தேகம் ஏற்பட்டது. ''என் பணம் இங்கேயேதானே இருக்கிறது? அதில் ஓட்டை ஒன்றும் போட்டு அனுப்பவில்லையே? அது எப்படி என்னுடைய மகனுக்குப் போய்ச் சேரும்?'' என்று கேட்டார்.

குமாஸ்தா ''அது போய்ச் சேர்ந்துவிடும். கவலை வேண்டாம்!'' என்று மறுபடியும் சொல்லிவிட்டுக் கட்டுக்

கடகட என்று தந்தியும் அடித்தார். ''ஏதோ லொட்டு லொட்டென்று சப்தம் பண்ணுகிறான். சேர்ந்துவிடும் என்று சொல்லுகிறான். ரூபாய் இங்கேயே இருக்கிறது. லொட்டு லொட்டென்று கட்டையை இங்கே அடித்தால், பணம் எப்படி அங்கே போய்ச் சேரும்?'' என்று சந்தேகப்பட்டுக் கொண்டே வீடு திரும்பினார்.

ஆனாலும் பணம் போய்ச் சேர்ந்து விட்டது!

தர்ப்பணம் முதலியன பண்ணுவதும் அந்த மாதிரியே ஆகும். நாம் எதைக் கொடுத்தாலும் அதற்கான சட்டப்படி கொடுக்க வேண்டும். சாஸ்திரம் என்கிற சட்டம் விதித்துள்ளபடி, நாம் கொடுப்பதைத் தெரிந்து கொள்ளுகிற பிதுர் தேவதைகள், அது யாருக்குப் போக வேண்டுமோ அவர்களிடம் கொண்டு போய்ச் சேர்த்து விடுவார்கள்.

குதிரையாகப் பிறந்திருந்தால் புல்லாக்கில் போடுவார்கள். பரமேசுவரன் இப்படி உத்தரவு பண்ணி இதற்கான சக்தியும் தந்திருக்கிறார். ஆகையால் சிரார்த்தத்தன்று கொடுப்பதைப் பெற்றுக் கொள்ள அப்பா நேரில் வர வேண்டியதில்லை. ஆனால் கொடுப்பவை அவருக்குப் போய்ச் சேர்ந்துவிடும்!''

தந்தி மணியார்டர் செய்தவனுடைய பணமோ வாங்கிக் கொள்ளுகிறவனிடம் நேராகப் போய்ச் சேர்ந்து விடுகிறதில்லையா? மணியார்டரைப் பெறுபவர் வேறு தேசத்தில் இருந்தால் அங்கே நம் ரூபாய் நோட்டு செல்லவே செல்லாது. இங்கே ரூபாயைக் கட்டினாலும் வெளிதேசத்தில் டாலராகவோ, பவுனாகவோ மாற்றித் தரவும் ஏற்பாடு இருக்கிறது. ஆனால் நம்முடைய ஊரில் டாலரையோ, பவுனையோ கட்ட முடியாது. இங்கே செல்லுபடியாகிற ரூபாயைத்தான் ஏற்றுக் கொள்ளுவார்கள். அப்படியே சாஸ்திரப்பிரகாரம் விதிக்கப்பட்ட எள், தண்ணீர், வாழைக்காய் ஆகியவற்றை இங்கே தந்தால், பித்ருக்கள்

இருக்கும் இடத்தில் அவர்களுக்கு ஏற்ற உணவாக அளித்து விடுவார்கள்.

பித்ருக்களிடம் நமக்குள்ள நன்றி மனோபாவமும், சாஸ்திரத்தில் நமக்குள்ள சிரத்தையுமே முக்கியம். "இன்னொருவனுடைய ஆரோக்கியத்துக்காக நான் 'டோஸ்ட்' சாப்பிடுகிறேன்!" என்று பார்ட்டியில் வெள்ளைக்காரர்களும், வேறொருவன் பேரைச் சொல்லிக் கொண்டு, தாங்களே போஜனம் செய்கிறார்கள். தங்களுடைய மனோபாவத்தின் சக்தி இன்னொருவனுக்கு ஆரோக்கியத்தை உண்டாக்கும் என்று நம்பி அப்படிச் செய்கிறார்கள்.

சிரார்த்தம் என்பதற்கே சிரத்தையுடன் பண்ணுவது என்று அர்த்தம். சிரத்தை நமக்கு முக்கியம். ஒரு காரியம் என்று பண்ண ஆரம்பித்தால், அதற்குரிய சட்டப்படித்தான் பண்ண வேண்டும். லெட்டர் எழுதினால், "இப்படித்தான் அட்ரஸ் எழுதுவேன். அந்தத் தபால் பெட்டியில் போடுவானேன்? எங்கள் அகத்தில் அதைவிட நல்ல பெட்டி செய்து, அதில் போட்டுவிடுவேன்!" என்று சொல்லலாமா? காரியம் இல்லாத மனோபாவமாக இருக்கிற வரையில், அன்பு, பக்தி, ஞானம் இவற்றைக் கட்டுப்பாடின்றி செலுத்தலாம். காரியம் என்று செய்யும்போது, அதற்கு ஏற்பட்ட விதியை விடவே கூடாது!

'தெய்வத்தின் குரல்' (முதற்பகுதி) என்ற நூலிலிருந்து



# பித்ருவழிபாடும் புனித கயாவும்

*முத்தாய்ப்பாக, காஞ்சிப் பெரியவர் வாக்கிலிருந்து:*

*இந்து மதத்தைச் சேர்ந்த ஒவ்வொருவரும் தனது வாழ்நாளில் செய்ய வேண்டிய முக்கியமான கடமை, காசிக்குச் சென்று கங்கா ஸ்நானம் செய்வது - அவ்வாறு செல்லும்போது காசி - பிரயாகை - கயா ஆகிய மூன்று புண்ணிய ஸ்தலங்களிலும் பித்ருக்களுக்கு செய்ய வேண்டிய கடமைகளைச் செய்வது என்றும் நமது மனதில் தெய்வமாக விளங்கும் ஸ்ரீ காஞ்சி மகாப் பெரியவர்கள், மூதாதையர்களுக்கு செய்ய வேண்டிய கடமையைப் பற்றி தெளிவாக விளக்கியிருப்பதாவது...*

மனிதனாகப் பிறந்த எல்லோரும் தங்களுடைய முன்னோர்கள், தெய்வம் இவர்களுக்கு நன்றி தெரிவிக்க வேண்டும். இதுவே 'பித்ரு கடன்' 'தேவகாரியம்' என்பவை. நம்முடன் வாழும் மக்களுக்கு, நம்மால் ஆனதைச் செய்ய வேண்டும். குறைந்தது ஒரு அதிதிக்கு உணவளிக்க வேண்டும். இது மனித யக்ஞம் 'பிரம்மயக்ஞம்' என்பது வேதம் ஓதுவதும் ஓதுவிப்பதுமே. இனி மனித குல நன்மைக்காக அந்தணர்கள் மட்டும் செய்ய வேண்டியது. மனிதனாக இல்லாதுள்ள மிருகங்களுக்குக்கூட அன்பைத் தெரிவித்து, உணவு ஊட்டுவது 'பூதயக்ஞம்' ஆக மனிதனாகப்பட்டவன் 'பித்ருயக்ஞம்', மனித யக்ஞம்,

பிரம்ம யக்ஞம், பூத யக்ஞம் ஆகிய கடமைகளைக் கட்டாயம் செய்தாக வேண்டும். தாய் தந்தையர் மற்றும் மூதாதையருக்கு உயிருடன் இருக்கும்போது பணிவிடை செய்து சேவை செய்ய வேண்டும். அவர்கள் உலகை விட்டுப் போன பிறகு, அவர்களுக்காக சாஸ்திரம் கூறியுள்ளபடி, தர்ப்பணம் சிராத்தம் ஆகியவற்றை தவறாமல் செய்ய வேண்டும். பித்ருக்களிடம் நாம் காட்டும் நன்றியிலும் அவர்களுக்குச் செய்யும் கடமைகளிலும் சிரத்தை இருக்க வேண்டியது முக்கியம். இதனாலேயே இதை 'சிராத்தம்' என்றழைக்கிறோம்.

காஞ்சி மகாப் பெரியவர்கள் கூறியுள்ளபடிசெய்யும் பித்ரு கடமைகளை காசி - பிரயாகை - கயாவில் செய்வது மிக மிக விசேஷம். அதற்கான யாத்திரையைத் தொடங்கும்போது முதலில் இராமேஸ்வரம் சென்று சகல கர்மாக்களையும் செய்து அங்குள்ள மணலில் ஒரு பிடி எடுத்துக்கொண்டு திரிவேணிக்குச் செல்ல வேண்டும். அங்கு திரிவேணியில் மணலை கரைத்துவிட்டு, திரிவேணி சங்கமத்தில் ஸ்நானம் செய்ய வேண்டும். திரிவேணி சங்கமம் என்றால் என்ன? யமுனை நதி (வேணி - நதி) மேற்கிலிருந்து கிழக்கே பாய்கிறது. கங்கை நதி வடமேற்கிலிருந்து வந்து தென்கிழக்கில் யமுனை நதியுடன் கலக்கிறது. சரஸ்வதி நதி அரூபமாக அடியில் பாய்ந்து ஓடுகிறது. இதைப் பார்க்க முடியாது. இந்த மூன்று நதிகளும் இணையும் சங்கமமே திரிவேணி சங்கமம் என்ற பிரயாகை. பிரயாகை என்ற பெயர் எப்படி வந்தது?

பிரம்மா கலைத்தேவியாக ஒரு பெண்மணியை சிருஷ்டிக்க, அவளது கலைத் திறமையில் தன் நிலை மறந்தார். அவளை பின் தொடரத் தொடங்கினார். ஆனால் பிரம்மா தன்னைப் படைத்தவராதலால் அவரைத் தந்தையாகக் கருதி, அவரிடம் இருந்து ஓடி ஒளிய நதியாக

உருவெடுத்து கங்கைக்கும், யமுனைக்கும் அடியில் மறைந்து விட்டாள். ஆனால் பிரம்மா, மகாவிஷ்ணுவிடம் சரஸ்வதியை தனக்கு மணம் செய்து தருமாறு வேண்டினார். மகாவிஷ்ணு சரஸ்வதியை வெளியே அழைத்து பிரம்மாவுக்கு மணமுடித்து வைத்தார். அதற்கு பிறகு மனநிறைவு பெற்ற பிரம்மா இங்கு பிரம்மயாகம் செய்ய 'பிரயாகம்' அல்லது 'பிரயாகை' என்று அந்த இடத்திற்குப் பெயர் வந்தது.

திரிவேணியில் பித்ருக்களுக்காக சிராத்த காரியங்களை இரண்ய சிராத்தமாக சாப்பாடு போடாமல் செய்து முடிக்கின்றனர். அதன் பிறகு தம்பதியராக இணைந்து வேணீதானம் செய்கின்றனர். இது வித்தியாசமான, மிக இனிமையான, முக்கியமான பூஜை சிறிய முறத்தில் சீப்பு, கண்ணாடி, குங்குமச் சிமிழ், அரிசி, வெற்றிலை, பாக்கு, பழம், ரவிக்கைத் துணி, தட்சிணை ஆகியவற்றை வைத்து பண்டாக்களுக்கு தானம் செய்கின்றனர். அப்போது மனைவி கணவனை மாதவனாகக் கருதி, வாழ்நாளில் தான் செய்யும் கடமைகளில் தான் செய்திருக்கக் கூடிய சிறு தவறுகளுக்கு மன்னிக்குமாறு வேண்டுகிறாள். இந்த இனிய கருத்துப் பரிமாறலில் தாம்பத்தியம் புதிய பலத்தைப் பெறுகிறது. இதன் பிறகு இராமேஸ்வரத்தில் ஸ்ரீ ராமநாதர் அபிஷேகத்திற்காகவும், உறவினர்களுக்குக் கொடுக்கவும்,வீட்டில் பூஜை செய்யவும் கங்கை நீரை பிரயாகையிலிருந்துதான் எடுத்துச் செல்ல வேண்டும். இயன்றவர்கள் பிரயாகையில் தம்பதி பூஜை செய்வார்கள்.

திரிவேணியில் இந்த பூஜைகளை செய்ய படகில் ஏறி நடுப்பகுதியிலுள்ள மணற்பரப்பிற்குச் செல்ல வேண்டும். பூஜைகள் முடித்து திரும்பும்போது படகில் அமர்ந்து பொரி கடலை வாங்கிப் படகில் அமர்ந்தபடி மீன்களுக்கு உணவிடுகின்றனர். மலர், குங்குமம், வளையல் ஆகியவற்றை கங்காதேவிக்கு அர்ப்பணிக்கின்றனர். அந்த

இடத்தில் விளங்கும் தூய்மையும், பக்தி உணர்வும், பக்தர்களின் நெஞ்சை நனைக்கின்றன.

பிரயாகையிலிருந்து காசிக்குச் செல்ல வேண்டும். காசியில் அஸி, வருணா, பஞ்சகங்கா, தசாச்வமேதம், மணிகர்ணிகா ஆகிய பஞ்ச கட்டங்களில் ஸ்நானம் செய்து பித்ருக்காரியங்களை முடித்துக்கொண்டு, காசி விசுவநாதர், அன்னபூரணி தரிசனங்களை முடித்துக்கொள்ள வேண்டும். அதுவும் முடியாதவர்கள் முக்கியமாக மணிகர்ணிகா கட்டத்தில் நீராடி பித்ரு காரியங்களைச் செய்து காசி விசுவநாதரைத் தரிசிக்க வேண்டும். காசியில் பல கோடி தீர்த்தங்கள் இருக்கின்றன. ஆனால் மணிகர்ணிகையில் ஸ்நானம் செய்தால் எல்லாத் தீர்த்தங்களிலும் நீராடிய பலனைப் பெறலாம். அப்படி என்ன மணிகர்ணிகாவில் விசேஷம்? இந்தக் கட்டத்திற்கு அப்பெயர் எப்படி வந்தது?

மணிகர்ணிகா கட்டத்தின் அருகில் 'சக்கர தீர்த்தம்' என்று ஒரு குளம் மகாவிஷ்ணுவால் உருவாக்கப்பட்டது என்பது ஐதீகம். மகாவிஷ்ணு தனது கையில் உள்ள சக்கராயுதத்தால் அந்த குளத்தை வெட்டியதாகவும், அவருடைய திருமேனியிலிருந்து வடிந்த புனித நீர் குளத்தை நிறைத்ததாகவும் கூறப்படுகிறது. அந்த திருக்குளத்தில் நீராட பரமேஸ்வரனும் பார்வதி தேவியும் அங்கு வந்தனர். நீராடி முடிந்ததும் ஈசன் ஆனந்த நடனம் ஆடத் தொடங்கினார்.

அப்போது அவர் காதிலிருந்து குண்டலாபரணம் தெறித்து, முடியிலிருந்த மணியுடன் கங்கை நீரில் விழுந்ததாம். இதனால் இந்த கட்டத்திற்கு 'மணிகர்ணிகா' என்ற பெயர் ஏற்பட்டது. பார்வதிதேவியின் கர்ணபுஷ்பம், காசி விசுவநாதரின் மணி இரண்டும் சங்கமமான கட்டம் என்பதால் கூட இக்கட்டத்திற்கு இப்பெயர் ஏற்பட்டது. இங்கு நீராடிய பிறகு சக்கர தீர்த்தத்தில் நீராடினால் முக்தி கிடைக்கும் என்பது ஒரு நம்பிக்கை.

காசிக்குச் செல்பவர்கள் முக்கியமாக செய்ய வேண்டியவை சில. முதலாவது கங்கையில் நீராடி பித்ரு காரியங்களைச் செய்வது. இரண்டாவது காசியில் உள்ள முக்கியமான ஆலயங்களைத் தரிசிப்பது. மூன்றாவது காசியில் முக்கியமான சில பூஜைகளை செய்து தானங்களைக் கொடுப்பது. அதன் பிறகு கங்கைநீர், காசிக்கயிறு போன்ற சிறந்த பிரசாதங்களை எடுத்துச் செல்வது. காசி அன்னபூரணி சர்வேஸ்வரனுக்கு அன்னம் வழங்கிய க்ஷேத்திரம். அதனால் இங்கு உள்ள ஏழை எளியோருக்கு அன்னதானம் செய்வது மிக விசேஷம். பசுவைக் கொண்டு வந்து கட்டி அதற்குப் பூஜை செய்வித்த பிறகு அந்த பசுவையே தானம் செய்யும் கோபூஜை மிகவும் விசேஷம். தம்பதியர் இருவரை அமரச் செய்து, அவர்களை ஈஸ்வரனாகவும், தேவியாகவும் பாவித்து பூஜை செய்து, பொருட்களை தானம் செய்யும் தம்பதி பூஜையும் மிகவும் விசேஷமானதாகும். தவிர கங்கா தேவிக்கு பூஜை, கன்யா பூஜை, சுவாஸினி பூஜை போன்றவையும் நேர்த்தியாக நடக்கின்றன. தானத்தில் கோதானம், அன்னதானம் தவிர தசதானம், வஸ்திரதானம், சாளக்கிராம தானம் ஆகியவை குறிப்பிடத்தக்கவை.

ஐந்தாறு நாட்கள் காசியில் தங்கி புனிதமான எண்ணங்களில் திளைத்து, கங்கையில் நீராடி, பித்ரு கடன்களைச் செய்து பூஜைகள், தானங்களைச் செய்து இறைவனையும் தரிசித்துப் பெறும், அனுபவம் ஒரு மனிதனின் வாழ்க்கையில் அலாதியானது.

காசியிலிருந்து மூன்றாவதாக இந்துக்களுக்கு மிகவும் புனிதமான ஸ்தலமாக விளங்கும் கயாவிற்கு சென்று சிராத்தம் செய்து முடிக்க வேண்டும். இவ்வாறு முதலில் பிரயாகை, அடுத்தது காசி, மூன்றாவதாக கயாவிற்கு வந்து சிராத்தம் செய்து முடிப்பதன் காரணமென்ன? இல்லங்களில்

மூதாதையருக்குத் திதி கொடுக்கும் போது 'அட்சயவடம்' என்ற சொல் குறிப்பிடப்படுகிறது. அக்ரம், மத்யம், மூலம் என்றும் கூறப்படுகிறது. அட்சயவடம் என்ற ஆலமரம் கயாவில் காணப்படுகிறது. இந்த ஆலமரத்தின் மூலம் வேர் பிரயாகையில் இருக்கிறது. நடுப்பாகம் மத்யம் காசியில் உள்ளது. நுனிப்பாகம் அக்ரம் கயாவில் உள்ளது. இந்த மூன்று ஸ்தலங்களையும் இந்த ஆலமரம் இணைத்து வைக்கிறது.

ஆத்மரிணம், தேவரிணம், பித்ருரிணம் ஆகிய மூன்று கடன்களுடன் நாம் பிறக்கிறோம். அவற்றை அகற்றினால் தான் முக்தி பெறலாம். பிரயாகையில் ஆத்மரிணமும், காசியில் தேவரிணமும், கயாவில் பித்ருரிணமும் அகலுவதாக நமது சாஸ்திரங்கள் கூறுகின்றன. எனவே தான் புண்ணியமான இந்த யாத்திரையில் இந்த மூன்று இடங்களும் முக்கிய இடங்களை வகிக்கின்றன.

கயாவில் சிராத்தம் செய்வதில் அப்படி என்ன விசேஷம்? இதன் பின்னணியில் ஒரு கதை நிலவுகிறது.

பிரம்மா உலகத்தைச் சிருஷ்டிக்கும்போது கயாசுரன் என்ற மானஸபுத்திரனையும் உருவாக்கினார். பிரம்மனின் அருள் பெற்ற அந்த அசுரன் அசாத்திய பலமும், புத்திகூர்மையும் பெற்று விளங்கினான். கடவுளை வேண்டி அவன் கோலாகல மலையில் அமர்ந்து தவம் செய்யத் தொடங்கினான். அவனுடைய தவத்தின் வலிமையினால் அஞ்சி தேவர்கள் பிரம்மனை நாடினர். பிரம்மன் ஈசனை நாட, இருவரும் மகாவிஷ்ணுவிடம் சென்றார். கயாசுரனிடமிருந்து தங்களைக் காப்பாற்றும்படி வேண்டவே, கயாசுரனுக்கு முன் மகாவிஷ்ணு தோன்றி, 'உனக்கு வேண்டிய வரத்தைக் கேள்' என்றார். காயசுரன், என் உடலைத் தொட்டவர்கள் அனைவரும் சொர்க்கம் போய்ச் சேர வேண்டும் என்று

வேண்டினான். மகாவிஷ்ணு வரத்தை அருளவே, விபரீத பலனாக நல்லவர் கெட்டவர் யாராயிருப்பினும் கயாசுரன் மீது பட்டு சொர்க்கம் அடைந்தனர்.

மறுபடியும் அனைவரும் மகாவிஷ்ணுவிடம் சரணடைந்து, நிலைமையை எடுத்துக்கூறி கயாசுரனை ஒரு நிலையில் அசையாமலிருக்கும்படிச் செய்ய வேண்டினர். மகாவிஷ்ணு அவர்களிடம் கயாசுரன் தவவிரதம் செய்து புண்ணியம் செய்தவன். அவனை ஒரு புண்ணிய காரியத்திற்கே பயன்படுத்த வேண்டும். அவனுடைய உடலை ஒரு நிலையில் வைத்து, அதன் மீது யாகம் நடத்த வேண்டும் என்று அவனிடம் வேண்டிக் கொள்ளுங்கள். பிறகு ஆக வேண்டியதை நான் பார்த்துக் கொள்கிறேன் என்றார்.

கயாசுரன், வேண்டுகோளுக்கிணங்க காலை தென்புறம் நீட்டி வைத்துப் படுத்துக் கொண்டான். பிரம்மாண்டமான அவன் உடல் மீது முனிவர்கள் யாகம் செய்யத் தொடங்கினர். அக்னியின் சூடு அவனை பாதிக்கவில்லை. யாகம் முடியப் போகும் போது கயாசுரன் எழுந்திருக்க முயன்றான். அவன் எழுந்திருக்க முடியாதபடி செய்ய எமதர்மராஜனை அழைத்தனர். எமதர்ம ராஜனின் மகள் தர்மவிரதை தவமிருந்து பிரம்மாவின் மகன் மரீசியை மணந்தாள். மனைவி தனக்கு பணிவிடை செய்வதில் குறை கண்டு மரீசி அவளை கல்லாக்கினான். மனம் வருந்திய அவள், தெய்வங்களிடம், என் மீது யார் ஒருவன் பிண்டதானம் செய்கிறானோ, அவனது மூதாதையர் நற்கதி அடைய வேண்டும் என்று வேண்டிக் கொண்டாள். அப்படி ஒரு வரத்தைப் பெற்றிருந்த தனது மகள் தர்மவிரதையின் சிலையை எமதர்மராஜன், கயாசுரன் மீது வைத்தும் அசுரனை அடக்க முடியவில்லை. அப்போது மகாவிஷ்ணு, ஆதிகதாதரராக எழுந்தருளி, கயாசுரனின் சிரசில் தமது

பாதத்தை வைத்து அழுத்தி, அவனைப் பாதாள லோகத்திற்குத் தள்ளிவிட்டார். விஷ்ணு பாதம் பட்டதால் கயாசுரன் புனிதமாகி, விஷ்ணுவிடம் வரம் ஒன்று கேட்டான்.

சுவாமி உலகில் மகனாகப் பிறந்தவன் பெற்றோர் உயிருடன் இருக்கும் வரை அவர்கள் மனம் கோணாமல் நடக்க வேண்டும். பெற்றோர் காலமான பிறகு அவர்களுக்கு திதி கொடுத்து அன்னதானம் செய்ய வேண்டும். முக்கியமாக என் பெயரைக் கூறி சிராத்தம் செய்ய வேண்டும். என் சரீரமாகிய இந்த இடத்திற்கு வந்து, பல்குனி நதி, விஷ்ணு பாதம், அட்சய வடம் ஆகிய மூன்று முக்கிய இடங்களில் திதி கொடுத்தால், அவனது மூதாதையர் நேரே வைகுண்ட பதவி அடைய வேண்டி அருள் புரியுங்கள் என்று கயாசுரன் பிரார்த்தித்தான்.

அதன்படி கயாசுரனின் உடலான கயா புனிதஸ்தலமாக விளங்குகிறது. கயாவில் அஷ்டகயா என்று நாற்பத்தி எட்டு இடங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. அங்கு பிண்டம் போடுவது விசேஷம். ஆனால் இவ்வாறு செய்ய குறைந்தது பத்து நாட்களாவது கயாவில் தங்க வேண்டும். இது முடியாதவர்கள் பல்குனி நதி, விஷ்ணு பாதம் ஆகிய இடங்களில் இரண்ய சிராத்தம், அட்சயவடத்தில் அன்ன சிராத்தமும் செய்ய வேண்டும்.

விஷ்ணு பாதர் கோயிலில் பிண்டம் வைத்து சிராத்தம் செய்ய வேண்டும். பொதுவாக சிராத்தத்தில் பெற்றோர்க்கும், மூதாதையருக்கும் தான் செய்வது வழக்கம். ஆனால் இங்கு தாய் வழியில், தந்தை வழியிலும் இறந்து போனவர்கள், துர்மரணமடைந்தவர்கள், விபத்தில் இறந்தவர்கள், தாய்க்கு ஏற்பட்ட குறைப்பிரசவம் என பலவகையினருக்கும் சிராத்தம் செய்யப்படுகிறது. மொத்தம் பதினேழு பிண்டங்கள் தந்தை - தாய் வழியினருக்கும், அறுபத்திநான்கு

பிண்டங்கள் அவர்களைச் சார்ந்த பிற உறவினருக்கும் எடுத்துச் சென்று மந்திரங்களைக் கூறி விஷ்ணு பாதத்தில் சமர்ப்பிக்கின்றனர்.

விஷ்ணு பாதம் என்பது சுமார் ஒரு அடி நீளத்துக்கு அமைந்துள்ளது. இதைச் சுற்றி எண்கோணமாக பித்தளையினால் சுவர் கட்டப்பட்டுள்ளது. பிண்டங்களை பசுக்களுக்கு அளிக்கின்றனர். ஆலயத்தில் கதாதரர் வடிவில் மகாவிஷ்ணுவை தரிசிக்கலாம்.

விஷ்ணு பாதம் தரிசித்து பிறகு அட்சயவடம் ஆலய விருட்சத்திற்குச் செல்வார்கள். இந்த விருட்சம் உயரமான அமைப்பு ஒன்றின் மீது இருப்பதால் படிக்கட்டுகளில் ஏறிப்போக வேண்டும். அட்சயவடம் மரத்திற்கு அடியில் விக்கிரகங்கள் இருக்கின்றன. மரத்தை வலம் வந்து அதனடியில் அமர்ந்து காரியங்களைச் செய்ய வேண்டும். இந்த புனித யாத்திரையை மேற்கொண்டவர்கள் காமம், குரோதம், மோகம் ஆகிய மூன்று பற்றுகளை விற்று விட்டதன் அடையாளமாக ஒரு பூ, ஒரு காய், ஒரு கனி ஆகியவற்றை மந்திரத்தைச் சொல்லி இங்கு துறந்து விடுவார்கள். பிறகு அவற்றை அவர்களது வாழ்நாளில் பயன்படுத்தக் கூடாது.

இந்துக்களுக்கு கயா புனிதமானது போல, பௌத்த மதத்தினருக்கும் இந்த ஸ்தலம் மிக முக்கியமானது. கயாவில் உள்ள போதி மரத்தினடியில் தான் புத்த பிரானுக்கு ஞானோதயம் ஏற்பட்டது. இந்த போதி மரம் புத்த கயா என்ற இடத்தில் உள்ளது. இதனருகே பெரிய அளவில் புத்தர் கோயில் அமைந்துள்ளது.

பிரயாகையில் திரிவேணி, காசியில் கங்கை, கயாவில் பல்குனி ஆகிய புண்ணிய நதிகளில் நீராடி பெரியோர் கூறியபடி, சிரத்தையுடன் அவர்களின் முக்திக்காக வேண்டி,

பித்ரு கடன்களைச் செய்து, அட்சயவடம், விஷ்ணு பாதம் ஆகியவற்றையும் சரணடைந்தால், அவனை மகனாகப் பெற்ற பெற்றோர், மோட்ச கதியடைந்து, அவன் குடும்பத்தாரை ஆசீர்வதிப்பார்கள் என்பதில் ஐயமேதும் உண்டோ!

நன்றி: ஒளிவிடும் ஞானச்சுடர் ஏப்ரல் 1999

●

# இந்து தர்ம பரிபாலன டிரஸ்ட்

## அமைப்பும் அதன் தொண்டுகளும்

'இந்து தர்ம பரிபாலன டிரஸ்ட்' என்ற அமைப்பு சென்னை பெசண்ட் நகரில், கடந்த 1995ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் முதல் இயங்கி வருகிறது.

இதன் அலுவலகம் பெசண்ட் நகர் - மூன்றாவது அவென்யூ, E-96ஏ என்ற எண்ணில் ஸ்ரீவரசித்தி விநாயகர் ஆலயத்தின் பின்புறம் அமைந்துள்ள தனலக்ஷ்மி ராமநாத நாயுடு ஹாலில் இயங்கி வருகிறது.

இந்த டிரஸ்ட் கீழ்க்காணும் சமூக - சமயத் தொண்டுகளில் ஈடுபட்டு வருகிறது.

அ. வேதங்களைக் கற்பது குறித்த கல்விக்கு உதவுவது.

ஆ. சமயம் பற்றிய பயனுள்ள கருத்துக்களை பரப்புவது.

இ. ஏழை எளியவர்களுக்கு மருத்துவ உதவி.

ஈ. உயிர் நீத்தார் இறுதிச்சடங்குகளுக்கு உதவுவது.

உ. ஏழை எளியவர்களுக்குத் திருமணம் புரிய உதவுவது.

ஊ. சமய நற்பணிகள், பூஜைகள் ஆகியவற்றை நடத்த உதவுவது.

எ. ஆன்மிக - சமயநெறிக் கொள்கைகளைப் பாதுகாக்கவும், உரிய கலாச்சாரத்தைப் பரப்பவும் உதவுவது.

ஏ. இசை, நடனம், நாடகம் ஆகிய கலைகளை வளர்ப்பது;

ஐ. சமய நெறி சார்ந்த இலக்கியப் பேருரைகளை ஏற்பாடு செய்வது;

ஒ. மற்றும் சமூக வளர்ச்சிக்கு உதவும் பொது மக்களுக்குரிய நற்பணிகளில் பங்கெடுத்து சேவை செய்வது.

இவை எந்தவித இலாப நோக்கமும் இன்றிப் பொதுமக்களின் நன்மையையும் நல்வாழ்வையும் கருத்திற்கொண்டு செயல்படுகிறது. இந்த சேவை இந்தியாவில் எப்பகுதியிலும் நடத்தப்படலாம். இது ஜாதி, மத, இன, வேறுபாடுகளின் எல்லைகளுக்கு உட்படாமல் மனித சமுதாயத்துக்கு உதவும் நல்ல நோக்கத்துடன் பணியாற்ற முன்வந்துள்ளது.

இந்த அமைப்பின் உறுப்பினர்களாகப் பங்கேற்றுப் பணிபுரிபவர்கள் வருமாறு:

1. திரு. ஆர்.இராமநாதநாயுடு (தலைவர்)
2. திரு. வி.ஸ்ரீனிவாஸன் (செயலர்)
3. திரு. டி.பலராமமூர்த்தி நாயுடு
4. திரு கே.ஏ.இராமகிருஷ்ணன்
5. திரு. ஆர்.கணேசன்
6. திரு. ஆர்.நாகராஜன்
7. திரு. சி.எஸ்.எஸ்.ராஜன்
8. திரு. வி.எஸ்.சீதாராமன்
9. திரு. டி.எஸ்.சுப்பிரமணியம்
10. திரு. ஏ.இராமச்சந்திரன்

11. திரு. அநுசூயா மாதவராவ்
12. திரு. ஜே.ஜானகிராமன்
13. திரு. கே.எஸ்.திருமலை
14. திரு. வி.இராமகோபால்

இந்து தர்ம பரிபாலன டிரஸ்ட் ஏற்று நடத்தி வரும் இன்னொரு முக்கியமான பணி, சென்னை பெசண்ட் நகரில் முதல் பிரதான சாலையில் அமைத்து நடத்தி வரும் ஸ்ரீசத்ய நாராயணதீர்த்தம் என்ற உயிர்நீத்தார் இறுதிக் கடன்களை உரிய முறையில் செய்ய உதவும் வசதிகள் கொண்ட அமைப்பாகும்.

இதற்காக இந்த டிரஸ்ட் தமிழ்நாடு வீட்டு வசதிவாரியத்திடமிருந்து சுமார் நான்கு கிரவுண்ட் மனையை ரூபாய் 42 லட்சம் செலுத்தி வாங்கி முறைப்படி பதிவு செய்து பணிகளைத் துவக்கியது.

உரிய கிணற்று நீர் வசதி, சுற்றுச்சுவர், பாதுகாப்பான நுழைவாயில் ஆகியவற்றைப் பூர்த்தி செய்து முதற்கட்ட கட்டிட அமைப்பு வேலைகள் செய்யப்பட்டன. தொடர்ந்து இரண்டாவது கட்ட கட்டிட அமைப்பு வேலைகளும் முடிந்து, இப்போது பத்தாவது நாள் காரியம் வரையில் இறுதிக் கடன்களைத் தனியாகச் செய்யவும், தொடர்ந்து பதினொன்று, பன்னிரண்டாவது நாட்களுக்குரிய காரியங்களைத் தனியாகச் செய்யவும் இரண்டு கட்டிட அமைப்புகள் முடிவடைந்து நல்ல முறையில் இயங்கி வருகின்றன.

இதில் குறிப்பிடப்பட வேண்டிய முக்கிய அம்சங்கள், கீழ்க்காணும் விதத்தில் அமைக்கப்பட்டிருப்பதாகும்.

முதல்நாள் முதல் பத்தாம்நாள் வரையில் ஆறு குடும்பத்தினர் தனித்தனியே இறுதிக் கடன்களைச் செய்யவும்,

சமையல், குளியல், கழிப்பறை, கூட வருபவர் உட்கார தனி வராந்தா, மழை பெய்தாலும் நனையாத அமைப்பு, மின்சார வசதி ஆகியவற்றுடன் அளிக்கப்பட்டுள்ளது. எல்லா இடங்களிலும் சிமெண்ட் தளத்துடன் கூடிய வடிகால் வசதி பொருந்திய கட்டிட அமைப்பு இருப்பதால் காரியங்கள் நடைபெறுவதற்குரிய சுத்தமும் தூய்மையும் காக்கப்படுகின்றன. வெளியிலிருந்து வசதிக்காக வேறு எதையும் கொண்டு வராமல் காரியங்களைச் செய்ய முடியும்.

பதினொன்று, பன்னிரண்டாவது நாள் (ஏகோதிஷ்டம், சமண்டீகரணம்) காரியங்களை எட்டு குடும்பத்தினர் ஒரே சமயத்தில் தனித்தனியே செய்யக்கூடிய அமைப்பு இரண்டாவது நிலையாகத் தனியே கொடுக்கப்பட்டுள்ளது. காரியங்களைச் செய்யவும், சமையல் அறை, வருபவர் உட்கார வசதி, மின்வசதி, குடிநீர் வசதி ஆகியவற்றுடன் அமைக்கப்பட்டுள்ள இப்பகுதியில் காரியங்களைச் சுத்தமான சூழ்நிலையில் கிரமப்படி செய்ய வசதி அளிக்கப்பட்டுள்ளது.

மேற்கூறிய இந்த இரண்டு பகுதிகளும் இப்போது முழு அளவில் இயங்கி வருகின்றன. தேவையானவர்கள் முறைப்படி பதிவு செய்து கொண்டு, காரியங்களை உரிய புரோகிதர்களின் துணையுடன் நன்கு செய்து வருகிறார்கள்.

மூன்றாவது கட்டப் பணி இப்போது தொடங்கப்பட்டு நடைபெற்று வருகிறது. இது நித்ய விதி இரண்டாவது நிலைக்கட்டிடத்துக்கு முன்னால் அமைக்கப்படுகிறது. தீட்டுப் படாமல் கிணற்றடியில் நல்ல தண்ணீரை எடுத்து, ஆசாரமாக சுபஸ்வீகரண (13ம் நாள்) காரியங்களைச் செய்ய இங்கு வசதி உண்டு.

இங்கு அமர்ந்து சாப்பிட வசதியும், சமையல் செய்துபோட நவீன வசதிகளும், தனிப்பட்ட் சமையலறையுடன் அமைக்கப்பட உள்ளன. பத்தாம்

நாளன்று வரும் நண்பர்கள் அமர்ந்து சாப்பிடவும் இங்கே வசதி உண்டு.

இந்த முன்புறப் பகுதியில் பதிவு செய்து கொள்ள அலுவலக அறை, அமர்ந்து கவனிக்க இருக்கைகள், ஸ்டோர் அறை இந்த அமைப்பை நிர்வாகம் செய்யும் டைரக்டர்கள் கூடி விவாதிக்க ஹால் போன்ற வசதிகள் இருக்கும். டெலிபோன், விளக்கு, மின் விசிறி வசதிகளும் கழிப்பறை வசதிகளும் இணைக்கப்படும்.

இப்பகுதியில் முதல் மாடியில் வருபவர்கள் தங்கவும் வசதிகள் அமைக்கப்படும். இப்பகுதியில் தீட்டுப் படாமல் காரியங்கள் செய்ய எல்லா ஜாதியினருக்குமே வசதிகள் செய்து கொடுக்கப்படும். தீட்டு இல்லாதவர்கள் வந்து மந்திர, ஜப காரியங்கள் செய்ய இயலும்.

இந்த அமைப்புக்கு முன்னால் பசுமையான புல்வெளியும், மரங்களும் கொண்ட முன் வாயில் அமைக்கப்படும்.

இதை ஒட்டி தீட்டு இல்லாதவர்களும், தீட்டு உள்ளவர்களும் தனித்தனியே உட்பகுதிகளுக்குச் செல்ல, பிரத்யேக வாயில்கள் கதவுகள் கூடிய பாதுகாப்பு அமைப்புடன் நிறுவப்படும்.

முன்புறம் உள்ள பிரதான வாயில் தீட்டு இல்லாதவர்கள் மட்டும் சென்றுவர உபயோகப்படும் விதத்தில் அமைக்கப்படும். இப்படி மூன்று வாயில்கள் தனித்தனியே, அவரவர் உபயோகத்துக்கு ஏற்றவாறு அமைக்கப்படுவதால் தீட்டு கலக்காமல் பாதுகாப்பு அமைவது இதன் சிறப்பு அம்சமாகும்.

இதை ஒட்டி பக்க அமைப்பில் வருடாந்திர சிராத்தம் செய்து கொள்ளவும், தீட்டு இல்லாதவர்கள் மேலே சென்று புழங்கத் தனியான ஹாலும் அமைக்கப்பட உள்ளது.

இந்து தர்ம பரிபாலன டிரஸ்ட் அமைத்துள்ள இந்த வசதி பொதுமக்கள் ஆதரவுடனும், நன்கொடையுடனும் குறுகிய காலத்தில் சீராக அமைக்கப்பட்டு, கட்டி முடிக்கப்பட்டு, காரியங்களும் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன.

தொடர்ந்து இந்தத் திட்டம் முழுமையாக நிறைவேறி சமூகத்தில் உள்ள எல்லா அன்பர்களுக்குப் பயன் அளிக்கும் வகையில் இயங்க வேண்டும் என்று இந்த டிரஸ்ட் அமைப்பின் சார்பில் நான் இறைவனை வேண்டிக்கொண்டு, இந்தக் காரியங்களை உரிய முறையில் செய்வதற்குப் பயன்படும் இந்த நடைமுறை நூலைச் சமர்ப்பிக்கிறேன்.

**வி.ஸ்ரீநிவாசன்**

செயலர் - அறங்காவலர்

## சத்யநாராயணதீர்த்தத்தின் விலாசம்:

**எண்: 9, I, மெயின் சாலை,**
**பெசண்ட் நகர்,**
**தொலைபேசி: 24915544**

## அலுவலகம் செயல்படும் நேரம்:

**காலை 6.30 முதல் 12.00 வரை**

**மாலை 4.00 முதல் 6.30 வரை**

**(மற்ற விவரங்களை இந்த இடத்தில் இப்போது இயங்கி வரும் அலுவலகத்தில் கேட்டுக் கொள்ளலாம்.)**

